# அன்பொடு புணர்ந்த ஐந்திணை

– சங்கப் பாடல்கள் –

## மருதம்

தொகை - வகை - உரை

*இலக்கிய வல்லுநர்*

புலவர் த. கோவேந்தன்

**வேமன் பதிப்பகம்**

19, நியூ காலனி - சோசியர் தெரு,

நுங்கம்பாக்கம்

சென்னை - 600 034

## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | அன்பொடு புணர்ந்த ஐந்திணை |
| ஆசிரியர் | : | த. கோவேந்தன் |
| பதிப்பு | : | 24.08.2002 |
| பொருள் | : | சங்க இலக்கியம் - குறிஞ்சி |
| அளவு | : | 1 X 8 தெம்மி |
| எழுத்து | : | 11 புள்ளி |
| கட்டமைப்பு | : | சாதா அட்டைக் கட்டு |
| விலை | : | ரூ. **73.00** |
| பக்கங்கள் | : | 318 |
| வெளியீடு | : | வேமன் பதிப்பகம்<br>19, நியூ காலனி, சோசியர் தெரு<br>சென்னை - 34<br>தொலைபேசி : 28211134 |
| ஒளியச்சு | : | அன்பு - சகுராம் கிராபிக்ஸ்<br>சென்னை - 24<br>தொலைபேசி : 24727236 |
| மறுதோன்றி | : | ரவிராஜா ஆப்செட்<br>சென்னை - 14 |

# அன்பொடு புணர்ந்த ஐந்திணை



தொல்பழங்கால நாகரிக நாடுகளில் தமிழகம் தலைசிறந்த ஒன்றாகும். சீனமும் தமிழும்தான் இன்றும் உயிர்ப்போடு உள்ளன. தமிழிலக்கிய வரலாறு மிகமிகத் தொன்மையானது. கி.மு. 3000-த்திலிருந்து கி.பி. 300 வரை பரப்புக்குட்பட்டது. நாகரிக முதிர்ச்சியிலும் பண்பாட்டு நிலையிலும் இயற்கையோடியைந்த காலங்கள் முச்சங்கங்கள் நிலவின காலம்.

ஈராயிரமாண்டு காலப் புலமைச் சான்றோர்களின் பாடல்களைக் கடற்கோளுக்கும் வந்தேறிகளின் அழிவுக்கும் பின்னும் அகம் என்றும் புறம் என்று தொகுக்கப்பட்டன. அவை:

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று
இத் திறத்து எட்டுத் தொகை.

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய
கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி, பட்டினப்
பாலை கடாத்தொடு பத்து

பாட்டும் தொகையுமாகப் பாடினோர் ஒருகாலத்தவர், ஒரு நாட்டவர் அல்லர் ஓர் ஊரினர் அல்லர்.. குமரி முதல் வடவேங்கடம் வரை பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள்.

இன்று நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் தொகை - பாட்டு நூற்படி மொத்தம் 2279 ஆகும். அகம் புறம் இரண்டும் பாடிய சங்கச் சான்றோர்கள் 238 பேர் ஆவர். மொத்தப் பாடல்களில் 102 புலவர்களின் பெயர் தெரியவில்லை. இவர்களை நீக்கிப் பெயர் தெரிந்தவர்கள் 472 பேர் ஆவர்.

அகப் பாடல்கள் அடி எல்லையைக் கொண்டும் பாவகையைக் கொண்டும் தொகுக்கப் பெற்றவை. ஐங்குறுநூறு 500; குறுந்தொகை 401; நற்றிணை 400; கலித்தொகை 149; பரிபாடல் 8; பத்துப்பாட்டு 4 - ஆக 1862 பாடல்கள் அகத்திணை வாழ்வு பற்றியவை.

இயற்கை நெறிக்காலமாகிய சங்ககால ஆண் பெண் அன்புறவு நட்பில் மலர்ந்து தோழமையில் தோய்ந்து காதலில் இன்புற்று அறநெறி தவறா ஒழுக்க வாழ்வாகும். நானிலத்தின் பாகுபாட்டோடு வாழ்ந்த தமிழினத்தினர் களவில் தொடங்கி கற்புடை இல்லறவாழ்வில் இனிது வாழ்ந்தனர். வாழ்வோடும் நிலைத்தணை இயங்குதிணையோடும் இரண்டறக் கலந்து துய்த்தனர்.

தோழர் தங்கப்பா கூறுவதுபோல "பாலுறவு அதன் முழுமையான பயனையும் நுண்சுவையினையும் நல்குவது அன்பு நிலையில்தான். ஒருவரில் ஒருவர் உண்மை அன்பு பூண்ட ஆணும் பெண்ணும் தம்முள் கூடி வாழும் வாழ்வில்தான் பாலுறவு வாழ்வின் மலர்ச்சிக்குத் துணை புரிகிறது" என்கிறார். இதனின் மணிச்சுருக்கம் தான் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்பதும் - 'மலரினும் மெல்லியது காமம், சிலர் அதன் செவ்வி தலைபடுவார்' என்பதுமாகும்.

பிற உயிர்களிடத்தும் ஆண்பெண் அன்புறவு உள்ளதெனினும் அஃது இயற்கையின் இயல்பூக்க உணர்ச்சியே தவிர, மனமலர்ச்சியின் பேரின்பம் நுகரவில்லை. அதனால் தான் தொல்காப்பியன்,

'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்'

என்றான். இந் நூற்பாவின் பொருள் உயர்திணை மாந்தர்க்கு மட்டுமின்றி பிற உயிரினங்கட்கும் பொருந்தும். அஃறிணைகள் மொழியைப் படைக்கத் தெரியாததால் தம்தம் இன்ப உணர்வுகளை வெளிப்படுத்த முடியவில்லை. மாந்தன் உணர்ந்ததை உணர்த்தும் படைப்பாற்றல் உள்ளவன். ஆதலால் மொழி முதல் உளிவரை உள்ளது சிறக்கும் மனத்தறிவால் உணர்ச்சி வெளிப்பாட்டினை மொழியில் வெளிப் படுத்தியவையே இலக்கியங்கள். இதில் அகமும் புறமும் அடங்கும்.

தமிழர் வாழ்விலும் சங்க இலக்கியங்களிலும் 'அன்பொடு புணர்ந்த ஐந்திணைதான் உண்டே தவிர தொல்காப்பியன் கூறும் கைக்கிளையும் பெருந்திணையும் தமிழர் வாழ்விலே இல்லை. இவ் இரண்டும் ஆரியர்களின் அழிம்பு நிலைகள். எனவே தான் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வகுத்தனர். இப் பாகுபாடு அறிவியலுக்கும் சமூக மனவியலுக்கும் பொருத்தமானவை.

எந்தையர் வே.மு. தங்கவேலனார் தமிழ், தெலுங்கு சமற்கிருதம் ஆகிய மும் மொழிகளில் வல்லுநராய் இருந்தும் சங்க இலக்கியங்கள்

கற்றிருந்தாலும் சைவ சமயத்தவராகவே வாழ்ந்ததாலும் என் கல்வி விட்டு விட்டுத் தொடர்ந்ததால் எட்டாம் வகுப்பு படிக்கையில் தான் சங்க நூல்கள் அறிமுகமாயின. காரணம் 'செந்தமிழ்ச் செல்வி' 'தமிழ்ப் பொழில்' வீட்டுக்கு வந்தன. பாடநூல்களிலும் சங்கப்பாடல்கள் பாடப்பகுதியில் வந்திருந்தன. இவற்றுக்கும் மேலாய் வேலூர் கு.மு. அண்ணல்தங்கோவின் மாணவர் படையின் தலைவனாய் இருந்ததால் 40-50-களில் நடந்த தைப் பொங்கலின் ஒரு வார விழாவில் அக் காலத்தில் சிறந்தோங்கி யிருந்த பல பெருபுலமைச் சான்றோர்களின் சொற்பொழிவுகளாலும் அவர் களுக்குத் தொண்டு செய்தபோது பெற்ற செவிச் செல்வமும் செழுந்தமிழ் நூற்படிப்பும் என்னை மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வில் புகுத்தியது. பாவேந்தர் தொடர்பும் அறிவுரையும் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், சமய இலக்கியங்கள் சிற்றிலக்கியங்கள் பாரதி - பாரதிதாசன் ச.சு. சோமசுந்தர பாரதி, வெள்ளை வராணனார், வேங்கட ராமையா, மயிலை வேங்கடசாமி, ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு, பெரும்புலவர் வேணு கோபால நாய்கர் - பாலசுந்தர நாய்க்கர், உரைவேந்தர் அவ்வை சு. துரை சாமி பிள்ளை, மு.வ. போன்ற பலரின் தொடர்பும் என்னைப் பிற இலக்கியங்களிலிருந்து சங்க இலக்கியத்தில் மேலும் மேலும் தோயச் செய்தன. 1957-இல் தோழர் தங்கப்பாவின் நட்பு சங்க இலக்கிய ஐந்தருவி யில் திளைத்தின்புறச் செய்தது.

சென்னை வாழ்க்கை என்னைப் பிறர்க்கெழுதிப் பலர் பேரும் புகழும் பட்டமும் பெற முன்னிறுத்தியது. என் வாழ்க்கைக்குரிய வருவாய் அதில் வந்தது. அப்பொழுது சங்க ஆய்வுக் களத்தில் மருதம் பற்றி ஆய்வு செய்தேன். அதற்கு முன்பே அகப்பொருள் நூல்கள் எவையும் ஏனோ குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் - பாகுபாடு நூலுக்கு நூல் வேறுபட்டிருப்பதை அறிந்து தெரிந்திருந்த எனக்கு அகப் பொருள் பாடல்கள் அனைத்தையும் இப் பாகுபாட்டில் பிரிக்க வேண்டும் என்ற உந்தாற்றல் என் மனப் பண்ணையில் உயிர்த்தெழுந்தது.

தொகை நூல்களில் முதன்முதல் தொகுக்கப்பட்டது குறுந்தொகையும் அடுத்து நற்றிணையும் ஆகும். எனவே இரு நூல்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் பாடல்கள் காவனத்தில் உலாவும் பல்வகை அஞ்சிறைத்தும்பிகளாக முறையின்றி ஊடுருவியுள்ளன. அரிமா நோக்காத நற்றிணையில் ஒவ்வொரு பத்தாம் பாட்டும் பல மருதத்திணையாகிறது. பின்னர் தொகுக்கப்பட்ட ஐங்குறுநூறு மருதம் - நெய்தல் - குறிஞ்சி

பாலை - முல்லை என்று கார்கானாற்றாய்த் திசைமாறி சிறகுகின்றன. அக நானூற்றிலோ களிற்றுயானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை யென முப் பிரிவாகி ஒற்றை எண் 1, 3, 5, 7, 9 எனப் பாலைப் பாடல்களும் 4, 14, 24, 34 என 4 - இல் முடியும் முல்லைப் பாடல்களும், 6, 16, 26, 36 என 6-இல் முடியும் பாடல்கள் மருதப் பாடல்களாகவும், 10, 20, 30, 40 - எண் பாடல்கள் நெய்தலாகவும் எண் அடிப்படையில் கலம்பகமாகவே உள்ளன. பிற்கால நூலான கலைத்தொகையோ பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் எனப் பூமஞ்சரியாக விளங்குகின்றன.

சங்க நூல்களைப் பதிப்பித்த அறிஞர் பெருந்தகைகளும் நூலாராய்ச்சி வல்லுநர்களும் இம் முறை மாறி நிற்பவற்றை ஏனோ எண்ணவில்லை. பேராசிரியர் சு. வையாபுரிப் பிள்ளை துணிந்து சங்கப் பாக்களை ஆசிரியர் அகவரிசையில் முறைப்படுத்தியது போல - சீரிய கூரிய செம்மொழி அறிஞர் பேரா. வ. சுப. மாணிக்கனார் தம் முனைவர் ஆய்வேடான 'தமிழ்க் காதல்' ஏட்டில் இம் முறை மாற்றம் பற்றிச் சுட்டிக் காட்டியது பற்றி நேரில் வினவுகையில் நீங்கள் முறைப்படுத்துங்களேன் என்று 1962-லேயே என்னிடம் கூறினார். அவ் வகையில் என்னை முழுமையாகச் செயல்படச் செய்தவர் தோழர் ம. இல. தங்கப்பா.

ஒவ்வொரு திணைக்கும் நூற்பெயர் - ஆசிரியர் பெயர் பாட்டின் கீழ் தந்துள்ளேன். முதலில் வரிசை எண்ணும் ஒவ்வொரு திணைக்கும் தனித்துத் தந்துள்ளேன். பாடல் ஆசிரியர் பெயர் தெரியாதவிடத்து பாட்டுக்கடியில் உவமையாலோ அருந்தொடராலோ பாடினார் பெயர் சூட்டாமல் 'பாடினார்?' என்று வினாக்குறி இட்டுள்ளேன். நற்றிணையில் மட்டுமே பாடினார் பெயர் தெரியாத பாடல்கள் மிக்குள்ளன.

நெடுநாளைய என் திட்டத்தை செயல்படுத்தப் போய் நான் இழந்த பேரிழப்பைச் சொல்லி மாளாது. அதாவது என் அன்புக்குரிய தோழர் தங்கப்பாவுடன் மடல் தொடர்புகளை இழந்தேன். இப் பணியில் ஒரு வெறியனைப் போல் இருந்ததால் அவரிடமிருந்து ஆறுமடல்களை இழந்தேன். இது ஒரு தனி மாந்தனுக்கு ஏற்பட்ட இழப்பன்று. தமிழுக்கும் நாட்டிற்கும் உலகுக்கும் ஏற்பட்ட இழப்பாகும். அவ்விழப்பை என் தொகை வகை - உரைப் பணி ஈடு செய்யுமா என்பது ஐயமே. என் வருவாயையும் இழந்தேன். அது எனக்குப் பேரிழப்பில்லை. நண்பரின் வாழ்வியக்க எண்ணங்களை மடலாகப் பெறாமையே ஈடிலாப் பேரிழப்பு.

என் இவ் இலக்கியப் பணியினை மற்றவரும் வழிகாட்டினால் செய்தல் கூடும். ஆனால், கல்லூரி, பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் தொன்னூற்கஞ்சி தடுமாறுளத்தராயினர். வருவாயோ புகழோ பெறமுடியாத பணியென மடியின் மடியில் மகிழ்பவராய் உள்ளனர். பட்டிமன்ற சொற் பொழிவுத் தொழில் வணிகப் பரத்தராக விளங்கும் இரு மனத்தராகவும், தன்மையே விற்கும் வேடிக்கை மாந்தராகவும் நாளுக்கொரு பேச்சும், வேளைக்கொரு பேச்சு என வலியுருக்கி நோயின் வாயில்களாக வாழ்கின்றனர். எனவே பாடுபட்டுழைக்கும் பண்பிலிகளாயினர்.

இந் நூலைத் தொகை - வகை - உரையுடன் கொண்டு வருவதில் ஓர் ஆர்வமும் அக்கறையும் உண்டு. இதற்கு முன் சங்க இலக்கியத்திற்கு என் உரைகள் வேறு வேறு மாந்தர்களின் பெயரால் வெளிவந்துள்ளன. பெயரிடப் படாமல் மற்றொரு நிறுவனம் அரைகுறையாய் வெளியிட்டது. இரண்டாண்டுகளுக்கு நான் புதுக்கிய உரைகள பணம் தந்தன. ஆனால் இருவர் - மூவர் பெயரில் மலிவு விலையைப் போலவே பிழைகளும் மலிந்து வெளிப்பட்டன. உழைப்புக்குக் கூலி கிடைத்தது. அதற்குரிய பேரும் புகழும் யார் யாரோ உரிமை கொண்டாடினர். அதற்காக நான் வருந்தவில்லை. ஏனெனில் சங்க இலக்கியம் பரவுவதில் எனக்குள்ள ஈடுபாடே காரணம்.

திரை உலகில் பின்னணிப் பாடகர் பெயர் போடப்பட்டாலும் வாய் அசைப்பவரான கதை மாந்தருக்கன்றோ பேரும் புகழும்! பாடு பட்டுப் பயன் விளைவிக்கும் வேளாளரை எவர் நினைக்கின்றனர்? (தேவையும் இல்லை) ஆனால், சிற்றுண்டிப் பேருண்டிச் சாலைகளுக்குத் தானே பெயரும் புகழும். தாயையே மறக்கின்ற உலகத்தில் தந்தையை மறப்பது உலகத்தியற்கைதானே?



அகப் பாடல்கள் அடி மிகமிக முதல் இக உரிப்பொருள்கள் விரி வடைகின்றன. அவையே போல் தமிழ் மன்னர்கள், அவர் தம் மற, அறச் செயல்கள் பிற மாந்தர் செயல்கள் தொழில்கள் வரலாறு நானல் வாழ்க்கை ஆகியவற்றின் குறிப்புகள் மிகுகின்றன.

ஆனால் கலித் தொகையிலோ, ஆரியரின் தொன்மச் செய்தி களும், பாண்டியனைப் பாடலிலுமில்லை குறிக்கப்படுகின்றன. ஆனால் எந்தப் பாண்டியன் என்று ஒரு பத்தியிலுமில்லை. மேலும் மருதத்திலும் வரும் பரத்தையர், ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை,

கலித் தொகையில் பரத்தையர் புனலாடலும், தலைவி ஊடலும், எங்கும் சுட்டப் பெறவில்லை. பரிபாடல் இதில் முதன்மை வகிக்கிறது. பரத்தை யர்கள் பெரும்பாலும் பார்பணத்திகளே என்பது என் ஆய்வின் முடிவு.

கலித் தொகை முல்லைத் திணையில் கொல்ஏறு அடக்குதல் வருகின்றது. ஆனால், பிற சங்க அகநூல்களில் மாடுபிடி போர் இல்லை. இது பிற்காலத் தமிழக வாழ்வில் இணைந்தது போலும். இந் நூலின் திணை வரிசைக்கேற்ப ஆய்வு செய்தால் பெருகும் என்பதனை விடுத்து, இத் தொகை - வகை உரை நூலை முறைப்படுத்துங்கால் என்னை இடையறாது ஆக்கப் பணிக்கு ஊக்குவித்த கலைஞன் பதிப்பகம் திரு. மாசிலாமணி அவர்களுக்கும், ஆங்கில அறிஞர் திரு. சகதீசன் அவர்களுக்கும், என் மகன் சிற்பி கோ. வீரபாண்டியனுக்கும் வெளியீட்டாளர் திரு. வேலாயுதம் அவர் களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. தமிழகம் இப் புதிய வார்ப்பினை ஏற்று பயனடையும் என்பது என் நம்பிக்கை.

சங்கத் தமிழ்ச்சான்றோர் நூற்றொகைத் தந்துவக்கத் தங்கத்தைத் தேடுதல்போல் தம்வாழ்வைத் தாமிழந்து செங்கதிராய்த் தென்தமிழ்ச் செல்வத்தை நானிலத்தில் எங்கும் இருந்தமிழே உன்னால் இருந்தேன். ஓ, தங்கும் உயிர் வானோர் விருந்தமிழ்தம் வேண்டேம்என இங்குழைத் தார்க்கெல்லாம் நன்றி இயம்பிடுவன் பொங்குகடல் வீறலை போல்.

*அன்பன்*

*த. கோவேந்தன்*

*காதலினால் உயிர் தோன்றும் - இங்குக்*
*காதலினால் உயிர் வீரத்தில் ஏறும்;*
*காதலினால் அறிவெய்தும் - இங்குக்*
*காதல் கவிதைப் பயிரை வளர்க்கும்*

*செவ்விது, செவ்விது, பெண்மை - ஆ!*
*செவ்விது செவ்விது செவ்விது காதல்*

- பாரதி



# மருதம்

## ஐங்குறு நூறு

### மன வேட்கை

#### 1. தலைவி இருந்த நிலைமை

'வாழி ஆதன், வாழி அவினி!
நெற்பல பொலிக! பொன் பெரிது சிறக்க!'
என வேட்டோளே யாயே; யாமே,
'நனைய காஞ்சிச் சினைய சிறு மீன்
யாணர் ஊரன் வாழ்க!
பாணனும் வாழ்க!' என வேட்டேமே!

*– ஓரம்போகியார் ஐங்குறு நூறு 1*

*'நாடு காவற் பொருட்டு ஆதன் என்பான் வாழ்க. அவனது மரபிலே தோன்றிய அவினி வாழ்க. நாட்டு வயலில் நெல் மிகுந்து விளைக. பொன் மிக உண்டாகுக' என்று தலைவி இல்லறத்தை எண்ணி ஒழுகினாள். நாங்களோ மலர்களை நிறைய உடைய காஞ்சி மரமும் சினைகளையுடைய சிறு மீன்களும் உடைய ஊரன் வாழ்க. அவனுக்குத் தூதாய் - வரும் பாணனும் வாழ்க என்று விரும்பியிருந்தோம்' என்று தோழி பிரிந்து திரும்பிய தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.*

#### 2. பிறவி தோறும் தொடர்க

'வாழி ஆதன், வாழி அவினி!
விளைக வயலே! வருக இரவலர்!'
என வேட்டோளே, யாயே; யாமே,
'பல் இதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும்
தண் துறை ஊரன் கேண்மை
வழிவழிச் சிறக்க!' என வேட்டேமே.

*– ஐங் 2*

"ஆதன் அவினி வாழ்க! வயல் விளைவு மிகுந்து விளைக. இரவலர் பலரும் வருக என்று இங்ஙனம் இல்லறத்துக்கு வேண்டுவனவற்றையே எண்ணித் தலைவி ஒழுகினாள். அதுவன்றி அவள் வேறு எதனையும் எண்ணவில்லை. யாங்கள் பல இதழ்களையுடைய கருங்குவளையுடன் நெய்தல்கள் ஒப்ப மலரும் குளிர்ந்த துறைகளையுடைய ஊரனின் நட்புப் பிறவி தோறும் இடையறாது சிறப்பதாகுக என்று ஒழுகினோம்" என்று தோழி தலைவனை நோக்கி வேட்புடன் சொன்னாள்.

## 3. மனை வாழ்க்கை பொலிக!

'வாழி ஆதன், வாழி அவினி!
பால் பல ஊறுக! பகடு பல சிறக்க!'
என வேட்டோளே, யாயே; யாமே,
'வித்திய உழவர் நெல்லொடு பெயரும்,
பூக் கஞல் ஊரன் தன் மனை
வாழ்க்கை பொலிக!' என வேட்டேமே. *– ஐங் 3*

தோழி "ஆதன் அவினி வாழ்க. பசுக்கூட்டம் பால் வளம் சுரக்க. எருமைகள் பல மிகுக!" என்று இங்ஙனம் தலைவி இல்லறத்தையே நினைந்து ஒழுகினாள். பின் விளைவு வேண்டி விதைத்தற்குச் சென்ற உழவர் முன்னே விளைந்து நின்ற நெல்லை அறுத்துக் கொண்டு மீள்பவர். இத்தகைய இயல்புடைய ஊரனின் பரத்தையர் மாட்டுக் கொண்ட ஒழுக்கம் நீங்கித் தன் மனையில் இருந்து விளங்குவானாக என்று விரும்பி ஒழுகி வந்தோம்" என்றாள்.

## 4. யாரும் உழுதுண்ணும் கழனியில்லை

'வாழி ஆதன், வாழி அவனி!
பகைவர் புல் ஆர்க! பார்ப்பார் ஓதுக!'
என வேட்டோளே, யாயே; யாமே,
'பூத்த கரும்பின், காய்த்த நெல்லின்,
கழனி ஊரன் மார்பு
பழனம் ஆகற்க' என வேட்டேமே. *– ஐங் 4*

"ஆதன் அவினி வாழ்க! பகைவர் தம் பெருமிதம் இழந்து புல்லரிசிச் சோறு உண்க; பார்ப்பார் மறை ஓதுக எனத்

தலைமகள் இல்லறத்துக்கு வேண்டியவற்றையே நினைந்து ஒழுகினாள். நாங்கள் மலர்ந்து விளங்கும் கரும்பும் விளைந்து சிறக்கும் நெல்லும் உடைய கழனியூரனின் மார்பு எல்லார்க்கும் உரிய வயலாய் ஆகாது ஒழிக என்று விரும்பினோம்" என்றாள் தோழி.

## 5. எம் இல்லின் முன் தேர் நிற்க

'வாழி ஆதன், வாழி அவனி!
பசி இல்லாகுக! பிணி சேண் நீங்குக!'
என வேட்டோளே, யாயே; யாமே,
'முதலைப் போத்து முழு மீன் ஆரும்
தண் துறை ஊரன் தேர் எம்
முன்கடை நிற்க' என வேட்டேமே. – ஐங் 5

"ஆதன் அவினி வாழ்வாராகுக! பசி நாட்டில் இல்லையாகுக! நோய் நெடுந்தொலைவில் அகலுக! என்று எம் தலைவி இல்லறத்துக்கு உரியவற்றையே நினைந்து வாழ்ந்தாள். நாங்கள் ஆண் முதலை தன்னுடன் வாழும் முதிர்ந்த மீன்களை உண்ணும் குளிர்ந்த துறையையுடைய ஊரனது தேர், பிறர் - பரத்தையர் வீட்டின் முன் நிற்றலை விட்டு, எம் வீட்டின் முன்பக்கத்தில் நிற்பதாகுக என்று விரும்பியிருந்தோம்" என்றாள் தோழி.

## 6. திருமணம் கொள்க

'வாழி ஆதன், வாழி அவனி!
வேந்து பகை தணிக! ஆண்டு பல நந்துக,
என வேட்டோளே, யாயே; யாமே,
'மலர்ந்த பொய்கை, முகைந்த தாமரைத்
தண் துறை ஊரன் வரைக!
எந்தையும் கொடுக்க' என வேட்டேமே! – ஐங் 6

"எம் தலைவி நின்னைப் பார்த்த அன்றே நீ மணந்து கொண்டாய் என மனத்துட் கொண்டு, "ஆதன் அவினி வாழ்க, வேந்தன் பகைமை நீங்குக. அவன் பல ஆண்டுகள் வாழ்க" எனத் தனக்குரிய அறநெறிப்படி விரும்பி ஒழுகினாள். அகன்ற நீர் நிலையில் அரும்புகள் பொருந்திய தாமரையை

யுடைய ஊரன், இவளை விரைந்து மணந்து கொள்க என்றும், அவன் மணந்து கொள்ள வேண்டும் என வேண்டிய போது எம் தந்தையும் மறுக்காதவனாய்க் கொடுப்பானாகுக என்றும் யாங்கள் விரும்பியிருந்தோம்" என்றாள் தோழி.

## 7. மணங் கொண்டு செல்க

'வாழி ஆதன், வாழி அவனி!
அறம் நனி சிறக்க! அல்லது கெடுக!'
என வேட்டோளே, யாயே; யாமே,
உளைப் பூ மருதத்துக் கிளைக் குருகு இருக்கும்
தண் துறை ஊரன் தன்ஊர்க்
கொண்டனன் செல்க' என வேட்டேமே! — ஐங் 7

"தலைவ! நின்னை எம் தலைவி கண்ட போதே நீ அவளை மணந்து கொண்டாய் என எண்ணினாள். ஆதன் அவினி வாழ்க; அறம் மிகவும் ஓங்குக; தீமை முழுவதும் கெடுக என்று விரும்பி இல்லறத்தை வேண்டி ஒழுகினாள். நாங்களோ, உளை பொருந்திய பூக்களையுடைய மருத மரத்தில் குருகுப்பறவைகள் தம் சுற்றம் சூழ இருக்கும் குளிர்ந்த துறையையுடைய ஊரன் இவளைத் தன்னுடன் கொண்டு செல்வானாக என வேண்டி இருந்தோம்" என்றாள் தோழி.

## 8. உறுதி பொய்யாது ஒழிக!

'வாழி ஆதன், வாழி அவனி!
அரசு முறை செய்க! களவு இல்லாகுக!'
என வேட்டோளே, யாயே; யாமே,
'அலங்குசினை மாஅத்து அணி மயில் இருக்கும்
பூக் கஞல் ஊரன் சூள் இவண்
வாய்ப்பதாக' என வேட்டேமே! — ஐங் 8

"எம் தலைவி நின்னை எதிர்ப்பட்டவன்றே கற்புக் கடம் பூண்டாள். அவ் ஒழுக்கத்துக்கு ஏற்பனவற்றை நினைந்தாள். ஆதன் அவினி வாழ்க! மன்னன் முறை செய்க! களவு முதலிய குற்றங்கள் நிகழாமல் ஒழிக! என்றும் எண்ணி விரும்பி ஒழுகினாள். அசையும் தளிரையுடைய மாமரத்தில் அழகிய

*மயில் தங்கியிருக்கும் மலர்கள் நிரம்பப் பெற்றுள்ள ஊரன், முன் நாள் செய்த சூளுறவு இப்போது பொய்யாது ஒழிக என்று விரும்பி ஒழுகினோம்,” என்றாள் தோழி.*

## 9. பழிச்சொல் ஒழிக

**‘வாழி ஆதன், வாழி அவனி!**
**நன்று பெரிது சிறக்க! தீது இல்லாகுக!’**
**என வேட்டோளே, யாயே; யாமே,**
**‘கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும்**
**தண் துறை ஊரன் கேண்மை**
**அம்பல் ஆகற்க’ என வேட்டேமே!** *– ஐங் 9*

*“தலைவ! நின்னை எம் தலைவி எதிர்ப்பட்ட பொழுதே, அவள் இல்லறமே நினைந்தாள். ஆதன் அவினி வாழ்க! நன்று மிகவும் பெருகுக! தீது சிறிதும் இல்லையாகுக! என இங்ஙனம் எண்ணி ஒழுகினாள். கயல்மீனை உண்ட நாரை வைக்கோற் போரில் தங்கும் குளிர்ந்த துறையையுடைய ஊரன் நட்பு அம்பலாக ஆகாது போக என்று யாங்கள் விரும்பினோம் என்று தோழி தலைவனை நோக்கி யுரைத்தாள்.*

## 10. நின்னொடு கொண்டு செல்க!

**‘வாழி ஆதன், வாழி அவனி!**
**மாரி வாய்க்க! வளம் நனி சிறக்க!’**
**என வேட்டோளே, யாயே; யாமே,**
**‘பூத்த மாஅத்துப் புலால்அம் சிறு மீன்**
**தண் துறை ஊரன் தன்னொடு**
**கொண்டனன் செல்க’ என வேட்டேமே.** *– ஐங் 10*

*“எம் தலைவியான இவள் நின்னைக் கண்டு கூடிய போதே, நீ மணந்து கொண்டாய் என எண்ணி, ‘ஆதன் அவினி வாழ்க! மழை தட்டாது பொழிக! வளங்கள் மிக உண்டாகுக.’ என்று இல்லறத்துக்கு வேண்டியவற்றை விரும்பி ஒழுகினாள். நீ தலைவியை மணந்து கொள்ள நினையா யானால் பூத்த மாவையும், புலால் நாற்றம் உடைய மீனை யும் உடை குளிர்ந்த துறையையுடைய ஊரனே, இவளை*

நின்னுடன் கொண்டு செல்வாயாக என விரும்பி ஒழுகினோம்" என்றாள் தோழி.

## வேழப்பத்து

### 11. நல்லன் அல்லன்

மனை நடு வயலை வேழம் சுற்றும்
துறை கேழ் ஊரன் கொடுமை நாணி,
'நல்லன்' என்றும் யாமே;
'அல்லன்' என்னும் என் தடமென் தோளே. *– ஐங் 11*

*தலைவி "இல்லத்தில் நடப்பட்ட பசலைக் கொடிபோய் நாணலைச் சுற்றிக் கொண்டு வளரும் துறை பொருந்திய ஊரனின் கொடுமைக்கு வெட்கி, நாம் அவனை நல்லவன் என்று கூறினோம். ஆயினும் என் பெரிய மென்மையான தோள்கள் ஆற்றாமல் தம் மெலிவால் அவன் நல்லவன் அல்லன் எனக் காட்டி நின்றன" என்று பாங்கிக்குக் கூறினாள்.*

### 12. அவன் தோள் தோற்க

கரை சேர் வேழம் கரும்பில் பூக்கும்
துறை கேழ் ஊரன் கொடுமை நன்றும்
ஆற்றுகதில்ல, யாமே;
தோற்கதில்ல என் தட மென் தோளே. *– ஐங் 12*

*"கரையில் நின்ற நாணல் வயலில் உள்ள கரும்பைப் போல் மலரும் துறை பொருந்திய ஊரனான தலைவனின் கொடுமையை யாம் மிகவும் ஆற்றியிருப்போமாக. என் பெருமையும் மென்மையும் உடைய தோள்கள் ஆற்றாதன வாய்த் தோன்றி மெலிவனவாகுக. தோற்காத இடத்து எம்மைப் போல் ஆற்றியிராமல் வேறுபாடு மெய்யில் நிறுத்தித் துயர் செய்யும்" என்று தலைவி தன்னுள்ளே சொல்லினாள்.*

### 13. கள்ள உறவினர் உறங்கார்

பரியுடை நல் மான் பொங்கு உளை அன்ன
அடகரை வேழம் வெண் பூப் பகரும்,

தண் துறை ஊரன் பெண்டிர்,
துஞ்சு ஊர் யாமத்தும், துயில்அறியலரே. – ஐங் 13

*"செலவையுடைய நல்ல குதிரையின் தலையில் அணிந்த உயர்ந்த சாமரைபோல் கரையில் வளர்ந்த நாணல் வெண்மை யான பூக்களைக் கொடுக்கும். இத்தகைய குளிர்ந்த துறையை யுடைய ஊரனின் பெண்டிர் ஊரார் துயிலும் நள்ளிரவிலும் தாம் உறங்கார். ஆதலால் அவன் அவரை அறியாமல் வருவது யாங்ஙனம்? அஃது இயலாது!" எனத் தலைவி தூதாய் வந்த வர்க்குக் கூறினாள்.*

## 14. ஆற்றேன் ஆயினேன்

**கொடிப் பூ வேழம் தீண்டி, அயல**
**வடிகொள் மாஅத்து வண் தளிர் நுடங்கும்**
**மணித் துறை ஊரன் மார்பே**
**பனித் துயில் செய்யும் இன் சாயற்றே.** – ஐங் 14

*தலைவி, "நீண்ட மலர்களையுடைய நாணல் தீண்டுதலால் பக்கத்தே உள்ள வடுநிறைந்த மா மரங்களின் வளமான தளிர்கள் அசையும் நீலமணியைப் போன்று தெளிந்த நீர் நிரம்பிய துறையையுடைய ஊரன் கொடியவனே; ஆயினும், அவனது மார்பு ஒன்றே குளிர்ந்த உறக்கத்தைச் செய்யும் இனிய சாயலை யுடையது. ஆதலால் அதனை நான் நினைத்தே ஆற்றேன் ஆயினேன்!" என்று தன் தோழியிடம் உரைத்தாள்.*

## 15. ஊரன் ஆயினும் ஊரனா அவன்?

மணல் ஆடு மலிர்நிறை விரும்பிய, ஒண் தழைப்
புனல் ஆடு மகளிர்க்குப் புணர் துணை உதவும்
வேழ மூதூர் ஊரன்
ஊரான் ஆயினும், ஊரன் அல்லன்னே. – ஐங் 15

*தலைவி, "மணலை அலைத்தபடி வருகின்ற வெள்ளத் தில், விரும்பிய ஒள்ளிய தழையை உடுத்துப் புனலாடும் மகளிர்க்குப் புனை துணியினைச் செய்யும் நாணல் நிறைந்த மூதூரை யுடைய ஊரன் உறைதலால் தலைவன் நம் ஊரில் உள்ளவனே ஆயினும் புறத்தொழுகுதலால் ஊரன் அல்லாத வன் ஆனான்" என்று வருந்திச் சொன்னாள்.*

## 16. கண்கள் நிறம் மாறின

ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்கால்
சிறு தொழுமகளிர் அஞ்சனம் பெய்யும்
பூக் கஞல் ஊரனை உள்ளிப்,
பூப் போல் உண்கண் பொன் போர்த்தனவே! – *ஐங் 16*

*தோழி, "மேலே உயர்ந்த பூவையுடைய நாணல் துளையுடைய திரண்ட தண்டில், சிறுமை வாழ்க்கையுடைய மகளிர் கருமை இட்டு வைக்கும் பூக்கள் நிறைந்த ஊரனை நினைத்தலால், தலைமகளின் பூப்போன்ற மையுண்ட கண்கள் பொன்போல் பசலை பூத்தன. அகலின், இப்போது தலைமகன் வந்து பெறப் போவது யாது?" என்று தோழி தூதாய் வந்தவர்க்குக் கூறி வாயில் மறுத்தாள்.*

## 17. வருந்துகிறது நெஞ்சு

புதல் மிசை நுடங்கும் வேழ வெண் பூ
விசும்பு ஆடு குருகின் தோன்றும் ஊரன்
புதுவோர் மேவலன் ஆகலின்,
வறிது ஆகின்று, என் மடங் கெழு நெஞ்சே. – *ஐங் 17*

*தலைவி, "தான் இருக்கும் புதரின் மேற்பட நின்று அசையும் நாணலின் வெண்மையான பூ வானத்தில் பறக்கும் வெண் குருகைப் போல் தோன்றும் ஊரனாகிய தலைவன், அவன் நாள் தோறும் புதியவரான பரத்தையரிடம் விருப்பு உடையவனாதலால், அதனை அறியாது என் மடங்கெழு நெஞ்சம் அவனை நினைந்து வருந்துகின்றது" என்று கூறினாள்.*

## 18. பிரியேன் என்று பிரிந்தானே

இருஞ் சாய் அன்ன செருந்தியொடு வேழம்
கரும்பின் அலமருங் கழனி ஊரன்,
பொருந்து மலர் அன்ன என் கண் அழப்
பிரிந்தனன் அல்லனோ, பிரியலென் என்றே? – *ஐங் 18*

*கரிய கோரையை ஒத்த செருந்தியுடன் நாணல் கரும்பு போல் காற்றினால் சுழன்று அசையும் வயல்களையுடைய ஊரன், முன்னம் வந்து கூடிய போதில், 'இனிப் பிரியேன்'*

என்று கூறிப் பின்னர், அழகிய மலர் போன்ற என் கண்கள் கலுழுமாறு பிரிந்தானாகலின், அவன் பொருட்டு, நீவிர் வந்து வாயிலை வேண்டுவது என்ன?" எனத் தலைவி தூதர் களைப் பார்த்து வினவினாள்.

## 19. ஊரன் ஆகலின் வருந்துகிறேன்

எக்கர் மாஅத்துப் புதுப் பூம் பெருஞ் சினை,
புணர்ந்தோர் மெய்ம் மணங் கமழும் தண் பொழில்,
வேழ வெண் பூ வெள் உளை சீக்கும்
ஊரன் ஆகலின் கலங்கி,
மாரி மலரில் கண் பனி உகுமே. — *ஐங் 19*

*தலைவி, "மணல் பரவிய எக்கரில் நின்ற மாமரத்தின் புதியவாய் அரும்பிப் பூத்த பூக்களையுடைய பெரிய கொம்பு, வதுவையிற் கூடிய மகளிரின் மெய்ம்மணம் கமழும் குளிர்ந்த சோலையில், நாணல் வெண்பூவின் இதழாகிய தலை அப் பூக்களைத் துடைத்து அழிக்கும். ஊரன் தலைவன் ஆதலால் என் கண்கள் கலக்கத்தை அடைந்து மழையால் நனைந்த குவளைமலர் போல் நீரைச் சொரிகின்றன" என்று தோழி யிடம் இயம்பினாள்.*

## 20. வளை நெகிழ்ந்திடுதே

அறு சில் கால அஞ்சிறைத் தும்பி
நூற்றிதழ்த் தாமரைப் பூச் சினை சீக்கும்,
காம்பு கண்டன்ன தூம்புடை, வேழத்துத்
துறை நணி ஊரனை உள்ளி, என்
இறை ஏர் எல் வளை நெகிழ்பு ஓடும்மே. — *ஐங் 20*

*தலைவி, "ஆறு கால்களையும் அழகிய இறகையும் உடைய தும்பி நூறான பல இதழ்களை உடைய தாமரை மலரில் ஈன்றிருக்கும் சினைகளை அழிக்கும் மூங்கில் போன்று உள்ளே துளையையுடைய நாணல் செறிந்த துறையை அருகில் உடைய ஊரனை நினைந்தேன். நினைந்ததால் இறையும் அழகும் ஒளியும் உடைய என் வளைகள் நில்லாமல் நெகிழ்ந்து ஓடுகின்றன" என்று உரைத்தாள்.*

## நண்டு போல் செயல்

### 21. கண்நிறம் மாறல் ஏன்?

முள்ளி நீடிய முதுநீர் அடைகரைப்
புள்ளிக் களவன் ஆம்பல் அறுக்கும்
தண் துறை ஊரன் தெளிப்பவும்,
உண்கண் பசப்பது எவன்கொல் – அன்னாய்! – ஐங் 21

தோழி, "அன்னையே! நீர் முள்ளிச் செடிகள் நீண்ட வளர்ந்திருக்கும் பழைய நீர்மிக்க அடைகரையில் புள்ளிகளையுடைய நண்டு அந்த நீரில் உள்ள ஆம்பல் தண்டை அறுக்கும் குளிர்ந்த துறையை உடையவன் நம் தலைவன். அவன், நாம் தெளியும்படி, 'இனி எனக்குப் புறத்தொழுக்கம் இல்லை!" என இயம்பினன். அங்ஙனமாகவும் அதைத் தெளியாது. மையினைப் பெற்ற நின் கண்கள் பசந்து வேறுபடுவது ஏன்? கூறுவாய்!" எனத் தலைவியை நோக்கி வினவினாள்.

### 22. நின்னை பிரியேன் எதற்கு?

அள்ளல் ஆடிய புள்ளிக் களவன்
முள்ளி வேர் அளைச் செல்லும் ஊரன்
நல்ல சொல்லி மணந்து, 'இனி
நீயேன்' என்றது எவன்கொல் – அன்னாய்? – ஐங் 22

தலைவி, "தோழியே! சேறு படிந்த புள்ளிகளையுடைய நண்டானது முள்ளியின் வேரில் அமைந்துள்ள வளையில் புகும் ஊரன் களவுக் காலத்தில் நன்மை தரும் சொற்களைச் சொல்லி மணந்தான். அத்தகைய தலைவன், இக் கற்புக் காலத்தில் 'நின்னைப் பிரியேன் என்று கூறுவதற்குக் கருத்து யாதோ? கூறுக" என்றாள்.

### 23. மயங்கி நோய் செய்வது ஏன்?

முள்ளி வேர் அளைக் களவன் ஆட்டிப்,
பூக் குற்று, எய்திய புனல் அணி ஊரன்
தேற்றஞ்செய்து நப்புணர்ந்து, இனித்
தாக்கு அணங்கு ஆவது எவன்கொல் – அன்னாய்?
– ஐங் 23

*தலைவி, "தோழியே! மங்கையர் நீர் முள்ளியின் வேரில் அமைந்துள்ள வளையிலே வாழும் நண்டை வருத்தியும் மலர்களைப் பறித்தும் விளையாடிய புனல் அணி ஊரன், களவொழுக்கக் காலத்தில், நாம் தெளியக் கூடியவற்றைச் சொல்லித் தெளிவித்தான். நம்மை மணந்தாள். அத்தகையவன் இன்று, ஒழுக்கம், உரை என்னும் இரண்டினாலும் தீண்டி வருத்தும் தெய்வமாய் விளங்குவதற்குக் காரணம் யாதோ?" எனத் தோழியை வினவினாள்.*

## 24. துறப்பது எதற்காக?

தாய் சாப் பிறக்கும் புள்ளிக் களவனொடு
பிள்ளை தின்னு முதலைத்து அவன் ஊர்
எய்தினன் ஆகின்றுகொல்லோ? மகிழ்நன்
பொலந் தொடி தெளிர்ப்ப முயங்கியவர்
நலம் கொண்டு துறப்பது எவன்கொல் – அன்னாய்?

*– ஐங் 24*

*தோழி, "அன்னையே! மகிழ்நனுடைய ஊர், தாய் சாவப் பிறக்கும் புள்ளி பொருந்திய நண்டோடு தன் பார்ப்பையே (குஞ்சுகளையே) உண்ணும் முதலையையும் உடையது. அத் தன்மையுடைய ஊரை உடையவன். சேரியில் உள்ளவர் கூறுவதால் இங்கு வந்தனனோ? அங்ஙனம் வந்தவன் பொன்னால் ஆன தொடிகள் ஒலிக்கத் தன்னைக் கூடிய மகளிரின் நலத்தை நுகர்ந்தும் அவரது நலம் கெடும்படி அவரையே துறப்பது எதை எண்ணியோ? சொல்லுக?" என்று தலைவன் பொருட்டாகத் தூதாக வந்தவர் கேட்கத் தலைவிக்குச் சொன்னாள்.*

## 25. தலைவன் மார்பு உறவுக்கு வருந்தும்

புயல் பறம்தந்த புனிற்று வளர் பைங் காய்
வயலைச் செங் கொடி களவன் அறுக்கும்
கழனி ஊரன் மார்பு பலர்க்கு
இழை நெகிழ் செல்லல் ஆக்கும் – அன்னாய்! *– ஐங் 25*

*தோழி, "அம்மே! இல்லத்துக்கு அண்மையில் நட்டு வளர்த்த முற்றாத பசுமையான காய்களையுடைய வயலையின் சிறந்த கொடியை, நண்டு தன் கூரிய நகத்தால் அறுக்*

*கும் வயலையுடைய ஊரன் நம் தலைவன். அத் தகையவனின் மார்பு ஒருவருக்கே அல்லாது மகளிர் பலர்க்கும் அணிகளை நெகிழச் செய்கின்ற துன்பத்தைத் தருவதாகும்" என்று தலைவியைப் பார்த்துக் கடுமையாகக் கூறினாள்.*

## 26. எம்மும் பிறரும் அறியான்

**கரந்தைஅம் செறுவில் துணை துறந்து களவன்**
**வள்ளை மென் கால் அறுக்கும் ஊரன்**
**எம்மும், பிறரும், அறியான்;**
**இன்னன் ஆவது எவன்கொல் – அன்னாய்?** *– ஐங் 26*

*தோழி, "கரந்தைக் கொடி படர்ந்த வயல். அதில் நண்டு தன் பெடையைத் துறந்து சென்று வள்ளைக் கொடியின் மென்மையான தண்டை அறுக்கும் இயல்புடைய ஊரன் நம் தலைவன். அவன் எம் இயல்பும் பரத்தையர் இயல்பும் நன்கு அறியாது இவ் இயல்பு உடையவனாய் ஒழுகுதற்குக் காரணம் யாது?" என்று உரைத்தாள்.*

## 27. வருந்துவது ஏன்?

**செந்நெல்அம் செறுவில் கதிர் கொண்டு, களவன்**
**தண்ணக மண் அளைச் செல்லும் ஊரற்கு**
**எல் வளை நெகிழச் சாஅய்,**
**அல்லல் உழப்பது எவன்கொல் – அன்னாய்?** *– ஐங் 27*

*தோழி, "அன்னையே, செந்நெல் விளையும் வயலில் வாழும் நண்டு அந் நெற்கதிரைக் கவர்ந்து கொண்டு குளிர்ந்த வாழும் இடமான தன் மண் வளையில் புகும். இத்தகைய இயல்பு கொண்ட ஊரன் தலைவன். அவன் பொருட்டு நீ நின் வளைகள் நெகிழும் வண்ணம் மெலிந்து வருந்துவது ஏன்? சொல்லுக!" என்று தலைமகளைப் பார்த்து வினவினாள்.*

## 28. மென்தோள் நிறம் மாறுவது ஏன்?

**உண்துறை அணங்கு இவள் உறைநோய் ஆயின்,**
**தண் சேறு களவன் வரிக்கும் ஊரற்கு**
**ஒண் தொடி நெகிழச் சாஅய்,**
**மென் தோள் பசப்பது எவன்கொல் – அன்னாய்?** *– ஐங் 28*

"அன்னையே! உண்ணும் நீர் கொள்ளும் துறையில் உறையும் தெய்வம் இவள் உற்ற நோக்குக் காரணம் என்று நினைத்தாயானால், குளிர்ந்த சேற்றை அலவன் தன் நடையால் அழகு படுத்தும் ஊரன் பொருட்டு இவள் ஒளியுடைய தொடி நெகிழுமாறு தளர்ந்து மென்மையான தோள்கள் பசந்து வேறுபடுவது ஏன் கூறுவாய்?" என்று தோழி செவிலிக்கு அறத்தொடு நின்று தலைவிக்கும் தலைவனுக்கும் உள்ள காதல் உறவைச் சொன்னாள்.

## 29. மகள் மனவருத்தம் கொள்ளல் ஏன்?

மாரி கடி கொள காவலர் கடுக,
வித்திய வெண் முளை களவன் அறுக்கும்
கழனி ஊரன் மார்புற மரீஇத்,
திதலை அல்குல் நின் மகள்
பசலை கொள்வது எவன்கொல் – அன்னாய்? – ஐங் 29

தோழி, "அன்னையே, மழை மிகுந்த பெய்யவும் காவலர் நன்கு கர்த்தலைச் செய்யவும் சற்றும் அஞ்சாமல் வந்த, விதைத்த வெண்மையான முளைகளை அலவன் துண்டு படுத்தும் வயல்களையுடைய ஊரனின் மார்பை ஆர முயங்கியும், பாம்பின் படம் பொருந்திய அல்குலையுடைய நின் மகள் பசலை அடைந்து வேறுபடுவது ஏன்?" எனச் செவிலித் தாய்க்கு அறத்தொடு நின்றாள்.

## 30. அழகை இழப்பது ஏன்?

வேப்பு நனை அன்ன நெடுங் கட் களவன்
தண்ணக மண் அளை நிறைய, நெல்லின்
இரும் பூ உறைக்கும் ஊரற்கு இவள்
பெருங் கவின் இழப்பது எவன்கொல் – அன்னாய்?
– ஐங் 30

"அம்மா, வேப்ப மரத்தின் பூவினைப் போன்ற நீண்ட கண்களையுடைய நண்டின் குளிர்ந்த அகமான மண் அளை நிறையும்படி நெல் தாளின் மிக்க பூ உதிர்ந்து கிடக்கும் ஊரன் பொருட்டு இவன் தன் அழகை இழப்பது ஏனோ!" என்று தோழி செவிலியை நோக்கிச் சொன்னாள்.

## தோழிக்கு உரைத்தது

### 31. சூளுரை என்னாவது?

அம்ம வாழி, தோழி! மகிழ்நன்
கடன் அன்று என்னுங்கொல்லோ – நம் ஊர்
முடம் முதிர் மருதத்துப் பெருந் துறை
உடன் ஆடு ஆயமோடு உற்ற சூளே? – *ஐங் 31*

*தலைவி, "தோழியே, கேள்! மகிழ்நன் வளைந்து முதிர்ந்த மருத மரங்கள் நிறைந்திருக்கின்ற பெருந்துறையில் தன் உடன் ஆடும் ஆயத்தார் அறிய அவருடன் உடனிருந்தே இனிப் புற ஒழுக்கத்தைப் பரத்தமையை நான் விரும்பேன்" என்று செய்த சூளுரை மறவாமல் கடைப்பிடித்தல் தனக்கு முறைமையன்று எனக் கூறுவானோ?" என்று தோழியிடம் சொன்னாள்.*

### 32. ஏழு நாள் அழுவர் அவன் பெண்டிர்

அம்ம வாழி, தோழி! மகிநன்
ஒரு நாள் நம் இல் வந்ததற்கு, எழு நாள்
அழுப என்ப அவன் பெண்டிர் –
தீ உறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே. – *ஐங் 32*

*தலைவி, "தோழியே, கேள்! நம் இல்லத்தை நோக்கி மகிழ்நன் ஒருநாள் வந்தான். அவன் பெண்டிர் பொறுக்காமல் தீயிற் பட்ட மெழுகைப் போன்று விரைந்து மனம் நெகிழ்ந்து, ஏழுநாள் வரை அழுது தீர்த்தனர் என்று பலரும் கூறுவர்" என்று தோழிக்கு உரைத்தாள்.*

### 33. தேவையற்றவன்

அம்ம வாழி, தோழி! மகிழ்நன்
மருது உயர்ந்து ஓங்கிய விரி பூம் பெருந் துறைப்
பெண்டிரொடு ஆடும் என்ப – தன்
தண் தார் அகலம் தலைத்தலைக் கொளவே. – *ஐங் 33*

*"தோழி! கேள், மருத மரங்கள் மிகவும் உயர்ந்த விரிந்த பூக்களையுடைய பெரிய நீர்த்துறையில் மகிழ்நன் தன் குளிர்ந்த மாலை சூடிய மார்பை ஒவ்வொருவரும் புணையாகப் பற்றி*

*முயங்கும்படி பரத்தையரோடு நீராடுகின்றான் எனச் சொல்வர்" எனத் தலைவி சொன்னாள். ஆதலால் அத் தகையவனுக்குத் தான் தேவையற்றவள் என்று வாயில் மறுத்தாள் தலைவி.*

## 34. கண்கள் ஆம்பலின் நிறம் எய்தின

அம்ம வாழி, தோழி! நம் ஊர்ப்
பொய்கைப் பூத்த, புழைக்கால் ஆம்பல்
தாது ஏர் வண்ணம் கொண்டன –
ஏதிலாளர்க்குப் பசந்த என் கண்ணே. *– ஐங் 34*

*தலைவி, "தோழியே, கேட்பாய், அன்பு இல்லாதவனாய்ப் புறத்தே ஒழுகும் காதலன் பொருட்டாகப் பசப்புற்ற என் கண்கள், நம் ஊரில் உள்ள பொய்கையில் மலர்ந்த துளை பொருந்திய தண்டை உடைய ஆம்பல் மலரின் தாதைப் போன்ற நிறத்தை எய்தின." என்று தோழிக்குச் சொன்னாள்.*

## 35. ஒளி மங்கியது மேனி

அம்ம வாழி, தோழி! நம் ஊர்ப்
பொய்கை ஆம்பல் நார் உரி மென் கால்
நிறத்தினும் நிழற்றுதல் மன்னே;
இனிப் பசந்தன்று, என் மாமைக் கவினே. *– ஐங் 35*

*"தோழி! கேள்! இதுகாறும் நம் ஊரில் பொய்கையில் மலர்ந்த ஆம்பலின் நார் உரிக்கப்பட்ட மெல்லிய தண்டினும் மிக ஒளிர்தலைச் செய்த என் மாமை நிற அழகு கெட்டது; இப்போதோ மேனி ஒளி மங்கி விட்டது" எனத் தலைவி யுரைத்தாள்.*

## 36. இன்றியமையாதவன்

அம்ம வாழி, தோழி! ஊரன்
நம் மறந்து அமைகுவனாயின் நாம் மறந்து
உள்ளாது அமைதலும் அமைகுவம்மன்னே –
கயல் எனக் கருதிய உண்கண்
பயலைக்கு ஒல்காவாகுதல் பெறினே. *– ஐங் 36*

*தலைவி, "தோழியே, கேள், ஊரனான நம் காதலன் நம்மை மறந்து உறைவானானால், கயல் போன்ற மை பூசிய*

கண்கள் பசப்பு அடையாமையை நாம் பெற்றால் அவனை மறந்து நினைப்பதே அல்லாது அமைந்திருந்தலும் நமக்கு இயலும். அவை விரைவாகப் பசத்தலால் அன்றே நாம் அவனை இன்றியமையேம் ஆகின்றோம்" என்று தோழியை நோக்கிக் கூறினாள்.

## 37. நீங்குவதில் வல்லன்

அம்ம வாழி, தோழி! மகிழ்நன்
நயந்தோர் உண்கண் பசந்து, பனிமல்க
வல்லன் வல்லன் பொய்த்தல்;
தேற்றான், உற்ற சூள் வாய்த்தல்லே. – *ஐங் 37*

*காதற் பரத்தை "தோழியே! கேள், மகிழ்நன் தான் செய்த சூள் பொய்க்காத வகையில் ஒழுகுவதைத் தெளியான் ஆயினும், தன்னைக் காதலித்தவருடைய உண்கண் பசந்து நீர்த்துளி சொரியும் வண்ணம் அந்தக் சூளுறவைப் பொய்த்து விட நீங்குவதில் வல்லவனாக உள்ளான்!" என்றாள்.*

## 38. யாம் வருந்தினோம்

அம்ம வாழி, தோழி! மகிழ்நன்
தன் சொல் உணர்ந்தோர் அறியலன் – என்றும்
தண் தளிர் வெளவு மேனி,
ஒண் தொடி முன்கை, யாம் அழப் பிரிந்தே. – *ஐங் 38*

*பரத்தை, "தோழியே! கேள்! குளிர்ந்த மாந்தளிர் போன்ற மேனியும் ஒளியுடைய தொடி அணிந்த முன்கையும் உடைய யாம் ஆற்ற மாட்டாமல் அழும்படி பிரிய எண்ணுவதால், மகிழ்நன், தான் தெளிவிக்கக் கூறுவனவற்றைத் தெளிந்து அமைதி பெறும் உரிமை மங்கையரின் அன்பை அறிகின்ற அறிவு இல்லாதவன் ஆவான்!" என்று தன் தோழியை நோக்கிக் கூறினாள். ஆதலால் அறியாதவர் செய்யும் செயலைச் செய்ய வேண்டா!*

## 39. நெஞ்சில் பிரியலன்

அம்ம வாழி, தோழி! ஊரன்
வெம் முலை அடைய முயங்கி, நம் வயின்

திருத்திழைப் பணைத் தோள் நெகிழப்,
பிரிந்தனன் ஆயினும், பிரியலன் மன்னே. – ஐங் 39

"தோழியே! நான் சொல்வதைக் கேள்! ஊரன் விருப்பம் ஊட்டும் நம்முடைய மார்பகம் முழுவதும் சேரும்படி தழுவிப் பின்பு நம்மிடத்தினின்று அழகிய இழையணிந்த தோள்கள் நெகிழ்ந்து மெலியும்படி பிரிந்தானாயினும் மனத்தில் இடையறவு இல்லாது நிற்கின்றான். ஆதலால் அவன் நம்மிடமிருந்து பிரிந்தவன் அல்லன்" என்று தலைமகளுக்குப் பக்கத்தில் உள்ளவர் கேட்பப் பரத்தை தோழியை நோக்கிக் கூறினாள்.

## 40. உரிமைப் பெண்டிர் ஊரில் தங்கினர்

'அம்ம வாழி, தோழி! மகிழ்நன்
ஒண் தொடி முன்கை யாம் அழப்பிரிந்து தன்
பெண்டிர் ஊர் இறை கொண்டனன்' என்ப,
கெண்டை பாய்தர அவிழ்ந்த
வண்டு பிணி ஆம்பல் நாடுகிழவோனே. – ஐங் 40

பரத்தை, "தோழியே! கேள், கெண்டை மீன் பாய்வதால் மலர்ந்த வண்டு விரும்பும் ஆம்பல் மிக்க நாடு உடையவன் தலைவன். அவன் ஒளியுடைய தொடியை அணிந்த முன் கையையுடைய யாம் அழும்படி பிரிந்து போய், தன் மனைவி வாழும் வீட்டை அடைந்து பிரியாமல் அங்கே தங்கினான் என அயற் பரத்தையர் உரைப்பர். இஃது ஏன்? கூறுக," எனத் தன் தோழியை நோக்கிச் சொன்னாள்.

# சிறு வெறுப்பு

## 41. மேனி ஒளி மாற்றினான்

'தன் பார்ப்புத் தின்னும் அன்பு இன் முதலையொடு
வெண் பூம் பொய்கைத்து, அவன் ஊர்' என்ப; அதனால்
தன் சொல் உணர்ந்தோர் மேனி
பொன் போல் செய்யும் ஊர்கிழவோனே. – ஐங் 41

தலைவி, "தான் ஈன்ற பார்ப்பையே உண்பது அன்பு இல்லாத முதலை. அவற்றுடன் வெண்மையான மலர்கள்

நிறைந்த பெய்கையுடையது தலைவனது ஊர். அதனால் அவ்வூர்க்கு உரியவனான தலைவன், தான் தெளிவுபடுத்திய சொல்லைத் தேறியிருந்தவரின் மேனியைத் தன் பிரிவால் பொன் போன்ற பசப்பை அடையும்படி செய்கின்றான்" என்றான் தோழியிடம்.

## 42. போற்றா ஒழுக்கம் புரிந்து கொண்டாள்

மகிழ் மிகச் சிறப்ப மயங்கினள்கொல்லோ –
யாணர் ஊர! – நின், மாண் இழை அரிவை?
காவிரி மலிர்நிறை அன்ன நின்
மார்பு நனி விலக்கல் தொடங்கியோளே. – *ஐங் 42*

*"புதிய வருவாயை உடைய ஊரனே! சிறந்த அணிகளை அணிந்த நினக்கு உரியவளாகிய அரிவை காவிரி ஆற்றின் வெள்ளப் பெருக்கைப் போல் விரிந்த நின் மார்பை மிகவும் விலக்கத் தொடங்கினாள். அவள் கள்ளுண்ட களிப்பு மேலும் மேலும் மிக, மயக்கத்தை அடைந்தாள் போலும்!" எனத் தலைவியுரைத்தாள், தலைவனைப் பார்த்து.*

## 43. பாணன் நின்னினும் பொய்யன்!

அம்பணத்து அன்ன யாமை ஏறித்,
செம்பின் அன்ன பார்ப்புப் பல துஞ்சும்
யாணர் ஊர! நின்னினும்
பாணன் பொய்யன்; பல சூளினனே. – *ஐங் 43*

*"செம்புகளை ஒத்த ஆமைப் பார்ப்புகள் மரக்கால் போன்ற தாய் ஆமையின் மீது ஏறி உறங்கும் புதிய வருவாயை யுடைய ஊரனே! நின்னைவிட நினக்குத் தூதாய் வந்த பாணன் பல பொய்களைக் கூறுதலும் பல சூளுரை செய்தலும் வல்லவன் ஆவான்!" என்று தலைவி தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.*

## 44. அறம் ஆவதைச் செய்க

தீம் பெரும் பொய்கை யாமை இளம் பார்ப்புத்
தாய் முகம் நோக்கி வளர்ந்திசின் ஆஅங்கு,

அதுவே ஐய, நின் மார்பே,
அறிந்தனை ஒழுகுமதி; அறனுமார் அதுவே. – ஐங் 44

*தோழி, "ஐயனே! இனிமையான நீர் மிக்க பொய்கையில் வாழும் ஆமையின் இளைய பார்ப்புகள் தம்முடைய தாய் தம்மை ஓம்பாவிடினும் தாம் அதன் முகம் நோக்கி வளரும். அது போன்று இவள் நீ நல்காது போனாலும் நின் மார்பையே நோக்கி வாழும் இயல்புடையவள் ஆவாள். நின் மார்பு அத் தன்மையுடையது. ஆதலால், நீ அதனை அறிந்து ஒழுகுக. அஃது நினக்கு அறமும் ஆகும்" எனப் புறம்போந்து வந்தத் தலைவனைப் பார்த்துக் கூறினாள்.*

## 45. இவள் கண்கள் நிறம் மாறின!

கூதிர் ஆயின் தண் கலிழ் தந்து,
வேனில் ஆயின் மணி நிறங் கொள்ளும்
யாறு அணிந்தன்று, நின் ஊரே;
பசப்பு அணிந்தனவால் மகிழ்ந! என் கண்ணே. – ஐங் 45

*"மகிழ்நனே, கூதிர் காலத்தில் நீர் மிகுதலால் குளிர்ந்த தாய்க் கலங்கி வேனிற் காலத்தில் அந் நீர் இல்லாததால் தெளிந்து நீலமணியின் நிறத்தைப் பெறும் ஆறு. அவ் ஆற்றினால் நின் ஊர் அழகு பெற்றது. அதன் இயல்புதானும் இன்றி இவள் கண்கள் எந்நாளும் நிறத்தினால் அழகு பெற்றன," என்று தோழி கூறினாள், தலைவனிடம்.*

## 46. அங்கிருத்தலே நன்று

நினக்கே அன்று அஃது; எமக்குமார் இனிதே –
நின் மார்பு நயந்த நல் நுதல் அரிவை
வேண்டிய குறிப்பினை ஆகி,
ஈண்டு நீ அருளாது, ஆண்டு உறைதல்லே. – ஐங் 46

*தோழி, "பெரும! நின் மார்பை விரும்பிய நல்ல நெற்றியை யுடைய பரத்தையானவள் விரும்பிச் செய்த குறிப்புடனே, இங்கு வருவதை விட்டு, வாராது அவளது மனையிலேயே தங்குதல் நினக்கே அன்றி எமக்கும் நல்ல தாகும்!" என்று தலைவனிடம் வருத்தமுடன் சொன்னாள்.*

## 47. பொய்யை அறிவோம்

முள்ளெயிற்றுப் பாண்மகள் இன் கெடிறு சொரிந்த
அகன் பெரு வட்டி நிறைய, மனையோள்
அரிகாற் பெரும் பயறு நிறைக்கும் ஊர!
மாண் இழை ஆயம் அறியும் – நின்
பாணன் போலப் பல பொய்த்தல்லே. *– ஐங் 47*

*"முள்ளைப் போன்ற கூர்மையான பற்களையுடைய பாண்மகளின் இனிய கெளிற்று மீன் இடப்பட்ட அகன்ற பெரிய கூடை நிறைய இல்லாள் அரிந்த தாளையுடைய இடத்து விதைத்துப் பெற்ற பெரும் பயற்றைக் கொடுக்கும் ஊரனே! நின்க்கு வாயிலாகப் புகுந்த பாணனைப் போல் நீயும் பொய் பல கூறுவை. இதனைச் சிறந்த அணியை அணிந்த ஆயத்தார் எல்லாரும் அறிவார். எனவே, நான் மெய் என்று கொள்ளும்படி இல்லை." என்று தலைவி தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.*

## 48. வருகையை விரும்பவில்லை!

வலை வல் பாண்மகன் வால் எயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுள், மனையோள்
யாண்டு கழி வெண்ணெல் நிறைக்கும் ஊர!
வேண்டேம் பெரும! நின் பரத்தை
ஆண்டுச் செய் குறியோடு ஈண்டு நீ வரலே. *– ஐங் 48*

*தலைவி, "மீன் வலை வீசுவதில் வல்ல மீனவன் மகனும் வெண்மையான பற்களையுடைய இளைய பாண்மகளும் வரால் மீனைக் கொணர்ந்து சொரிந்த கூடை நிறைய மனையவள் பழமையான வெண்ணெல்லைக் கொடுக்கின்ற ஊரனே! நின் பரத்தை அங்கு நின்னிடம் செய்த குறியுடன் இங்கு வருகின்ற நின் வருகையை யாம் விரும்போம்." என்று தலைவனைப் பார்த்துக் கடிந்து கூறினாள்.*

## 49. யார்நலம் சிதையப் பொய்?

அம் சில் ஓதி அசைநடைப் பாண்மகள்
சில் மீன் சொரிந்து, பல்நெல் பெறூஉம்

யாணர் ஊர! நின் பாண்மகன்
யார் நலம் சிதையப் பொய்க்குமோ, இனியே? – *ஐங் 49*

*"அழகிய ஐம்பால் கூந்தலையும் அசைந்த நடையையும் உடைய பாண்மகள் சில மீன்களைத் தந்து, மிகுந்த நெல்லைப் பெறும் புதிய வருவாயையுடைய ஊரனே! நின் வாயிலான பாண்மகன் இனி யாருடைய நலம் கெடுமாறு பொய் கூறுவானோ, மற்ற பரத்தையரும் அவனது பொய்யையுணர்ந்து கொண்டாராகலான்" என்று வெறுத்துத் தலைவி உரைத்தாள்.*

### 50. வருந்துவோம் யாமும்

துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும் –
வஞ்சி ஓங்கிய யாணர் ஊர! –
தஞ்சம் அருளாய் நீயே; நின்
நெஞ்சம் பெற்ற இவளுமார் அழுமே. – *ஐங் 50*

*தோழி, "வஞ்சி மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள புதிய வருவாயை உடைய ஊரனே! நின்னைத் தன் நெஞ்சத்தில் கொண்ட இவள் எளியள். ஆதலால் இவளுக்கு அருளுக. நின் பிரிவாற்றாமல் இவளும் அழுகின்றாள். நீ பிரிந்தாலும், பல நாள்கள் தங்கி விடுதலால் துணையானவர் செல்வமே அல்லது இல்லம் சிறவாமையால் யாமும் வருந்துகின்றோம்!" என்று தோழி தலைவனுக்கு இடித்துச் சொன்னாள்.*

## <u>தோழி பேசுகிறாள்</u>

### 51. வெறுப்புக்குக் காரணம்

நீர் உறை கோழி நீலச் சேவல்
கூர் உகிர்ப் பேடை வயாஅம் ஊர!
புளிங்காய் வேட்கைத்து அன்று, நின்
மலர்ந்த மார்புஇவள் வயாஅ நோய்க்கே. – *ஐங் 51*

*"நீரில் வாழும் நீல நிறத்தையுடைய சேவற் கோழியைக் கூர்மையான நகங்களை உடைய அதன் பெட்டை எண்ணி வேட்கை மிக்கு வாழும் ஊரனே, இவளது காதல் நோய்க்கு நின் பரந்த மார்பு புளிங்காய் வேட்கை தானும் விளைப்ப*

*தன்றி நினைக்குந் தோறும் புலவிக்குக் காரணமாய் உள்ளது!" என்று தோழி தூது மறுத்துச் சொன்னாள்.*

## 52. நின் தேர் எங்கே?

**வயலைச் செங் கொடிப் பிணையல் தைஇச்**
**செவ் விரல் சிவந்த சேயரி மழைக் கண்**
**செவ் வாய்க் குறுமகள் இனைய;**
**எவ் வாய் முன்னின்று – மகிழ்ந! நின் தேரே?** *– ஐங் 52*

*"மகிழ்நனே! தலைவி வயலையின் செங்கொடியால் மாலை தொடுத்தாள். அதனால் விரல்கள் சிவந்தன. அவள் செவ் வரிகளை உடைய குளிர்ந்த கண்களை உடையாள். சிவந்த வாயை உடையாள். இளையவள். அவள் அழுது வருந்த, நீ நிற்பதற்குக் குறித்த இடம் எது? சொல்வாய்," என்று தோழி தலைவனைப் பார்த்து விளையாட்டாக வினவினாள்.*

## 53. இவ்வேறு பாடு எதனால்?

துறை எவன் அணங்கும், யாம் உற்ற நோயே? –
சிறை அழி புதுப் புனல் பாய்ந்தெனக் கலங்கிக்
கழனித் தாமரை மலரும்
பழன ஊர, நீ உற்ற சூளே. *– ஐங் 53*

*"அணையை உடைத்துக் கொண்டு வருகின்ற புதிய வெள்ளம் வயலுக்குள் புக, அக் கழனியில் உள்ள தாமரைகள் கலங்கி மலரும் வயல்களை உடையவனே, புனலாடிய நீர்த் துறையில் நீ நின்னுடைய காதற்பரத்தைக்குச் செய்து தந்த சூளுரையே அடைந்த நோய்க்குக் காரணமாகும். ஆதலால் அந்தத் துறையில் உள்ள தெய்வம் வருத்துமா? வருத்தாது!" என்று தலைவியின் தோழி தலைவனிடம் கூறினாள்.*

## 54. பஞ்சாய்க் கோதைக்கு அஞ்சினேன்

திண் தேர்த் தென்னவன் நல் நாட்டு உள்ளதை
வேனில்ஆயினும் தண் புனல் ஒழுகும்
தேனூர் அன்ன இவள் தெரிவளை நெகிழ,
ஊரின் ஊரனை நீ தர, வந்த

பஞ்சாய்க் கோதை மகளிர்க்கு
அஞ்சுவல், அம்ம! அம் முறை வரினே! — ஐங் 54

*"திண்மையான தேர்களை உடைய பாண்டியனின் நல்ல நாட்டில் உள்ளதாகிய, வேனிற் காலத்தும் வற்றாமல் குளிர்ந்த நீர் பெருகுவது தேனூர். அதை ஒத்தவள் இவள். இவளுடைய வளைகள் நெகிழுமாறு, நீ பரத்தையர் தெருவில் பிரிந்து சென்றனை. அப்போழ்து நெய்யணி குறித்து அத் தெருவில் முறையே வரின் அங்கு நின்னால் தரப்பட்டு நின்னைச் சூழ்ந்து நிற்கும் பஞ்சாய்க் கோதை மகளிர்க்கு அஞ்சி நின்றேன்."*

## 55. நிறம் மாறியது நெற்றி

கரும்பின் எந்திரம் களிற்று எதிர் பிளிற்றும்,
தேர் வண் கோமான், தேனூர் அன்ன இவள்
நல் அணி நயந்து நீ துறத்தலின்,
பல்லோர் அறியப் பசந்தன்று, நுதலே. — ஐங் 55

*தோழி, "கரும்பைச் சாறு பிழியும் எந்திரம் ஆண் யானை முழங்கும் முழக்கத்துக்கு மாறாக ஒலிக்கும் தேனூர். அது தேரினையும் கொடைத்தன்மையையும் உடைய மன்னனான பாண்டியனது அந்த ஊரைப் போன்ற இவளது நல்ல அழகை விரும்பி மணந்து கொண்டு மணந்த அணிமைக் காலத்திலேயே பரத்தமை ஒழுக்கத்தால் நயவாது பிரிந்து உறைதலால் இவளது நெற்றி பலரும் நன்கு அறியுமாறு பசலை கொண்டது!" எனத் தோழி தலைவனை நெருங்கிச் சொன்னாள்.*

## 56. நின் மொழியால் பயனில்லை!

பகல் கொள் விளக்கோடு இரா நாள் அறியா,
வெல் போர்ச் சோழர், ஆமூர், அன்ன இவள்
நலம் பெறு சுடர் நுதல் தேம்ப,
எவன் பயம் செய்யும், நீ தேற்றிய மொழியே? — ஐங் 56

*"பகற்பொழுதின் ஒளியையுடைய விளக்குகளால் இரவுப் பொழுதினை அறிய இயலாத வெல்லும் போரையுடைய சோழ மன்னரின் ஆமூர். அந்த ஆமூரைப் போன்று விளங்கு பவள் தலைவி. இத் தகையவளின் நலம் பெற்ற ஒளி திகழும்*

நெற்றி பசந்து ஒளி மழுங்குதலால், நீ பண்டு தெளித்துக் கூறிய சொற்கள் என்ன பயனைச் செய்தன? நின் செயலுடன் ஒவ்வாது பொய்த்தலால் இப்போது நீ கூறுவனவும் அத் தகையனவாய் ஆவதே அல்லாது ஒரு பயனும் செய்யாது!" எனத் தோழி தலைவனிடம் எடுத்து உரைத்தாள்

## 57. பேரழகுடையவளோ அவள்?

பகலில் தோன்றும் பல் கதிர்த் தீயின்
ஆம்பல்அம் செறுவின் தேனூர் அன்ன
இவள் நலம் புலம்பப் பிரிய,
அனைநலம் உடையளோ மகிழ்ந! நின் பெண்டே? *– ஐங் 57*

"பகற்பொழுதை உண்டாக்கும் செங்கதிரைப் போன்று தோன்றும் பல கதிர்களையுடைய வேள்வித் தீயையும் ஆம்பல் நிறைந்த வயல்களையும் உடையது தேனூர். அந்த ஊரைப் போன்றவள் இவள். இவளது அழகு தனிமையுற்று வருந்து மாறு பிரிதலின், நீ அங்ஙனம் பிரிந்து போகத் தக்கவாறு, நின் பரத்தை அவ்வளவு அழகு உடையவளோ!" எனத் தோழி தலைவனை எதிர்த்து வினவினாள்.

## 58. அவர்க்கும் அனையையால்!

விண்டு அன்ன வெண்ணெற் போர்வின்
கை வண் விராஅன், இருப்பை அன்ன
இவள் அணங்குற்றனை போறி;
பிறர்க்கும் அனையையால்; வாழி நீயே! *– ஐங் 58*

"மலையைப் போல் உயர்ந்த வெண்ணெல் போர்களையும் வரையாமல் கொடுக்கும் கொடையையும் உடையவன் விராஅன் என்பவன். அவனுடைய ஊர் இருப்பை. அவ் ஊரை ஒத்தவள் இவள். இத் தகையவளால் வருத்தம் அடைந்தவன் போல் துன்புற்றாய். பிற மகளிரிடமும் நீ இத் தன்மையை உடையாய்! ஆதலால் அமைக" எனத் தோழி தலைவனுக்கு இடித்துச் சொன்னாள்.

## 59. நோமென் நெஞ்சு!

கேட்டிசின் – வாழியோ, மகிழ்ந! ஆற்றுற,
மையல் நெஞ்சிற்கு எவ்வம் தீர

நினக்கு மருந்தாகிய யான், இனி,
இவட்கு மருந்து அன்மை நோம்என் நெஞ்சே! *– ஐங் 59*

*"மகிழ்நனே! கேட்பாயாக! மயக்கம் உடைய நெஞ்சில் எழுந்த வருத்தம் நீங்கப் பண்டு நீ ஆற்றும்படி மருந்தாய்ப் பயன்பட்டேன் யான் இப்போது இவளின் ஆற்றாமையைத் தீர்க்கமாட்டாமையின், அவ்வாறு பயன்படும்படி அமை கல்லேன். எனவே இவளை ஆற்றுவித்தல் குறித்து என் மனம் வருந்துகின்றது" எனத் தோழி தலைவனுக்கு உரைத்தாள்.*

### 60. இவள் தந்தை கை வேலுக்கு அஞ்சுக

பழனக் கம்புள் பயிர்ப்பெடை அகவும்
கழனி ஊர! நின் மொழிவல்; என்றும்
துஞ்சுமனை நெடு நகர் வருதி;
அஞ்சாயோ இவள் தந்தை கை வேலே? *– ஐங் 60*

*"வயல்களில் வாழும் கம்புட் கோழி அழைக்கப்படுதலை யுடைய பெண் கோழியை அழைக்கும் கழனிகளை உடைய ஊரனே! நினக்கு ஒன்றைக் கூறுவேன், கேள், உள்ளே இருப்பவர் இனிதாக உறங்கும், மனைகளையுடைய பெரிய நகரத்தில் எந்த நாளும் இரவிலே வருகின்றாய். ஆதலால் இவள் தந்தையின் கையிலே உள்ள வேலுக்கு அஞ்ச மாட்டாயோ? யாங்கள் பெரிதும் அஞ்சி வருந்துகின்றோம்!" என்று தோழி மணவாது காலம் தாழ்த்திய போது தலை வனைப் பார்த்துச் சொன்னாள்.*

## தலைவி பேசுகிறாள்

### 61. திருமணம் செய்ய விரும்பு!

நறு வடி மாஅத்து விளைந்து உகு தீம் பழம்
நெடு நீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்,
கை வண் மத்தி, கழாஅர் அன்ன
நல்லோர் நல்லோர் நாடி,
வதுவை அயர விரும்புதி நீயே. *– ஐங் 61*

*"நறுமணம் உடைய பிஞ்சுகளை உடைய மா மரத்தில் பழுத்து விழும் இனிய பழம், ஆழ்ந்த நீரையுடைய பொய்கை*

யில் 'துடும்' என்ற ஓசையுடன் விழும் இயல்பு வாய்ந்த, கொடைத் தன்மையுடைய 'மத்தி' என்பவனின் 'கழார்' என்ற ஊரைப் போன்ற நல்ல மகளிரையே நீ மணம் செய்து கொள்ள விரும்புவாய்! அங்ஙனம் இருக்க, இனி என்னிடத்து இப்படி நிகழாது என்று கூறுவது ஏன்?'' என்று தலைவி தலைவனைப் பார்த்து வினவினாள்

## 62. இப்போது நின் தேர் எங்குள்ளது?

இந்திர விழவில் பூவின் அன்ன
புன் தலைப் பேடை வரி நிழல் அகவும்
இவ் ஊர் மங்கையர்த் தொகுத்து, இனி
எவ் ஊர் நின்றன்று – மகிழ்ந! நின் தேரே? – *ஐங் 62*

"மகிழ்நனே! மலரைப் போன்று புல்லிய தலையை உடைய குயிற்பேடை செறியாத நிழலில் இருந்து கூவும் இவ் ஊரில் அடுத்த இந்திர விழாவில் விரும்பிய மங்கையர் பலரைக் கொணர்ந்து தொகுத்த நின் தேர் இப்போது எந்த ஊரில் போய் நிற்கின்றது?'' என்று தலைவி தலைவனை நோக்கிப் போற்றா ஒழுக்கம் நீக்க வினவினாள்

## 63. எச்சிற் கனி உண்ணேன்!

பொய்கைப் பள்ளிப் புலவு நாறு நீர்நாய்
வாளை நாள் இரை பெறூஉம் ஊர!
எம்நலம் தொலைவதாயினும்
துன்னலம் – பெரும – பிறர்த் தோய்ந்த மார்பே. – *ஐங் 63*

"பெரும, பொய்கையில் வாழும் புலால் நாறும் நீர் நாய் வாளை மீனை நாள் இரையாகப் பெறும் அத்தகைய ஊரனே, நின்னைக் கூடி முயங்காத போது எம் அழகு முற்றும் கெடுவ தானாலும், பிறரைக் கூடித் தழுவிய நின் மார்பை யாம் கூட மாட்டோம்'' என்று தலைவி வெறுத்து உரைத்தாள்

## 64. பரத்தையுடன் புனலாடப் பலர் பார்த்தனர்

அலமரல் ஆயமோடு அமர்துணை தழீஇ
நலம் மிகு புதுப் புனல் ஆடக், கண்டோர்

ஒருவரும் இருவரும் அல்லர்;
பலரே தெய்ய; எம் மறையாதீமே! — *ஐங் 64*

*"சுழன்று திரியும் ஆயத்தாருடன் நின்னால் விரும்பப் பட்டு நினக்குப் புணர் துணையான பரத்தையைத் தழுவிக் கொண்டு நீ அழகிய புதிய புனலில் ஆடப் பார்த்தவர் ஒருவரா இருவரா பலர் ஆதலால் அதை நீ எமக்கு மறைக்க வேண்டா!" என்று தலைவி புறக்கணித்து தலைவனை இடித்து உரைத்தாள்*

## 65. மகனைப் பெற்ற என்னை மருவாதே

கரும்பு நடு பாத்தியில் கலித்த ஆம்பல்
சுரும்பு பசி களையும் பெரும் புனல் ஊர!
புதல்வனை ஈன்ற எம்மேனி
முயங்கன்மோ தெய்ய; நின் மார்பு சிதைப்பதுவே. — *ஐங் 65*

*"கரும்பை நடுவதற்குச் செய்த பாத்தியில் தழைத்து வளர்ந்த நீர் ஆம்பல் அங்கு வரும் வண்டுகளின் பசியைத் தன்னிடத்துத் தேனால் போக்குகின்ற ஊரனே, புதல்வனைப் பெற்று முதிர்ந்த எம் மேனியைத் தழுவ வேண்டா! அது நின் மார்பின் அழகைக் கெடுத்து விடும்" என்று தலைவி ஆற்றாமையால் தலைவனைப் பார்த்துக் கூறினாள்*

## 66. எவள் தடுத்தவள்?

உடலினென் அல்லேன்; பொய்யாது உரையோ;
யார் அவள் மகிழ்ந! தானே — தேரொடு,
தளர்நடைப் புதல்வனை உள்ளி, நின்
வள மனை வருதலும், வௌவியோளே? — *ஐங் 66*

*"மகிழ்நனே! உருட்டி விளையாடும் சிறிய தேரின் பின் தளர்ந்த நடையை உடையவனாய்ச் செல்லும் புதல்வனை விரும்பி நீ நின் இல்லத்துக்கு வரும்போது நின்னைத் தடுத்துச் சென்றவள் எவள்? கூறுக யான் சினத்துடன் இதனை வினவவில்லை, பொய் கூறாது உண்மையை சொல்லுக" என்று தலைவி தலைவனிடம் புலந்து கூறினாள்*

## 67. பழித்தவள் அறியாமையள்!

மடவள் அம்ம, நீ இனிக் கொண்டோளே –
'தன்னொடு நிகரா என்னொடு நிகரிப்
பெருநலம் தருக்கும்' என்ப; விரிமலர்த்
தாது உண் வண்டினும் பலரே,
ஓதி ஒள்நுதல் பசப்பித்தோரே. – *ஐங் 67*

*"நீ இப்போது பழகும் பரத்தை தன்னுடன் நிகர் இல்லாத என்னுடன் தன்னை ஒப்பாகக் கருதாத் தன் பெருநலத்தை வியந்து என்னைப் பழித்துக் கூறினாள் என்பர் முன்பு நின்னால் நுகரப்பட்டு ஒள்ளிய அழகிய நெற்றி நிறம் மாறப்பட்ட மகளிர் வண்டினம் தேனையுண்டு கழித்த மலரினும் பலர் அதனை அவள் அறியாள் ஆகலான் அவள் அறியாமை நிரம்பிய இளையளே ஆவாள்!" என்று தலைவனைக் கண்டு காணாதது போலப் பார்த்துத் தலைவி தூது வந்தவரிடம் கூறினாள்*

## 68. அடக்கம் அற்றவளோ அவள்?

கன்னி விடியல், கணைக் கால் ஆம்பல்
தாமரை போல மலரும் ஊர!
பேணாளோ நின் பெண்டே –
யான் தன் அடங்கவும் தான் அடங்கலளே? – *ஐங் 68*

*"திரண்டு தண்டையுடைய ஆம்பல் விடியற் காலத்தில் தாமரையைப் போல் மலரும் ஊரனே, நான் அடங்கும் ஆறு என்று அடங்கியிருக்கவும், அவள் தான் அடங்காது யான் புறம் சொன்னேன் எனப் பிறர்க்குக் கூறுகின்றாளாதலான் நினக்குப் பெண்டான காதற்பரத்தை அடக்கத்தைப் பொருளாகக் கொள்ளாதவளோ?" எனத் துணிவாய்த் தலைவனிடம் தலைவியுரைத்தாள்*

## 69. மறுப்பதேன் நீ?

கண்டனெம் அல்லமோ, மகிழ்ந! நின் பெண்டே?
பலர் ஆடு பெருந் துறை மலரொடு வந்த
தண் புனல் வண்டல் உய்த்தென,
உண்கண் சிவப்ப, அழுது நின்றோளே! – *ஐங் 69*

"மகிழ்நனே! பலரும் கூடி விளையாடும் நீர்த்துறையில் மலருடன் பெருகி வந்த குளிர்ந்த புனல் விளையாட்டுக்காகத் தான் அமைத்திட்ட பாவையைச் சிதைத்தது, மையுண்ட கண்கள் மேலும் சிவக்க அழுதபடி நின்றவள் நின் பெண்டே ஆவாள் யாம் அவளைத் தெளியக் கண்டோம் ஆதலால் நீ இல்லை என மறுப்பது ஏன்?" எனத் தலைவி தலைவனைப் பார்த்து கொதித்து வினவினாள்

## 70. யாம் பேய் அனையம்!

பழனப் பல்மீன் அருந்த நாரை
கழனி மருதின் சென்னிச் சேக்கும்
மா நீர்ப் பொய்கை யாணர் ஊர!
தூயர்; நறியர் – நின் பெண்டிர்;
பேஎய் அனையம், யாம்; சேய் பயந்தனமே. – *ஐங் 70*

*தலைவி, "பழனங்களில் உள்ள பல மீன்களை உண்ட நாரை கழனியில் உள்ள மருத மரத்தின் உச்சியில் தங்கும் மிக்க நீரையுடைய பொய்கையையும் புது வருவாயையும் உடைய ஊரை உடையவனே, யாம் மகவைப் பெற்றுப் பேயினைப் போல் விளங்கினோம் ஆனால் நின் பெண்டிர் தூய்மையும் நறுமணமும் உடையவர் ஆதலால் அவரிடமே செல்லுக!" என்று தலைவனைப் பார்த்துச் சூட்டுடன் சொன்னாள்*

## ஆற்று நீராடல்

## 71. பழிச்சொல் மறைத்தல் முடியுமோ?

சூது ஆர் குறுந் தொடிச் சூர் அமை நுடக்கத்து
நின் வெங் காதலி தழீஇ, நெருநை
ஆடினை என்ப, புனலே; அலரே
மறைத்தல் ஒல்லுமோ, மகிழ்ந?
புதைத்தல் ஒல்லுமோ, ஞாயிற்ற[illegible] ஒளியே? – *ஐங் 71*

*"மகிழ்நனே! சூதாடுகாய் போன்ற மூட்டுவாயை உடைய சிறிய தொடியும் வளைவு பொருந்திய வளையும் உடைய நின்னால் விரும்பப்பட்ட நின் காதலியான பரத்தையைத் தழுவிக் கொண்டு நேற்று நீ புனலாடினாய் என்று பலரும்*

கூறுகின்றனர் ஞாயிற்றின் ஒளியை எதனாலும் சிறிதும் மறைக்க முடியாது. அது போன்று நீ புனலாடியதால் எழுந்த பழிச்சொல் நினது மாயப் பொய்ம் மொழிகளால் சிறிதும் மறைக்க முடியாது!" என்று தலைவி தலைவனைப் பார்த்துக் கொதித்துக் கூறினாள்

## 72. நீராடுதற்குத் துணையானாள்

வயல் மலர் ஆம்பல் கயில்அமை நுடங்கு தழைத்
திதலை அல்குல், துயல்வரும் கூந்தல்,
குவளை உண்கண், ஏஎர் மெல்லியல்
மலர் ஆர் மலிர் நிறை வந்தெனப்,
புனலாடு புணர்துணை ஆயினள், எமக்கே! — *ஐங் 72*

*"வயலில் மலர்ந்த ஆம்பற் பூவால் கட்டப்பட்ட மூட்டு வாய் பொருந்திய அசையும் தழையையும் மென்மையான அல்குலையும் அசையும் கூந்தலையும், குவளை மலர் போன்ற மை பூசப்பெற்ற கண்களையும், அழகும் மென்மைத் தன்மை யும் பொருந்திய இயல்புடையவள் முன்பு யாம் களவில் ஒழுகிய காலத்தில் பல வகைப் பூக்களைச் சுமந்து புதுநீர் வர அதில் நீராடுதற்கு எமக்குத் துணை ஆனாள்," என்று தலைவன் தோழிக்குத் தலைவி கேட்கச் சொன்னான்*

## 73. மீண்டும் புனலாட விரும்புகிறேன்

வண்ண ஒண் தழை நுடங்க, வால் இழை
ஒண்ணுதல் அரிவை பண்ணை பாய்ந்தெனக்,
கள்நறுங் குவளை நாறித்
தண்ணென்றிசினே, பெருந்துறைப் புனலே. — *ஐங் 73*

*"வெண்மையான அணிகலனையும் ஒள்ளிய நெற்றியை யும் உடைய தலைவி அழகிய தழையுடை இடையில் கிடந்து அசையப், பண்டு களவில் பெருந்துறை நீரில் விளை யாடுதற்காகப் புகுந்தாள் அது தேன் பொருந்திய நறுமணம் உடைய குவளையின் மணம் கமழ்ந்து குளிர்ந்ததாக ஆயிற்று ஆதலால் இப்போதும் அந்தப் புனலாட்டை நான் விரும்புகி றேன்" என்று தலைவன் தலைவி கேட்பத் தோழியிடம் சொன்னான்*

## 74. வானிருந்த மயில்தோகை

விசும்புஇழி தோகைச் சீர் போன்றிசினே –
பசும் பொன் அவிர் இழை பைய நிழற்றக்,
கரை சேர் மருதம் ஏறிப்
பண்ணை பாய்வோள் தண் நறும் கதுப்பே. *– ஐங் 74*

*"பசும் பொன்னால் ஆன அணிகலன்கள் மெல்ல ஒளிவீசக் கரையில் நின்ற மருத மரத்தின் மீது ஏறி விளை யாடிய இவளது குளிர்ந்த நறுமணம் வாய்ந்த கூந்தல் வானினின்று இறங்கும் தோகை மயிலின் தோற்றத்தை ஒத்திருந்தது" என்று தலைவன் தலைவி கேட்பத் தோழிக்குச் சொன்னான்*

## 75. பழி கூறத் தொடங்கிற்று ஊர்

பலர் இவண் ஒவ்வாய், மகிழ்ந! – அதனால்,
அலர் தொடங்கின்றால் ஊரே – மலர
தொல் நிலை மருதத்துப் பெருந் துறை
நின்னோடு ஆடினள், தண் புனல் – அதுவே *– ஐங் 75*

*தோழி தலைவனை நோக்கி, "மகிழ்ந, பூக்களை யுடைய பழமையான நிலைமையுடைய மருத மரங்கள் செறிந்திருந்தும் பெருந்துறையில் ஒருத்தி நின்னுடன் புனலாடினாள் ஆடவும் அதை நீ எமக்கு முன் ஒப்புக்கொள்ளாமல் மறைத்தாலும் நின்னை அங்குக் கண்டவர் இவ் ஊரில் பலர் எனவே, ஊர் அலர் கூறத் தொடங்கியது இனி நீ மறைப்பதில் பயன் ஏதும் இல்லை" என்றாள்.*

## 76. இளையாள் புனலாடினாள்!

பஞ்சாய்க் கூந்தல், பசு மலர்ச் சுணங்கின் –
தண் புனல் ஆடித், தன் நலம் மேம்பட்டனள் –
ஒண் தொடி மடவரல், நின்னோடு,
அந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே. *– ஐங் 76*

*தோழி, "தண்டான் கோரையைப் போல் கூந்தலும், பசிய பூப்போலும் சுணங்கும் ஒளியுடைய தொடியும் உடைய இளையாள் பரத்தை ஒருத்தி, நின்னுடன் குளிர்ந்த புனலாடினாள் அதனால் வான் மகளிரும் வணங்குதற்குரிய*

தெய்வம் போன்று தன் நலம் மேம்படலானாள் ஆதலால் நீ அதனை மறைப்பது ஏன்?" என்று தலைவனை வினவினாள்

## 77. பழிகூறப் புனலாடுவோம் வா

அம்ம வாழியோ, மகிழ்ந! நின் மொழிவல்;
பேர் ஊர் அலர் எழ நீர் அலைக் கலங்கி,
நின்னொடு தண் புனல் ஆடுதும்;
எம்மொடு சென்மோ; செல்லல், நின் மனையே. *– ஐங் 77*

*பரத்தை, தலைவனிடம், "அன்பனே, உனக்கு ஒன்றைக் கூறுவேன், கேள்! நீ நின் மனைக்குச் செல்லாமல் எம்முடன் கூடி வருவாயாயின், இப் பெரிய ஊர் பழி கூற, நீர் அலைப்ப தால் கலங்கி மகிழ்ச்சி மிகும்படி நாம் குளிர்ந்த புனலில் ஆடுவோம் வாராய்" என்று கூறினாள்*

## 78. புதிய நீரில் ஆட வா

கதிர் இலை நெடு வேற் கடு மான் கிள்ளி
மதில் கொல் யானையின், கதழ்பு, நெறி வந்த,
சிறை அழி புதுப்புனல் ஆடுகம்
எம்மொடு கொண்மோ, எம் தோள் புரை புணையே. *– ஐங் 78*

*தோழி, "மகிழ்ந! நின் இல்லத்துக்குப் போய் நின் மனைவி யுடன் கூடிப் புனலாடுவதை விடுத்து, எம்முடன் வந்து, புணையைப் போன்ற எம் தோளைப் பற்றிப் புனல் ஆடுவா யாயின், யாம் ஒளி வீசும் இலையையுடைய நீண்ட வேலும் விரைவான ஓட்டத்தையுடைய குதிரையையும் உடைய கிள்ளியின் பகைவரின் மதிலை அழிக்கும் யானை போல் தன்னெறியில் விரைந்து வந்து கரையை அழிக்கும் புதிய நீரில் நின்னுடன் ஆடுவோம்' வா" என்று தலைவனை நோக்கிச் சொன்னாள்.*

## 79. நீ யார் மகனை?

'புதுப் புனல் ஆடி அமர்த்த கண்ணள்,
யார் மகள் இவள் எனப் பற்றிய மகிழ்ந'
யார் மகள் ஆயினும் அறியாய்;
நீ யார் மகனை, எம் பற்றியோயே? *– ஐங் 79*

*பரத்தையின் தோழி, "புதிய நீராடிச் சிவந்த கண்ணை உடையவளான இவள் யார் மகள் எனச் சொல்லிக் கைப் பற்றியவனே, மகிழ்ந, இவர் யார் மகளாயினும் அறியாமல் எம் கையைப் பற்றினாய் ஆதலால் நீ யார் மகன்? அதனை முதலில் கூறுக!" என்றாள்*

### 80. ஊடல் கொள்ளோம்

**புலக்குவம் அல்லேம்; பொய்யாது உரைமோ:**
**நலத்தகு மகளிர்க்குத் தோட் துணை ஆகித்,**
**தலைப் பெயல் செம் புனல் ஆடித்**
**தவநனி சிவந்தன மகிழ்ந! நின் கண்ணே.** *– ஐங் 80*

*தலைமகள், "மகிழ்ந, நற்குணங்களால் தகுதியுடைய வரான மகளிர்க்குத் தோள் துணையாகி, முதற்பெயலான மழையால் பெருகி வந்த புதிய நீரில் ஆடியதால் நின் கண்கள் மிகவும் சிவப்பை அடைந்தன அஃது உண்மையே அன்றோ? சொல்லுக அது பற்றி யாம் புலத்தல் கொள் ளோம் நீ பொய்யாது கூறுக!" என்று வருந்திக் கூறினாள் தலைவனிடம்*

## <u>வருந்தி ஊடல்</u>

### 81. மணாட்டி வருந்துவாள்!

**குருகு உடைத்து உண்ட வெள் அகட்டுயாமை**
**அரிப்பறை வினைஞர் அல்குமிசைக் கூட்டும்,**
**மலர் அணி வாயிற் பொய்கை, ஊர! நீ**
**என்னை 'நயந்தனென்' என்றி, நின்**
**மனையோள் கேட்கின், வருந்துவள் பெரிதே.** *– ஐங் 81*

*பரத்தை, "குருகுகள் உடைத்து உண்டு கழித்த வெண்மை யான ஆமை இறைச்சியை, அரிப்பறையை முழக்கும் உழவர், தம் மிக்க உணவுடன் கூட்டி உண்ணும் மலரால் அழகுடைய துறையை உடைய ஊரனே, நீ என்னை விரும்பினேன் என்று கூறுகின்றாய் இதனை நின் மனைவி கேட்பின் பொறுத்துக் கொள்ளாமல் மிகவும் வருந்துவாள்" என்று தலைவனை நோக்கிக் கூறினாள்*

## 82. பாண திரும்புக

வெகுண்டனள் என்ப, பாண! நின் தலைமகள் –
'மகிழ்நன் மார்பின அவிழ்இணர் நறுந் தார்த்
தாது உண் பறவை வந்து எம்
போது ஆர் கூந்தல் இருந்தன' எனவே. *– ஐங் 82*

*தலைமகள் பாணனை நோக்கி, "பாணனே, மகிழ்நனின் மார்பில் உள்ள முறுக்கு அவிழ்ந்த மலர்க் கொத்துகளால் கட்டப்பட்ட நறுமணமுடைய மாலையில் தேனை உண்ட வண்டினம், பின்பு என் மலர்க் கூந்தலில் தங்கின என்று அவளுக்குப் பக்கத்தில் உள்ளவர் கூறக் கேட்டலும், நின் தலைவியான பரத்தை வெகுண்டாள் என்று பலரும் உரைக்கின்றனர். இதையும் பொறுத்துக் கொள்ளாதவள். நீ இங்கு வருவதை அறியின் மிகவும் சினம் கொள்வாள். ஆதலால் நீ விரைவாய் அகன்று போவாயாக!" எனக் கூறினாள்.*

## 83. மெல்ல மெல்ல நீங்குவாய்!

மணந்தனை அருளாய்ஆயினும் பைபயத்
தணந்தனை ஆகி, உய்ம்மோ, நும் ஊர்
ஒண் தொடி முன் கை ஆயமும்
தண் துறை ஊரன் பெண்டு எனப் படற்கே. *– ஐங் 83*

*தலைவி, தலைவனை நோக்கி, "மகிழ்ந, எம்மை மணந்து கொண்ட நீ எமக்கு நின் அருளை நெடிது செய்யாது போனாலும் எம் ஊரில் உள்ள தொடியணிந்த முன் கையையுடைய பரத்தையர் பலரும் தண்துறையூரனாகிய நினக்குப் பெண்டு எனக் கூறப்படும் சிறப்புப் பெறுமாறு மெல்ல மெல்ல நீங்கி ஒழுகுவாய்!" என்று கூறினாள்.*

## 84. என் ஆவாளோ தலைவி!

செவியில் கேட்பினும் சொல் இறந்து வெகுள்வோள்,
கண்ணின் காணின், என்னாகுவள் கொல் –
நறு வீ ஐம்பால் மகளிர் ஆடும்
தைஇத் தண் கயம் போல,
பலர் படிந்து உண்ணும் நின் பரத்தை மார்பே? *– ஐங் 84*

தோழி தலைவனை நோக்கி, "மகிழ்ந, நறுமண மலர்களை அணிந்த கூந்தலையுடைய மகளிர் ஆடும் தைத் திங்களின் குளிர்ந்த நீர்நிலை போல் பலர் முயங்கி இன்பம் நுகரும் நின் மார்பைச் சிறப்பித்து மற்றவர் கூறத் தன் காதால் கேட்பினும் சொல்வதற்கு அரிய சினம் கொள்ளும் இவள், பரத்தை செய்த குறியுடன் தோன்றும் அதனைத் தன் கண்களாலேயே நேரில் காண்பாளாயின், என்ன ஆவாளோ?" என்று உரைத்துத் தூதினை மறுத்தாள்.

## 85. நகைக்க மாட்டாரோ?

**வெண் நுதற் கம்புள் அரிக் குரற் பேடை**
**தண் நறும் பழனத்துக் கிளையோடு ஆலும்**
**மறு இல் யாணர் மலி கேழ் ஊர! நீ**
**சிறுவரின் இனைய செய்தி;**
**நகாரோ – பெரும! நின் கண்டிசினோரே?** *– ஐங் 85*

தலைவி தலைவனை நோக்கி, "வெண்மையான தலையை யுடைய கம்புள் கோழியின் அரிக்குரலையுடைய பெட்டைக் கோழி குளிர்ந்த நறுவிய நிலங்களில் உள்ள மற்றப் பறவை களுடன் தங்கும் குற்றம் இல்லாத புது வருவாய் மிக்க ஊரை உடையவனே, நீ சிறுவரைப் போலப் பின்னால் இருந்து வருந்தத் தக்கனவற்றைச் செய்கின்றாய். ஆதலால், பெரும, நின்னைக் கண்டவர் இச் செயல் பற்றி நகுதலைச் செய் வாரோ!" என்று உரைத்தாள்.

## 86. நின் மனைவியுடன் இன்புறுக!

**வெண் தலைக் குருகின் மென் பறை விளிக் குரல்**
**நீள் வயல் நண்ணி இமிழும் ஊர!**
**எம் இவண் நல்குதல் அரிது;**
**நும் மனை மடந்தையொடு தலைப்பெய்தீமே.** *– ஐங் 86*

வெண்மையான தலையையுடைய குருகு இனத்தின் பார்ப்புகளின் அழைக்கும் குரல் நீண்ட வயல்களை அடைந்து ஒலிக்கும் ஊரனே, இனி நீ எம்மை அருளுதல் கூடாது. ஆதலால் நின் மனையை அடைந்து நின் மனைவியுடன் கூடி இன்புறுக" என்று பரத்தை தலைவனிடம் கூறினாள்.

## 87. என்னை வெறுத்துக் கூறுவானேன்

பகன்றைக் கண்ணிப் பல் ஆன் கோவலர்
கரும்பு குணிலா மாங்கனி உதிர்க்கும்
யாணர் ஊர! நின் மனையோள்
யாரையும் புலக்கும்; எம்மை மற்று எவனோ? – ஐங் 87

*பரத்தை "பகன்றை மலரால் கட்டப்பட்ட மாலையைச் சூடிய பல ஆக் கூட்டங்களையுடைய ஆயர்கள் கரும்பை, அடிக்கும் குறுந்தடியாகக் கொண்டு மாம்பழத்தை உதிர்க்கும் புது வருவாயை உடைய ஊரனே, நின் மனைவி யாவரையும் வெறுத்துச் சொல்லும் குணம் உடையவளாதலால் என்னைப் வெறுத்துக் கூறுதற்கு என்ன?" என்று தலைவியை இகழ்ந்து விரட்டிக் கூறினாள்.*

## 88. அகத்தே விரும்புகிறோம்

வண் துறை நயவரும் வள மலர்ப் பொய்கைத்
தண் துறை ஊரனை, எவ்வை எம் வயின்
வருதல் வேண்டுதும் என்பது
ஒல்லேம் போல் யாம் அது வேண்டுதுமே. – ஐங் 88

*பரத்தை "வண்டுகள் வாழும் யாவரும் விரும்பும் வள மான பொய்கையின் குளிர்ந்த துறையினை உடைய ஊரனை யாம் எம்மிடமே வருவதை வேண்டுகின்றோம் என்று எம் தங்கை சொல்வதைப் புறத்தே விரும்பாதவர் போன்று காட்டி அகத்தே அதை விரும்பி ஒழுகுகின்றோம்" என்று சினந்து உரைத்தாள்.*

## 89. பெண்டென்றே விரும்பினான்!

அம்ம வாழி, பாண! எவ்வைக்கு
எவன்? பெரிது அளிக்கும் என்ப – பழனத்து
வண்டு தாதூதும் ஊரன்
பெண்டு என விரும்பின்று, அவள் தன் பண்பே. – ஐங் 89

*காதற் பரத்தை, "பாணனே, கேள், பழனங்களில் பூத்துள்ள பூக்களில் வண்டுகள் தேனை உண்ணும் ஊரன், எம் தங்கை யான தலை மகளைப் பெரிதும் அன்பு காட்டி*

ஒழுகுகின்றான் என்று அவளுக்குப் பாங்காயினார் சொல்லுவ தென்னை? அவளைத் தனக்குப் பெண்டெனக் கருதி அவன் விரும்பி ஒழுகுகின்றதற்குக் காரணம் அவள் தன் மனைவி என்ற பண்புடைமையே அன்றி வேறில்லை. இதை அவர்கள் அறியவில்லை போலும்" என்று தலைவியின் பங்காயினார் கேட்பக் கூறினாள்.

### 90. என்னே அறியாமை!

**மகிழ்நன் மாண்குணம் வண்டு கொண்டனகொல்?**
**வண்டின் மாண்குணம் மகிழ்நன் கொண்டான்கொல்?**
**அன்னது ஆகலும் அறியாள்,**
**எம்மொடு புலக்கும், அவன் புதல்வன் தாயே.** *– ஐங் 90*

காதற் பரத்தை தலைவனின் பங்காயினார் கேட்ப, மகிழ்நனின் சிறந்த குணங்களை வண்டுகள் அடைந்தனவோ, வண்டுகளின் சிறந்த குணங்களை அவன் அடைந்தானோ, செயல் ஒற்றுமை கொண்டு அறிய இயலவில்லை. ஆதலால் அச் செயல் அவனுக்கு இயல்பாகலும் அதனால் அவனை விலக்குதலும் ஆகாமையும் அறியாதவளாய், அவனுடைய மகனுக்குத் தாயான தலைவி, யாம் அவன் மனைக்குச் செல்லாதபடி தடுக்கின்றோம் என்று எம்முடன் புலக்கின்றாள். அவளது அறியாமை இருந்தவாறு என்னே!" என்று உரைத்தாள்.

## எருமை ஊரன்

### 91. தலைவி இளையவள்!

நெறி மருப்பு எருமை நீல இரும் போத்து
வெறி மலர்ப் பொய்கை, ஆம்பல் மயக்கும்
கழனி ஊரன் மகள் இவள்;
பழன வெதிரின் கொடிப் பிணையலளே. *– ஐங் 91*

தோழி, "வளைந்த கொம்புகளை உடைய எருமையின் கரிய பெரிய ஆண் மணமுற்ற பூக்கள் நிறைந்த பொய்கை யில் உள்ள ஆம்பலைச் சிதைக்கும் கழனிகளை உடைய ஊரனுக்கு மகள் இவள். பழனங்களில் உள்ள கரும்பின்

மலரால் தொடுக்கப்பட்ட நீண்ட மாலையை உடையவள் ஆவாள்" என்று தலைவியிடம் எதிர்ப்பட்டு கூறினாள்.

## 92. நானே மணக்க வருவேன்!

கருங் கோட்டு எருமைச் செங்கட் புனிற்று ஆ
காதல் குழவிக்கு ஊறு முலை மடுக்கும்
நுந்தை, நும் ஊர் வருதும் –
ஒண் தொடி மடந்தை! நின்னை யாம் பெறினே. – *ஐங் 92*

தலைவன் தலைவியை நோக்கி, "பெரிய கொம்பையும் சிவந்த கண்ணையும் ஈன்ற அணிமையையும் உடையதாய எருமை தன் அன்புடைய கன்றுக்குச் சுரக்கும் முலை தந்து பாலூட்டும் நின் தந்தையின் ஊர்க்கு, ஒளி பொருந்திய வளை அணிந்த மடந்தையாகிய நின்னை யாம் கூடுமேல் யானே வருவேன்" எனக் கூறினான்.

## 93. வண்டு மொய்ப்பதன் காரணம்!

எருமை நல் ஏற்றினம் மேயல் அருந்தெனப்,
பசு மோரோடமோடு ஆம்பல் ஒல்லா,
செய்த வினைய மன்ற – பல் பொழில்
தாது உண் வெறுக்கைய ஆகி, இவள்
போதுஅவிழ் முச்சி ஊதும் வண்டே. – *ஐங் 93*

தோழி, "அன்னையே! பல சோலைகளிலும் மலர்ந்துள்ள பூக்களின் தேனான உணவை மிகுதியாய் உண்டு, இவளது மலர்ந்த பூவணிந்த கூந்தலை மொய்த்து முரலும் வண்டின் கூட்டம், எருமையின் நல்ல ஏற்றினம் மேய்ந்ததால் பசுமையான செங்கருங்காலியிலும் ஆம்பலிலும் பொருந்தாவாயின. அவை தேன் சேர்ப்பதாகிய செயல் முற்றி, இங்ஙனம் மொய்ப்பன வாயின" என்றாள் வேலிப்புறம் நின்ற தலைவன் கேட்ப.

## 94. தலைவி ஊர் உள்ள இடம்

மள்ளர் அன்ன தடங்கோட்டு எருமை
மகளிர் அன்ன துணையொடு வதியும்
நிழல் முதிர் இலஞ்சிப் பழனத்ததுவே –

கழனித் தாமரை மலரும்,
கவின் பெறு சுடர் நுதல் தந்தை, ஊரே. — ஐங் 94

"அழகு பொருந்திய ஒளி வீசும் நெற்றியை உடையவளுக்குத் தந்தையின் கழனியில் தாமரை மலரும் ஊர், வீரர் போன்ற பெருங் கொம்பையுடைய எருமை அவர் தம் மகளிர் போன்ற துணையான பெண்ணெருமையுடன் தங்கும் நிழல் பொருந்திய நீர்நிலைக்கு அருகில் உள்ள பழனத்தில் உள்ளதாகும்." என்று மணம் விரும்பிய தலைவன் கூறினாள்.

## 95. அருநோய் செய்தனன் எமக்கு

கருங் கோட்டு எருமை கயிறு பரிந்து அசைஇ,
நெடுங் கதிர் நெல்லின் நாள் மேயல் ஆரும்
புனல் முற்று ஊரன், பகலும்,
படர் மலி அரு நோய் செய்தனன், எமக்கே. — ஐங் 95

தலைவி, "பெருங் கொம்பையுடைய எருமைகள் இரவில் தாம் கட்டப்பெற்றிருக்கும் கயிற்றை அறுத்துக்கொண்டு போய் நெடிய கதிர்களையுடைய நெல்லை நாள் உணவாய் உண்ணும் நீர் நிறைந்த வயல் சூழ்ந்த ஊரன், பகற்போதும் துன்பம் மிக்க நோயை எமக்குச் செய்து ஒழுகுகின்றான். ஆதலால் அவன் பொருட்டாக தூது வேண்டுவது ஏன்?" என்று கூறி தூதினை மறுத்தாள்.

## 96. படுக்கையில் இன்துணையாயினாள்

அணி நடை எருமை ஆடிய அள்ளல்,
மணி நிற நெய்தல் ஆம்பலொடு கலிக்கும்
கழனி ஊரன் மகள், இவள்;
பழன ஊரன் பாயல்இன் துணையே. — ஐங் 96

"அழகிய நடையை உடைய எருமை உழக்கிய சேற்றில் நீலமணியின் நிறத்தையுடைய நெய்தலும் ஆம்பலும் தழைத்து வளர்கின்ற தன்மையுடைய ஊரனுக்கு மகளான இவள் பழனங்களையுடைய ஊரனான தலைவனுக்குப் படுக்கையில் இனிய துணைவியாய் ஆயினாள்! என்னே!" என்று தூது வந்தோர் கூறிக் கொண்டனர்.

## 97. இவள் தண்ணியள்

பகன்றை வால்மலர் மிடைந்த கோட்டைக்
கருந் தாள் எருமைக் கன்று வெரூஉம்,
பொய்கை, ஊரன் மகள் இவள்;
பொய்கைப் பூவினும் நறுந் தண்ணியளே. *– ஐங் 97*

*“பகன்றையின் வெண்மையான மலரைப் பொருந்திய கரிய தாள்களையுடைய எருமையின் கொம்பைப் பார்த்து அதன் கன்று அஞ்சும் பொய்கை ஊரனுக்கு மகளாகிய இவள் பொய்கையில் மலர்ந்த ஆம்பல் பூவை விடக் குளிர்ச்சி யுடையவள் ஆவாள்” என்று தலைவன் தனக்குள் உரைத்தான்.*

## 98. இவனினும் கொடியரோ?

தண் புனலாடும் தடங் கோட்டு எருமை
திண்பிணி அம்பியின் தோன்றும் ஊர,
ஒண்தொடி மடமகள் இவளினும்
நுந்தையும் ஞாயுங் கடியரோ நின்னே? *– ஐங் 98*

*“குளிர்ந்த நீரில் ஆடும் பெரிய கொம்பை உடைய எருமை திண்மையாய்ப் பிணிக்கப்பட்ட தோணி போல் தோன்றும் ஊரனே, நின்னிடம் குற்றம் உள்ளதாயவிடத்து அதுபற்றி நின்னைக் கடியுங்கால் நின் தந்தையும் தாயும் ஒளியுடைய கொடியும் மடப்பமும் உடைய இவளினும் கடுமை உடையவர் ஆவாரோ! கூறுக!” என்று புறத்தொழுக்கம் நின்ற தலைவனிடம் தோழி உரைத்தாள்.*

## 99. யான் உற்ற நோய்க்கு மருந்தானாள்

பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை
கழனி எருமை, கதிரொடு மயக்கும்
பூக்கஞல் ஊரன் மகள்,இவள்
நோய்க்கு மருந்தாகிய பணைத் தோளோளே! *– ஐங் 99*

*“கழனிகளில் உள்ள பாகல் இலையில் முயிறு என்னும் எறும்புகள் கூடு அமைத்து முட்டையிட்டு நெருங்கி வாழும் அக் கூடுகளைக் கழனிகள் மேயும் எருமைகள் நெற்கதிர் களுடன் சேரச் சிதைக்கும் மலர்கள் நிறைந்த ஊரனுக்கு*

*மகளான இவள். யான் உற்ற நோய் நீங்குதற்குரிய மருந்தான பருத்த தோள்களை யுடையவள் ஆனாள்" என்று தலைவன் மகிழ்ந்து கூறினான்.*

## 100. யாழினும் இனிய சொல்லினள்!

புனலாடு மகளிர் இட்ட ஒள்ளிழை
மணலாடு சிமையத்து எருமை கிளைக்கும்
யாணர் ஊரன் மகளிவள்,
பாணர் நரம்பினும் இன் கிளவியளே. *– ஐங் 100*

*தோழி, "நீரில் ஆடிய மகளிர் களைந்து வைத்த அணிகள் மணலில் மறைந்தவற்றை அம் மணற் குன்றின் மேல்நின்று எருமைகள் தம் கொம்புகளாலும் குளம்பினாலும் கிளைத்து வெளிப்படுத்தும் புது வருவாயை உடைய ஊரனின் மகளான இவள் பாணரின் இனிய நரம்பினின்று எழும் இசையை விட இனிய மொழிகளை உடையவள் ஆவாள்" என்று தலைவனுக்குக் கூறினாள்.*






## குறுந்தொகை

### 101. ஆடிப்பாவைபோல அவன்

கழனி மாஅத்து விளைந்து உகு தீம் பழம்,
பழன வாளை கதூஉம் ஊரன்
எம் இல் பெருமொழி கூறி, தம் இல்,
கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யும் தன் புதல்வன் தாய்க்கே.

– *ஆலங்குடி வங்கனார் குறு 8*

*வயலுக்கு அருகிலுள்ள மாமரத்தினது கனிந்து வீழ்கின்ற இனிய பழத்தை, பொய்கையிலுள்ள வாளை மீன்கள் கவ்வி, உண்ணுதற்கிடமாகிய ஊரை உடைய தலைவன், எம்முடைய வீட்டில் எம்மை வயமாக்குவதற்குரிய பெருமொழிகளைக் கூறிச் சென்று பின் தம்முடைய வீட்டில் முன்னின்றார். தம் கையையும் காலையும் தூக்கத் தானும் தூக்குகின்ற கண்ணாடியுள் தோன்றுகின்ற பாவையைப் போலத் தன் மனைவிக்கு, அவள் விரும்பியவற்றைச் செய்கின்றான்.*

### 102. தண்ணீர் துறைவன் கொடுமை

யாய் ஆகியளே மாஅயோளே –
மடை மாண் செப்பில் தமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய் சாயினளே;
பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இன மீன் இருங் கழி ஓதம் மல்குதொறும்

கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்
தண்ணம் துறைவன் கொடுமை
நம்முன் நாணிக் கரப்பாடும்மே. — *கயமனார் குறு 9*

*"இயற்கையிலே மாந்தளிர் நிறத்தை உடைய தலைவி, இப்பொழுது உன் பிரிவினால் பொருந்தும் வாயை உடைய மாட்சிமைப்பட்ட செப்பினுள் தனித்து இட்டு வைக்கப் பட்ட சூடப்படாத மலர்களைப் போல் உடல் மெலிந்து காட்சியளிக்கிறாள். பசுமையுடைய இலைகளுக்கு மேலே உயர்ந்து தோன்றுகின்ற திரண்ட காம்பையுடைய நெய்தல் நறும்பூ கூட்டமாகிய மீன்களையுடைய கரிய கழியிலே நீர்ப் பெருக்கு மிகுந்தோறும், குளத்தில் மூழ்கி நீராட வரும் மகளிரின் கண்ணை ஒத்திருக்கும், குளிர்ச்சியுடைய நீர்த் துறைக்குரிய தலைவனது பரத்தமைக் கொடுமையைத் தோழி யாகிய எம் முன்னே சொல்லுதற்கும் நாணமுற்று, மறைத்து உரையாடுகிறாள். ஆதலின், அவள் கற்புக்கடம் பூண்ட வளாகக் காட்சியளிக்கிறாள்." என்று தோழி தலைவனிடம் தூதுரைத்தாள்.*

## 103. யாரளோ நமக்கு?

எவ்வி இழந்த வறுமையர் பாணர்
பூ இல் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழியர் – நேஞ்சே – மனை மரத்து
எல்லுறும் மௌவல் நாறும்
பல் இருங் கூந்தல் யாரளோ நமக்கே. — *பரணர் குறு 19*

*"நெஞ்சே வீட்டுமனையிலே உள்ள மரத்தின்மீது படர்ந்த ஒளியையுடைய முல்லை மலர்கள் மணம் வீசுதற் கிடமாகிய பலவாகிய கரிய கூந்தலையுடைய இவள். இனி நமக்கு இத்தகைய உறவினை உடையவளோ? ஏதிலர் போலும். கொடையளித்துப் புரக்கும் எவ்வி என்பவனை இழந்த, வறுமையையுடைய யாழ்ப்பாணரது பொற்பூ இல்லாத தலையானது பொலிவிழந்திருத்தல் போல. பொலிவிழந்து வருந்துவாயாக!" என்று உணர்ப்பு வாரா ஊட்டற்கண் தலைவன் சொல்லினான்.*

## 104. நானும் ஓர் ஆடுகள மகளே!

மள்ளர் குழீஇய விழவினானும்,
மகளிர் தழீஇய துணங்கையானும்,
யாண்டும் காணேன், மாண் தக்கோனை;
யானும் ஓர் ஆடுகள மகளே;என் கைக்
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்த்த
பீடு கெழு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே.

*– ஆதிமந்தி குறு 31*

*"மாண்பு பொருந்திய தகுதி படைத்தவனான தலைவனை, வீரர்கள் கூடியுள்ள சேரி விழாவின்கண்ணும், பொது மகளிர் தம்முள் தழுவி ஆடுகின்ற துணங்கைக் கூத்தன் கண்ணும் இவையில்லாத பிற இடங்களிலும் கண்டேனில்லை. யானும் ஆடுகின்ற களத்திற்குரிய ஒரு பெண்ணே, என் கையிலுள்ள சங்கை அறுத்துச் செய்த விளங்குகின்ற வளையல்கள் நெகிழும் படியாகச் செய்த பெருமை பொருந்திய தலைவனும் ஆடுகின்ற களத்திலுள்ள ஒருவனே."*

## 105. இவன் எத்தகைய சிறப்புடையவன்!

அன்னாய்! இவன்ஓர் இள மாணாக்கன்;
தன் ஊர் மன்றத்து என்னன்கொல்லோ?
இரந்தூண் நிரம்பா மேனியொடு
விருந்தின் ஊரும் பெருஞ் செம்மலனே.

*– படுமரத்து மோசிகீரன் குறு 33*

*"தோழியே! இப் பாணன் ஓர் இளைய மாணாக்கன் ஆவான். தன்னுடைய ஊரிலுள்ள பொதுமன்றத்தில் எத் தகையவனோ? இரந்து பெறும் உணவினால் முழு வளர்ச்சி யடையாத உடம்பொடு உள்ள இவன் புதிதாக விருந்து பெறும் தலைமை உடையவன் ஆவான்." என்று பாணன் கேட்கும்படி தலைவி தோழியிடம் கூறினாள்.*

## 106. மங்கல இசையில் இன்புறுவராக!

ஒறுப்ப ஓவலர், மறுப்பத் தேறலர்,
தமியர் உறங்கும் கௌவை இன்றாய்,

இனியது கேட்டு இன்புறுக, இவ் ஊரே –
முனாஅது, யானையங்குருகின் கானல்அம் பெருந்தோடு
அட்ட மள்ளர் ஆர்ப்பு இசை வெரூஉம்
குட்டுவன் மாந்தை அன்ன எம்
குழை விளங்கு ஆய்நுதற் கிழவனும் அவனே.

*– கொல்லிக் கண்ணன் குறு 34*

“கடற்கரையிலுள்ள வண்டாழங்குருகின் பெரிய கூட்டமானது, பகைவரைக் கொன்று வெற்றி கொண்ட வீரர்களின் முழக்கத்தினைக் கேட்டு அஞ்சுவதற்கு இடமாகிய குட்டுவனுடைய மாரத்தை என்னும் நகரைப் போன்ற நும்முடைய கூந்தல் விளங்குகின்ற அழகிய நெற்றிக்கு உரிமையுடைய அத் தலைவனே வரைவோடு வந்தவனும் ஆவான். ஆதலின் தமர் தடை செய்ததனால் வந்த வருந்துதல் இருந்தது நீங்கப் பெறாளாய், தோழியர் வருந்துதல் தகாது என்று தேற்றியும் தேறாதவளாய்த் தலைவரைப் பிரிந்து தனிமையில் உறங்குகின்ற வருத்தம் இனி இல்லாதவளாகி இவ் ஊரில் உள்ளோர் இனிய மணச் செய்தியைக் கேட்டு இன்புறும்படியாக அவன் வரைந்து கொள்வான்.” என்றாள் தோழி தலைவியிடம்.

## 107. நாணம் அற்றன கண்கள்

நாண் இல மன்ற எம் கண்ணே – நாள் நேர்பு,
சினைப் பசும் பாம்பின் சூல் முதிர்ப்பன்ன.
கனைத்த கரும்பின் கூம்பு பொதி அவிழ
நுண் உறை அழிதுளி தலைஇய
தண் வரல் வாடையும் பிரிந்திசினோர்க்கு அழலே.

*– கழார்க் கீரன் எயிற்றி! குறு 35*

“தோழியே! தலைவர் பிரிந்த நாளில் இதற்கு உடன்பட்டு இருந்த என் கண்கள், இப்பொழுது கருப்பத்தை உடைய பச்சைப் பாம்பினது கருவின் முதிர்ச்சியைப் போன்ற திரண்ட கரும்பினது குவிந்த அரும்பு மலரும்படி, நுண்ணிய மழைத் துளியோடு கலந்த வாடைக் காற்று வீசும் கூதிர் காலத்தும் பிரிந்துறையும் தலைவருக்காக அழும் என் கண்கள்

உறுதியாக நாணம் இல்லாதவை ஆயின." என்று தலைவி தோழியிடம் வருந்திக் கூறினாள்.

## 108. உயர்குடியில் பிறத்தலும் கொடிதே!

காலை எழுந்து, கடுந்தேர் பண்ணி,
வால் இழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்லல் ஊரன், 'எல்லினன் பெரிது' என,
மறுவரும் சிறுவன் தாயே;
தெறுவது அம்ம, இத் திணைப் பிறத்தல்லே.

*– ஆலங்குடி வங்கனார் குறு 45*

*"காலையில், விரைந்து செல்லும் தேரை அலங்கரித்து தூய அணிகலன்களை அணிந்த பரத்தையரைத் தழுவி இன்புறும் பொருட்டுச் சென்ற, வளப்பம் பொருந்திய ஊரையுடைய தலைவன் பெரிதும் விளக்கத்தையிடையவன் ஆயினன் என்று எண்ணி மகப்பெற்ற தலைவி அவனை ஏற்றுக் கொள்வாள். ஆயினும் மனத்தினுள் வருந்துவாள். அவள் வருந்துதற்குரிய செயலைத் தலைவன் செய்யினும் அதனை மன்னித்த மறந்து வாயில் நேர்தற்குரிய பெண் பிறப்பாகப் பிறத்தல் துன்புறுவதற்கே ஆகும்." என்று செவிலித்தாய் வருந்திக் கூறினாள்.*

## 109. மாலைத் துயரம்
## அவர் சென்ற நாட்டில் இல்லையோ?

ஆம்பற் பூவின் சாம்பல் அன்ன
கூம்பிய சிறகர் மனை உறை குரீஇ
முன்றில் உணங்கல் மாந்தி, மன்றத்து
எருவின் நுண் தாது குடைவன ஆடி,
இல் இறைப் பள்ளித் தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும் புலம்பும்,
இன்றுகொல் – தோழி! – அவர் சென்ற நாட்டே

*– மாமிலாடனன் குறு 46*

*"தோழியே! ஆம்பல் மலரின் வாடலை ஒத்த குவிந்த சிறகுகளையுடைய வீட்டின்கண் தங்கும் குருவிகள், முற்றத்*

தில் உலரும் தானியங்களைத் தின்று பொதுவிடத்தின் கண்ணுள்ள எருவினது நுண்ணிய பொடியைக் குடைத்த விளையாடி வீட்டின். இறப்பில் தம்முடைய குஞ்சுகளோடு தங்கியிருக்கும். பிரிந்து உறைபவருக்குத் துன்பத்தைத் தரும் மாலைக் காலமும் தனிமையும் தலைவர் பிரிந்து சென்ற நாட்டில் இல்லை போலும்." என்றாள் தலைவி.

## 110. அவன் மணந்த தோள்

ஐயவி அன்ன சிறு வீ ஞாழல்
செவ்வி மருதின் செம்மலோடு தாஅய்த்
துறை அணிந்தன்று, அவர் ஊரே; இறை இறந்து
இலங்கு வளை நெகிழச், சாஅய்ப்
புலம்பு அணிந்தன்று, அவர் மணந்த தோளே.

*– குன்றியனார் குறு 50*

"வெண்சிறு கடுகைப் போன்ற சிறிய பூக்களை உடைய ஞாழல் மரத்தின் பூவானது, செம்மையாகிய மலர்களை உடைய மருத மரத்தின் பழம்பூவோடு சேர்ந்து தலைவருடைய ஊரினிடத்தில் உள்ள நீர்த்துறையை அழகு செய்தது. அவர் முன்பு அளவளாவிய என் தோள்வளை, முட்டியைக் கடந்து நெகிழும்படி தனிமையில் மெலிந்து கிடந்தது." என்று தலைவி தலைவனின் தூதுவரிடம் உரைத்தாள்.

## 111. உறுதி மொழிகள் துன்புறுத்தின

எம் அணங்கினவே – மகிழ்ந! முன்றில்
நனை முதிர் புன்கின் பூத் தாழ் வெண் மணல்,
வேலன் புனைந்த வெறி அயர் களம்தொறும்
செந்நெல் வான் பொரி சிதறி அன்ன,
எக்கர் நண்ணிய எம் ஊர் வியன் துறை,
நேர் இறை முன்கை பற்றிச்,
சூரர மகளிரோடு உற்ற சூளே.

*– கோப்பெருஞ்சோழன் குறு 53*

"தலைவனே! முற்றத்திலுள்ள அரும்பு முதிர்ந்த புன்க மரத்தின் மலர்கள் உதிர்ந்து பரந்த வெள்ளிய மணற்பரப்பில்,

வேலனால் அமைக்கப்பட்ட வெறியாட்டெடுக்கும் இடந் தோறும் செந்நெல்லினது வெள்ளிய பொறி சிதறினாற் போன்ற தோற்றத்தைத் தரும். மணல் மேடுகள் பொருந்திய எம்முடைய ஊரிலுள்ள அகன்ற நீர்த்துறையில் நுண்ணிய மூட்டு வாயை உடைய முன்கையைப் பிடித்துத் தெய்வ மகளிரைச் சுட்டிக் கூறிய உறுதிமொழி எம்மைத் துன் புறுத்திற்று." என்றாள் தோழி.

## 112. உள்ளத்தின் இன்பம்

தச்சன் செய்த சிறு மா வையம்,
ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும், கையின்
ஈர்த்து இன்புறூஉம் இளையோர் போல,
உற்று இன்புறேஎம் ஆயினும், நற்றேர்ப்
பொய்கை ஊரன் கேண்மை
செய்து இன்புற்றனெம்; செறிந்தன வளையே.

*– தும்பிசேர்கீரன் குறு 61*

"தச்சனால் செய்யப்பெற்ற சிறு குதிரை பூட்டிய கை வண்டியை ஏறிச் செலுத்துகின்ற இன்பம் அடையாராயினும் கையால் இழுத்து இன்பம் அடையும் சிறுவரைப்போல, தலைவனாக மெய்யுற்று இன்பம் அடையாவிடினும், நல்ல தேரையும் பொய்கையும் உடைய ஊருக்கு உரியவனான எம் தலைவனின் நட்பை எம் உள்ளத்தே நினைத்து இன்பம் அடைந்தோம். அதனால் வளைகள் கழலாமல் இறுகி அமைந் தன." எனத் தலைவன் விட்ட தூதர்களிடம் தோழி கூறினாள்.

## 113. காதலன் வரவை ஓதினார் எவர்?

நீ கண்டனையோ? கண்டார்க் கேட்டனையோ?
ஒன்று தெளிய நசையினம்; மொழிமோ!
வெண் கோட்டு யானை சோணை படியும்
பொன் மலி பாடலி பெறீஇயர்! –
யார்வாய்க் கேட்டனை, காதலர் வரவே.

*– படுமரத்து மோசிகீரனார் குறு 75*

"தலைவனின் வரவைக் கூறிய பாணனே, அவரை நீ கண்ணால் கண்டாயோ தலைவனைக் கண்டவர்கள் சொல்லக்

கேட்டு அறிந்தாயோ? அங்ஙனம் பிறர்பால் கேட்டனை ஆயின் யாரிடத்துக் கேட்டறிந்தாய். அதை அறிந்து கொள்ள விருப்பம் உடையோம் ஆதலின் உண்மையை உரைப்பாயாக! அப்படி உரைத்தால் அதற்குப் பரிசாக வெள்ளிய கொம்பு களை உடைய யானைகள் துளையமிட்டு விளையாடும் சோணை ஆற்றின் கரையில் அமைந்துள்ள பொன் நிறைந்தி ருக்கும் பாடலிபுத்திரத்தை நீ பெறுவாயாக!" என்று தலைவி மகிழ்ந்துரைத்தாள்.

## 114. சிற்றூர் வந்து காணல் வேண்டும்

கூந்தல் ஆம்பல் முழு நெறி அடைச்சிப்,
பெரும் புனல் வந்த இருந் துறை விரும்பி,
யாம் அஃது அயர்கம் சேறும்; தான் அஃது
அஞ்சுவது உடையள் ஆயின், வெம் போர்
நுகம் படக் கடக்கும் பல் வேல் எழினி
முனை ஆன் பெரு நிரை போலக்,
கிளையொடு காக்க, தன் கொழுநன் மார்பே.

*– ஔவையார் குறு 80*

"எம் கூந்தலின்கண் ஆம்பலினது புறவிதழ் ஒடித்த முழுப் பூவைச் செருகிற, வெள்ளம் வரப்பெற்ற பெரிய நீர்த்துறையை விரும்பிய தலைவனும் யானும் புனல் விளை யாடுதலுக்குச் செல்வோம். அங்ஙனம் யாம் தலைவனுடன் விளையாடுதலுக்கு அத் தலைவி அஞ்சுவாளானால், கொடிய போரில் பகைவரை வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் பல வேற் படையை உடைய எழினி, போர்முனையில் உள்ள பசுக்களின் பெரிய கூட்டத்தைக் காத்து மீட்பது போலத் தன் கணவனது மார்பைத் தனக்குப் பாங்கானவர்களோடு பாது காத்துக் கொள்வாளாக!" என்று பரத்தை தலைவனின் உறவினர் கேட்கும்படி கிளத்தினாள்.

## 115. அன்பில்லாதவன்!

யாரினும் இனியன்; பேர் அன்பினனே –
உள்ளூர்க் குரீஇத் துள்ளு நடைச் சேவல்
சூல் முதிர் பேடைக்கு ஈனில் இழைஇயர்,

தேம் பொதிக் கொண்ட தீம் கழைக் கரும்பின்
நாறா வெண் பூக் கொழுதும்
யாணர் ஊரன் பாணன் வாயே.

*- வடம வண்ணக்கன் தாமோதரன் குறு 85*

*"ஊரினுள் வாழும் துள்ளல் நடையை உடைய ஆண் குருவி, கருப்பம் முதிர்ந்த பெண் குருவிக்குக் கரு உயிர்த்தற் குரிய இடத்தை அமைக்கும் பொருட்டு, சாறு பொதிந்த இனிய கோலை உடைய கரும்பினது மணம் வீசாத வெள்ளிய பூவைக் கோதி எடுக்கும் புது வருவாயை உடைய ஊருக்குத் தலைவன், பாணனது சொல்லில் மட்டும் தான் மற்றவர்களை விட இனிமை இடையவன் ஆவான். தலைவியின் பால் மிகுந்த அன்பினை உடையவன் ஆவான்; உண்மையில் அங்ஙனம் அல்லன்." என்று தோழி உரைத்தாள்.*

## 116. அறிவில்லாதவர்கள் இவ்வூரார்

பா அடி உரல பகுவாய் வள்ளை
ஏதில் மாக்கள் நுவறலும் நுவல்ப;
அழிவது எவன்கொல், இப் பேதை ஊர்க்கே? -
பெரும் பூண் பொறையன் பேஎம் முதிர் கொல்லிக்
கருங் கட் தெய்வம் குடவரை எழுதிய
நல் இயல் பாவை அன்ன இம்
மெல் இயல் குறுமகள் பாடினள் குறினே. *- பரணர் குறு 89*

*"பெரிய அணிகலன்களை அணிந்துள்ள சேரனுடைய அச்சம் தரும் கொல்லி மலையில் உள்ள கரிய கண்களை உடைய தெய்வத்தால் அம் மலையின் மேற்குபக்கத்தில் எழுதி வைக்கப்பட்ட நல்ல அழகினை உடைய கொல்லிப் பாவையை ஒத்த மெல்லிய இயல்பினளான தலைவி தலை வனுடைய பெயரை உரல்பாட்டில் பாடி நெல்லை இடிக்கும் பொழுது, அயலார்கள் அதனைக் கேட்டுப் பழி கூறலாயினர். இத்தகைய அறிவின்மை உடைய ஊரினர் குறைகூறும் சொற்களின் பொருட்டு வருந்துவதால் பயன் என்ன?" எனத் தோழி உரைத்தாள்.*

## 117. துயில்வதற்குரிய நாள்கள்

அரில் பவர்ப் பிரம்பின் வரிப் புற விளை கனி
குண்டு நீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண் துறை ஊரன் பெண்டினை ஆயின்,
பல ஆகுக, நின் நெஞ்சில் படரே!
ஓவாது ஈயும் மாரி வண் கைக்
கடும் பகட்டு யானை, நெடுந் தேர், அஞ்சி
கொன் முனை இரவு ஊர் போலச்
சில ஆகுக நீ துஞ்சும் நாளே. — *ஔவையார் குறு 91*

*"நெஞ்சேமே! ஒன்றோடு ஒன்று பிணங்குதலை உடைய பிரப்பம் கொடியின் புறத்தே வரிகளையுடைய விளைந்த பழத்தை ஆழமான நீரையுடைய குளத்திலுள்ள கெண்டை மீன்கள் கவ்வுதற்கு இடமாகிய குளிர்ந்த நீர்த்துறைகளை உடைய ஊர்த் தலைவனுக்குரிய மனைவியாக நீ இருப்பா யானால் நின் உள்ளத்தில் துன்பம் அதிகம் ஆகும். காலமும் இடமும் பெறுவார் தகுதியும் நோக்கிப் பொழியாமல் எப் பொழுதும் கொடுக்கும் முகில் போன்று கைம்மாறு கருதாத வண்மையை உடைய கையினையும்,விரைந்த செலவையும் உடைய ஆண் யானைகளையும் உயர்ந்த தேர்களையும் உடைய அதியமான் அஞ்சியின் அச்சத்தைத் தரும் போர்க் களத்தில் உள்ள இரவை என்னும் ஊரில் உள்ளார்போல நீ துயிலும் நாள்கள் சிலவே ஆகுக." என்று தலைவி யுரைத்தாள்.*

## 118. அன்னையும் அத்தனும் ஒத்தவன்!

நல் நலம் தொலைய, நலம்மிகச் சாஅய்,
இன் உயிர் கழியினும் உரையல்; அவர் நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ?
புலவி அஃது எவனோ அன்பிலங்கடையே?
— *அள்ளூர் நன்முல்லையார் குறு 93*

*"தோழியே! நல்ல பெண்மைநலம் கெடவும் உடல் மிக மெலியவும் இனிய உயிரானது நீங்குமாயினும் அவர்பால் பரிவுகூர்ந்த சொற்களைச் சொல்லுதல் வேண்டா. தலையர்*

நமக்கே தாயும் தந்தையும் அல்லரோ? அன்பு இல்லாத விடத்து ஊடல் உண்டாவது எதற்கு?" என்றாள் தலைவி.

## 119. இறந்திடு துயில் எழுப்பிய சேவலே

குவி இணர்த் தோன்றி ஒண்பூ அன்ன
தொகு செந் நெற்றிக் கணம்கொள் சேவல்!
நள்ளிருள் யாமத்து இல் எலி பார்க்கும்
பிள்ளை வெருகிற்கு அல்குஇரை ஆகிக்,
கடு நவைப் படீஇயரோ, நீயே – நெடு நீர்
யாணர் ஊரனொடு வதிந்த
ஏம இன்துயில் எடுப்பியோயே.

*– மதுரைக் கண்ணனார் குறு 107*

"குவிந்த கொத்துக்களையுடைய செங்காந்தளினது ஒள்ளிய பூவைப் போன்று சிவந்த கொண்டையை உடைய மாட்சிமைப்பட்ட சேவலே! ஆழமான நீரினால் உண்டாகும் புது வருவாயை உடைய ஊரனாகிய தலைவனோடு தங்கிய காலத்து இன்பத்தைத் தரும் இனிய் துயிலினின்றும் எம்மை எழுப்பினை. நீ செறிந்த இருளை உடைய இடை யாமத்தில் வீட்டிலுள்ள எலிகளை உண்ணும் பொருட்டு ஆராயும் காட்டுப் பூனையின் குட்டிக்குச் சில நாள் இட்டு வைத் துண்ணும் உணவாகி மிக்க துன்பத்தை அடைவாயாக!" என்று தலைவி கூறினாள்.

## 120. எருமண்ணைக் கொணர்வோம்

ஊர்க்கும் அணித்தே, பொய்கை; பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே, சிறு கான்யாறே;
இரை தேர் வெண் குருகு அல்லது யாவதும்
துன்னல் போகின்றால், பொழிலே; யாம் எம்
கூழைக்கு எருமண் கொணர்கம் சேறும்;
ஆண்டும் வருகுவள் பெரும் பேதையே.

*– மாதீர்த்தன் குறு 113*

"தலைவா! பொய்கையோ ஊருக்கு அருகிலுள்ளது, சிறிய காட்டாறு அப் பொய்கைக்கு மிக அண்மையில் உள்ளது. அங்குள்ள சோலையோ பொய்கையிலும் ஆற்றிலும்

*உணவைத் தேடித் திரியும் வெண்ணிற நாரை அன்றி வேறு எவ் உயிரும் அடைதலை ஒழித்ததாகும். நாங்கள் எமது கூந்தலுக்கு இட்டுப் பிசையும் பொருட்டு, எரு மண்ணைக் கொண்டு வருவதற்காக அங்குச் செல்வோம். பெரிய பேதைமை உடைய தலைவியும் அவ் இடத்துக்கு வருவாள்." எனத் தோழி தலைவனை அங்கு வரும்படிக் குறிப்புணர்த்தினாள்.*

## 121. பொய்யர் போல்வர்

**குருகு கொளக் குளித்த கெண்டை அயலது**
**உரு கெழு தாமரை வால் முகை வெரூஉம்**
**கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர!**
**ஒரு நின் பாணன் பொய்யன் ஆக,**
**உள்ள பாணர் எல்லாம்**
**கள்வர் போல்வார், நீ அகன்றிசினோர்க்கே.**

*— ஓரம்போகியார் குறு 127*

*"நாரையால் கவர்ந்து கொள்ளப்பட்டு அதன் வாயிலிருந்து தப்பி நீருள் குதித்து மறைந்த கெண்டை மீன், அதன் பின்பு அருகிலுள்ள வெள்ளை நிறம் பொருந்திய தாமரையின் அரும்பை நாரை என்று அஞ்சி ஒளியும் வயற் பக்கங்களை உடைய காஞ்சி மரங்கள் நிறைந்த ஊரையுடைய தலைவனே, நின் பாணன் ஒருவன் பொய் பேசுவான் என்பதனால் மற்றுமுள்ள பாணர்கள் யாவரும் நின்னைப் பிரிந்து தனித்திருக்கும் தலைவிக்குப் பொய்யுரைப்பவர் போல் தோன்றுகின்றனர்." என்று தோழி தலைவனிடம் இயம்பினாள்.*

## 122. ஊர் உறங்கினும் யாம் உறங்கோம்

**கொன் ஊர் துஞ்சினும், யாம் துஞ்சலமே —**
**எம் இல் அயலது ஏழில் உம்பர்,**
**மயில் அடி இலைய மாக் குரல் நொச்சி**
**அணி மிகு மென் கொம்பு ஊழ்த்த**
**மணி மருள் பூவின் பாடு நனி கேட்டே.**

*— கொல்லன் அழிசி குறு 138*

*இப்பெரிய ஊரில் உள்ள யாவரும் துயில்கின்றனர். யாங்கள், எமது வீட்டிற்கு அயலே உள்ளதும், ஏழில் குன்றத்*

தின் மேலேள்ள மயிலின் அடியைப் போன்ற இலையை உடைய கமழ் பூங்கொத்துகளைக் கொண்ட நொச்சியினது அழகு மிக்க மெல்லிய கொம்புகள் உதிர்ந்த நீல மணி போன்ற மலர்களின் ஓசையை மிகக் கேட்டுத் தூங்கினோம் இல்லை'' என்று தோழி கூறினாள்.

## 123. எம் தெருவே வாராதே!

மனை உறை கோழிக் குறுங் காற் பேடை,
வேலி வெருகினம் மாலை உற்றெனப்,
புகும் இடன் அறியாது தொகுபு உடன் குழீஇய
பைதற் பிள்ளைக் கிளை பயிர்ந்தா அங்கு
இன்னாது இசைக்கும் அம்பலொடு
வாரல், வாழியர்! ஐய! எம் தெருவே.

*– ஒக்கூர் மாசாத்தியார் குறு 139*

“ஐயனே, இல்லின்கண் உறைகின்ற குறுகிய கால்களை உடைய கோழிப் பேடையானது, வேலிக்கு அயலில் உள்ள காட்டுப்பூனையின் கூட்டம் மாலைக் காலத்தில் வந்தடைய, அதற்கு அஞ்சிப் பாதுகாப்பாகப் புகுதற்குரிய இடத்தை அறியாமல் சேர்ந்து ஒருங்கே கூடும் பொருட்டுத் துன்பத்தை உடைய குஞ்சுகளாகிய இனத்தைக் கூவி அழைத்தாற் போல, துன்புறும்படி பரத்தையரால் கூறப்படும் பழிமொழியோடு எம்முடைய தெருவிற்கு வருதலை ஒழிவாயாக. நீ வாழ்வாயாக!

## 124. வாள் போன்ற நாள்

‘குக்கூ’ என்றது கோழி; அதன் எதிர்
துட்கென்றன்று என் தூய நெஞ்சம் –
தோள் தோய் காதலர்ப் பிரிக்கும்
வாள் போல் வைகறை வந்தன்றால் எனவே.

*– அள்ளூர் நன்முல்லை குறு 157*

“கோழி ‘குக்கூ’ என்று கூவியது. அதற்கு நேராக எம் தோளைத் தழுவும் காதலரைப் பிரியச் செய்யும் வாளைப் போல விடியற்காலைப் பொழுது வந்தது. எனது தூய நெஞ்சம் அதனால் அச்சத்தை அடைந்தது.” என்று தலைவி வருந்தியுரைத்தாள்.

## 125. எம்மைக் கடல் வருந்துக!

கணைக் கோட்டு வாளைக் கமஞ் சூல் மட நாகு
துணர்த் தேக்கொக்கின் தீம் பழம் கதூஉம்
தொன்று முதிர் வேளிர் குன்றூர்க் குணாது
தண் பெரும் பௌவம் அணங்குக – தோழி!
மனையோள் மடமையின் புலக்கும்
அனையேம் மகிழ்நற்கு யாம் ஆயினம் எனினே!

*– மாங்குடிமருதன் குறு 164*

*"தோழியே! தலைவி தன் அறியாமையால் புலம்புதற்குக் காரணமாகிய தன்மையுடையோமாகத் தலைவனுக்கு யாம் ஆயினோமாயின் திரண்ட கொம்புகளை உடைய வாளை மீனினது நிறைந்த கருப்பத்தையுடைய பெண்மீன் ஆனது கொத்தாகக் காய்த்துள்ள தேமாவினது முதிர்ந்த பழத்தைக் கவ்வுதற்கு இடமாகிய மிகப் பழைய வேளிர்க்குரிய குன்றூருக்குக் கிழக்கில் உள்ளதாகிய குளிர்ந்த பெரிய கடல் எம்மை வருத்துவதாக." என்று காதல் பரத்தை தலைவிக்கு வேண்டியவர்கள் கேட்கும்படி தோழியிடம் கூறினாள்.*

## 126. எம் உயிர் நீங்குக!

சுரம் செல் யானைக் கல்உறு கோட்டின்
தெற்றென இறீ அயரோ – ஐய! மற்று யாம்
நும்மொடு நக்க வால் வெள் எயிறே;
பாணர் பசுமீன் சொரிந்த மண்டை போல
எமக்கும் பெரும் புலவு ஆகி,
நும்மும் பெறேஎம், இறீஇயர் எம் உயிரே.

*– வெள்ளிவீதியார் குறு 169*

*"ஐயனே! யாம் நும்மோடு சிரித்து மகிழ்ந்த தூய வெள்ளிய பற்கள் பாலை நிலத்தில் செல்லும் யானையினது மலையைக் குத்திய கொம்பைப் போல விரைவாக முறிவன வாக! எமது உயிர் பாணர் தாம் பிடித்த பச்சை மீனைப் பெய்த மண்டையைப் போல உமக்கும் பெரிய வெறுப்பைத் தருவதாகி உம்மையும் யாம் பெறாமல் கெட்டு அழிவதாக." எனத் தலைவி, தலைவனிடம் கூறினாள்.*

## 127. இவர்கள் முயற்சி பயன்படாது

காண் இனி வாழி – தோழி, – யாணர்க்
கடும்புனல் அடைகரை நெடுங் கயத்து இட்ட
மீன் வலை மாப் பட்டா அங்கு,
இது மற்று – எவனோ, நொதுமலர்த்தலையே

– *பூங்கணுத்திரையார் குறு 171*

*"தோழியே! இப்பொழுது பார்ப்பாயாக. புது வருவாயாகிய மிக்க புனலையும் அடைந்த கரையையும் உடைய ஆழமான குளத்தின்கண் அமைந்த மீனுக்குரிய வலையின் கண் விலங்கு அகப்பட்டாற் போல அயலாரின் வரைவுக்குரிய இம் முயற்சி என்ன பயனுடைத்து." என்று தலைவி தோழியிடம் கூறினாள்.*

## 128. எவ்வாறு ஆற்றி இருந்தாரோ?

அயிரை பரந்த அம் தண் பழனத்து
ஏந்து எழில் மலர தூம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர் நீர் வேட்டாங்கு, இவள்
இடை முலைக் கிடந்தும், நடுங்கல் ஆனீர்;
தொழுது காண் பிறையின் தோன்றி, யாம் நுமக்கு
அரியம் ஆகிய காலைப்
பெரிய தோன்றினிர்; நோகோ யானே.

– *நெடும்பல்லியத்தை குறு 178*

*"அயிரை மீன் மேய்தற்குப் பரந்த அழகிய குளிர்ந்த பொய்கையினிடத்து, அழகை உடைய மலர்களைக் கொண்ட உள்ளே துளையுடைய திரண்ட தண்டை உடைய ஆம்பலைப் பறிப்போர் புனல்வேட்கையை விரும்பினாற் போலத் தலைவியின் மார்பகங்களின் இடையே துயிலப் பெற்றும் நடுங்குதலை ஒளித்தீரல்லீர். எம் போன்ற கன்னிமகளிர் தொழுது காணும் மூன்றாம் பிறை போல வெளிப்பட்டு நுமக்குக் காண்பதற்கு அரியவர்களாக இருந்த களவு காலத்தில் பெரிய வருத்தங்களைப் பொறுத்து இருந்தீர் யான் அதனை நினைத்து வருந்துவேன்." என்றாள் தோழி தலைவியிடம்.*

## 129. கடமையைச் செய்வோம்

இது மற்று – எவனோ – தோழி! துனியிடை
இன்னர் என்னும் இன்னாக் கிளவி –
இரு மருப்பு எருமை ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியின் அகலாது,
பாஅல் பைம் பயிர் ஆரும் ஊரன்
திரு மனைப் பல் கடம் பூண்ட
பெரு முது பெண்டிரேம் ஆகிய நமக்கே

– *கிள்ளிமங்கலங்கிழார் குறு 181*

*"தோழி, பெரிய கொம்புகளை உடைய் அணித்தே கன்றினை ஈன்ற கரிய எருமையானது, உழவனால் கட்டப் பட்ட தன் கன்றின் பக்கத்தில் இருந்து அகன்று செல்லாமல் அருகிலுள்ள பசிய புல்லை மேய்வதற்கு இடமாகிய ஊரை உடைய தலைவனது, செல்வத்தை உடைய மனை வாழ்வுக் குரிய பல கடப்பாடுகளைக் கொண்ட பெரிய முதிய பெண்டிராகிய நமக்குப் புலவிக் காலத்தினிடையே தலைவர் இத் தன்மையர் என்று சொல்லுகின்ற, இனிமையில்லாத பேச்சால் என்ன பயன்?" என்று தலைவனைக் குறை கூற வேண்டா எனத் தலைவி வேண்டினாள்.*

## 130. உம்மை ஏற்றுக் கொள்வது எப்படி?

வேம்பின் பைங் காய் என் தோழி தரினே,
'தேம் பூங் கட்டி' என்றனிர்; இனியே,
பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்,
'வெய்ய உவர்க்கும்' என்றனிர்
ஐய! – அற்றால் அன்பின் பாலே.

– *மிளைக் கந்தன் குறு 196*

*"ஐயனே! என் தோழியாகிய தலைவி முன்பு வேம்பினது பசிய காயைத் தந்தால் கூட இனிதான பொலிவுபெற்ற வெல்லக்கட்டி என்று பாராட்டிக் கூறினீர். இப்பொழுது பாரி வள்ளலின் பறம்பு மலையில் உள்ள குளிர்ந்த சுனை யில் உள்ள தேளிந்த நீரைத் தந்தாலும் வெப்பமுடையது,*

உவர்ப்பு சுவையினதாய் உள்ளது என்று கூறுகின்றீர். நுமது அன்பின் இயல்பு அத்தகையது." என்று ஊடல் கொண்ட தலைவி உடன்படும்படி தோழியிடம் கூறத் தோழி விடை உரைத்தாள்.

## 131. நோம் என் நெஞ்சமே!

நோம், என் நெஞ்சே! நோம் என் நெஞ்சே!
புன் புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கு இன் புது மலர் முள் பயந்தா அங்கு,
இனிய செய்த நம் காதலர்
இன்னா செய்தல் நோம், என் நேஞ்சே!

*– அள்ளூர் நன்முல்லை குறு 202*

"தோழி, என் நெஞ்சம் மிக வருந்தும். முல்லை நிலத்தில் நெருங்கி முளைத்த சிறிய இலைகளை உடைய நெருஞ்சி யினது கண்ணுக்கு இனிமை தரும் புதிய மலர், பின்னர் இன்னாமையைத் தரும் முள்ளைத் தந்தாற் போல, முன்பு இனியவற்றைச் செய்த நம் தலைவர் இப் பொழுது இன்னா தனவற்றைச் செய்து ஒழுகுதலால் உன் நெஞ்சு நோகின்றது." என்று பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனின் தூதாக வந்த தோழியிடம் தலைவி புகன்றாள்.

## 132. பரிவு நீங்கி விட்டது

மலை இடையிட்ட நாட்டரும் அல்லர்;
மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்;
கண்ணின் காண நண்ணுவழி இருந்தும்,
கடவுள் நண்ணிய பாலோர் போல,
ஒரீஇனன் ஒழுகும் என்னைக்குப்
பரியலென்மன் யான், பண்டு ஒரு காலே.

*– நெடும்பல்லியத்தன் குறு 203*

"தோழியே! தலைவர் மலைகள் இடையிட்டுக் கிடக்கும் சேயதாகிய நாட்டினரும் அல்லர். தன்னிடத்துள்ள மரங் களின் உச்சிகள் மறைத்தலால் கண்ணிற்கு எட்டாத காடு இடை யிட்ட தூரத்தில் உள்ள ஊரினரும் அல்லர். நம் கண்ணாலே காணும்படியாக விரைவில் வருவதற்குரிய

*அணிமையிடத்தில் இருந்தும், முனிவருக்கு அருகில் வாழும் பகுதியினரைப் போல் மனத்தால் நீங்கி ஒழுகின்ற என் தலைவன் பொருட்டு முன்பு ஒரு காலத்தே பரிவுடையவளாக இருந்தேன். இப்பொழுது அது இல்லாதது ஆகிற்று." என்று, தலைவனுக்குத் தூதாக வந்த தோழியிடம் தலைவி வருந்தியுரைத்தாள்.*

## 133. என்பால் அன்பில்லாதாயிற்று

**ஓர் ஊர் வாழினும் சேரி வாரார்;**
**சேரி வரினும் ஆர முயங்கார்;**
**எதிலாளர் சுடலை போலக்**
**காணாக் கழிபமன்னே – நாண் அட்டு,**
**நல் அறிவு இழந்த காமம்**
**வில் உமிழ் கணையின் சென்று சேண் படவே.**

*– பாலை பாடிய பெருங்கடுங்கோ குறு 231*

*"தோழி, தலைவர் நம்மோடு ஓர் ஊரிலே வாழ்ந்தாலும் நம் இல்லத்தினுள் வந்து நம்மை நன்றாகத் தழுவிக் கொள்ளார் நாணத்தை அழித்துத் தக்கது இது, தகாதது இது என்று ஆராய்ந்தறியும் நல்லறிவை இழக்கச் செய்யும் காமமானது, வில்லினின்று புறப்பட்ட விட்ட அம்பைப் போலச் சென்று அகன்ற தொலைவிடத்தே, அழியும்படி, அயலாருடைய சுடு காட்டை வெறுத்து ஒதுங்குதல் போல நம்மைக் கண்டும் வெறுத்து ஒதுங்கிச் செல்வார்." என்றாள் தலைவி.*

## 134. சூளுரையைத் திரும்பப் பெறுக!

**பாசவல் இடித்த கருங் காழ் உலக்கை**
**ஆய் கதிர் நெல்லின் வரம்பு அணைத் துயிற்றி,**
**ஒண் தொடி மகளிர் வண்டல் அயரும்**
**தொண்டி அன்ன என் நலம் தந்து,**
**கொண்டனை சென்மோ – மகிழ்ந! நின் சூளே.**

*– குன்றியன் குறு 238*

*"மகிழ்நனே! பச்சை அவலை இடித்த கரிய வயிரம் பொருந்திய உலக்கையை, அழகிய கதிரை உடைய நெற்*

*பயிரை உடைய வயலினது வரப்பாகிய அணையிலே படுக்க வைத்த, ஒளிவீசும் வளைபளை உடைய பெண்கள் வண்டல் விளை யாடும் தொண்டி என்னும் பட்டினத்தைப் போன்ற உனது பெண்மை நலத்தைத் தந்துவிட்டு நினது சூளைப் பெற்றுக் கொண்டு செல்வாயாக!" என்று தோழி உரைத்தாள்.*

## 135. அழகை இழந்தாள்

**வாரல் எம் சேரி; தாரல் நின் தாரே;**
**அலராகின்றால் – பெரும!— காவிரிப்**
**பலர் ஆடு பெருந்துறை மருதொடு பிணித்த**
**ஏந்து கோட்டு யானைச் சேந்தன் தந்தை,**
**அரியல்அம் புகவின் அம் கோட்டு வேட்டை**
**நிரைய ஒள் வாள் இளையர் பெருமகன்,**
**அழிசி ஆர்க்காடு அன்ன இவள்**
**பழிதீர் மாண்நலம் தொலைவன கண்டே.**

*– பரணர் குறு 258*

*"பெரும, பலரும் நீராடுகின்ற காவிரியின் பெரிய நீர்த் துறையினிடத்தே வளர்ந்த மருத மரத்தில் கட்டிய மேலு யர்ந்த கொம்புகளைக் கொண்ட யானைகளை உடைய சேந்தனிடைய தந்தையும், கள்ளாகிய உணவையும் அழகிய விலங்குத் திரள்களை வேட்டையாடும் தொழிலையும், பகைவருக்கு நரக வாழ்வைப் போன்ற துன்பத்தைத் தரும் ஒள்ளிய வாளையும் உடைய இளைய வீரர்களின் தலைவனு மாகிய அழிசி என்பவனின் ஆர்க்காடு என்னும் நகரத்தைப் போன்ற இவளது குற்றமற்ற மாட்சிமையுடைய அழகு அழிதலைக் கண்டபின், எமது சேரிக்கண் வருதலை ஒழி வாயாக. நின் மாலையைத் தருதலையும் ஒழிக. பழிமொழி உண்டாகிறது." என்றாள் பரத்தையிற் பிரிந்த தலைவனை நோக்கி.*

## 136. ஒரு நாள் நட்பு கொண்டேன்

**அருவி அன்ன பரு உறை சிதறி**
**யாறு நிறை பகரும் நாடனைத் தேறி,**
**உற்றதுமன்னும் ஒரு நாள்; மற்று அது**

தவப் பல் நாள் தோள் மயங்கி,
வௌவும் பண்பின் நோய் ஆகின்றே.

*– அழிசி நச்சாத்தனார் குறு 271*

"தோழி! அருவியை ஒத்த பருமையான துளிகளைச் சிதறி மழை பெய்தமையால் ஆற்று வெள்ளம் நிரம்பப் பெற்று ஒலிக்கும் நாட்டை உடைய தலைவனைத் தெளிந்து அவனோடு பொருந்திய காலம் ஒரு நாளேயாகும். அங்ஙனம் பொருந்தியது, மிகப் பல நாள்கள் தோளோடு கலந்த அழகைக் கொள்ளைக் கொள்ளும் தன்னையுடைய நோயாக ஆகின்றது." என்றாள் தலைவனுக்கு உட்பட்டுத் தூதாக வந்த தோழியிடம் தலைவி.

## 137. பரத்தை கொண்டு செல்வாள்!

கள்ளின் கேளிர் ஆத்திய, உள்ளூர்ப்
பாளை தந்த பஞ்சிஅம் குறுங் காய்
ஓங்கு இரும் பெண்ணை நுங்கொடு பெயரும்
ஆதி அருமன் மூதூர் அன்ன,
அய வெள்ளாம்பல் அம் பகை நெறித் தழை
தித்திக் குறங்கின் ஊழ் மாறு அலைப்ப,
வருமே சேயிழை, அந்தில்
கொழுநற் காணிய; அளியேன் யானே!

*– கள்ளில் ஆத்திரையன் குறு 293*

"தோழியே! கள்ளைக் குடிக்கும் விருப்பத்தை உடையவர்களது பயணம் ஊரகத்துள்ள பாளையினால் ஈனப்பட்டதும் நாரையுடையதும் ஆகும் குறிய காய்களைக் கொண்ட உயர்ந்த கரிய பனையினது நுங்கைக் கைக்கொண்டு மீள்வதற்கு இடமாகிய ஆதி அருமனுக்குரிய பழைய ஊரைப் போன்ற. நீரில் வளர்ந்த வெள்ளாம்பலினது அழகிய மாறுபட்ட முழுநெறியை உடைய தழையாடை தேமலை உடைய தொடையின்கண் மாறி மாறி அசைய, பொன்னாற் செய்த. செவ்விய அணிகலன்களை, அணிந்த பரத்தை தலைவனைக் காணும் பொருட்டு வருவாள்; நான் இரங்கத் தக்கவள் ஆவேன். என்று தலைவி தூதாக வந்த தோழியிடம் கூறினாள்.

## 138. வாழ்வில் விழாக்காலம் வந்தது!

உடுத்தும், தொடுத்தும், பூண்டும், செரீஇயும்,
தழை அணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி,
விழவொடு வருதி, நீயே; இஃதோ
ஓர் ஆன் வல்சிச் சீர் இல் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென,
இனி விழவு ஆயிற்று என்னும், இவ் ஊரே.

*– தூங்கலோரி குறு 295*

*"உடையாக உடுத்துக் கொண்டும், மாலையாகத் தொடுத் தணிந்தும். குழை முதலிய அணிகலன்களாக அணிந்தும், கூந்தலின் கண்ணேசெருகியும் தழை ஆடை அலங்காரத்தால் பொலிவு பெற்ற பரத்தையர் கூட்டத்தோடு நெருங்கி நீ, நீர் விழாவிற்குரிய அடையாளங்களோடு வந்துள்ளாய். இவ் வூரில் உள்ளார், ஒரு பசுவினால் வரும் ஊதியத்தைக் கொண்டு உணவை உண்ணுகின்ற செல்வச் சிறப்பில்லாத உன் வாழ்க்கையானது, மிக்க அழகுடைய இளைய தலைவி வாழ்க்கைப்பட்டு புக்கனளாக இப்பொழுது விழவை உடையா தாயிற்று என்று சொல்வர்." என்று தோழி தலைவனிடம் சொன்னாள்.*

## 139. துணையாளர் இல்லையே

கண் தர வந்த காம ஒள் எரி
என்பு உற நலியினும், அவரொடு பேணிச்
சென்று, நாம் முயங்கற்கு அருங் காட்சியமே
வந்து அஞர் களைதலை அவர் ஆற்றலரே;
உய்த்தனர் விடாஅர் பிரித்து இடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல,
விளிவாங்கு விளியின் அல்லது,
களைவோர் இலை – யான் உற்ற நோயே.

*– குப்பைக் கோழியார் குறு 305*

*"தலைவரைக் கண்ட விழிகள் தந்ததனால் உண்டாகிய காமமாகிய ஒள்ளிய தீ, எலும்பையும் பொருந்தி வருத்தினும், அவர்பால் விரும்பிப் போய் அளவளாவதற்கு நாம் அரியரா*

யினோம். அவரும் நம்மிடத்திற்கு வந்து துன்பத்தை நீக்கினார் அல்லர். இந் நிலையில் நான் அடைந்த காமநோய், பிறர் செலுத்தி விடாமலும் போரை இடையில் சென்று தடுத்து நிறுத்துவார் இல்லாததாலும் குப்பைக் கோழியின் தனிமையை உடைய சண்டையைப் போலத் தானே அழியும்படி அழிந்தாலன்றி இதனை நீக்குவார் இல்லையே." என்றாள் தோழியிடம் தலைவி.

## 140. இன்னாதன செய்யினும் மறவோம்

கைவினை மாக்கள் தம் செய்வினை முடிமார்,
சுரும்பு உண மலர்ந்த வாசம் கீழ்ப்பட,
நீடிய வரம்பின் வாடிய விடினும்,
'கொடியோர் நிலம் பெயர்ந்து உறைவேம்' என்னாது,
பெயர்ந்தும் கடிந்த செறுவில் பூக்கும்
நின் ஊர் நெய்தல் அனையேம் – பெரும!
நீ எமக்கு இன்னாதன பல செய்யினும்,
நின் இன்று அமைதல் வல்லாமாறே.

– *உறையூர்ச் சல்லியன் குமாரன் குறு 309*

"தலைவ, நீ எமக்கு இன்னாதனவாகிய பல செயல்களைச் செய்தாலும், நின்னையன்றிப் பொருந்தி வாழ்வதற்கு வன்மை அற்றவராயினோம். தொழில் செய்யும் உழவர் தமது செய் தொழில் முடிக்கும் பொருட்டு வண்டு உண்ணும்படி மலர்ந்த மலரின் மணம் வீசும் நெய்தற் பூவை நீண்ட வரப்பிலே வாடும்படி விட்டாலும் மீண்டும் தம்மை நீக்கியோரின் வயலினிடத்தே மலர்கின்ற நின் ஊரில் உள்ள பூவிற்கு ஒத்த தன்மை உடையேம் ஆயினோம்," என்றாள் தோழி தலைவனை நோக்கி.

## 141. மாலையும் தனிமையும் உண்டே!

நலத்தகைப் புலைத்தி பசை தோய்த்து எடுத்துத்
தலைப் புடைப் போக்கித் தண் கயத்து இட்ட
நீரின் பிரியாப் பரூஉத் திரி கடுக்கும்
பேர் இலைப் பகன்றைப் பொதி அவிழ் வான் பூ
இன் கடுங் கள்ளின் மணம் இல கமழும்

புன்கண் மாலையும், புலம்பும்,
இன்றுகொல் – தோழி – அவர் சென்ற நாட்டே?
*– கழார்க்கீரன் எயிற்றியன் குறு 330*

"தோழி, நன்மையையும் அழகையும் உடைய வண்ணாத்தி கஞ்சியிலே தோய்த்து எடுத்து முதல் தப்பலை தப்பிவிட்டு குளிர்ந்த நீர்நிலையிலே போட்ட, நீரில் பிரியாத பருத்த ஆடையின் முருக்கை ஒக்கும் பெரிய இலையை உடைய பகன்றையினது கூம்பு மலர்ந்த வெள்ளிய மலர், இனிய கடுமையாகிய கள்ளைப் போல் நறுநாற்றம் இல்லாதனவாகி நாறுகின்ற துன்பத்தைத் தரும் மாலைக் காலமும் தனிமையும் அத் தலைவர் நம்மைப் பிரிந்து சென்ற நாட்டிலே இல்லையோ?" என்றாள் தலைவி தோழியிடம் கூறினாள்.

## 142. வீட்டில் கொண்டு விடுக

நீர் நீடு ஆடின் கண்ணும் சிவக்கும்;
ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்;
தணந்தனை ஆயின், எம் இல் உய்த்துக் கொடுமோ –
அம் தண் பொய்கை எந்தை எம் ஊர்க்
கடும் பாம்பு வழங்கும் தெருவில்
நடுங்கும் அஞர் எவ்வம் களைந்த எம்மே?
*– கயத்தூர் கிழார் குறு 354*

"நீரிலேயே நெடுநேரம் விளையாடினால் கண்களும் செந்நிறத்தை அடையும்; பன்முறை உண்டோரது வாயிடத்தே தேனும் புளிப்புடையதாகும். ஆதலின் நீ எம்மைப் பிரிய விரும்பினை ஆயின், அழகிய குளிர்ந்த பொய்கையை உடைய எம் தந்தையினது ஊரின் கண்ணே, நஞ்சின் கடுமையை உடைய பாம்புகள் ஓடும் தெருவில், நீ முன்பு நடுங்குதற்குரிய மிக்க துன்பத்தை நீக்கிய எம்மை, எம்முடைய வீட்டிற்கு அழைத்துச் சென்று விடுவாயாக!" என்று தோழி தலை வனிடம் இயம்பினாள்.

## 143. மகளைத் தந்தை தழுவினான்

கண்டிசின் – பாண! பண்பு உடைத்து அம்ம:
மாலை விரிந்த பசு வெண் நிலவின்

குறுங் காற் கட்டில் நறும் பூஞ் சேக்கை,
பள்ளி யானையின் உயிர்த்தனன் நசைஇப்,
புதல்வன் தழீஇயினன் விறலவன்;
புதல்வன் தாய் அவன் புறம் கவைஇயினளே.

*– பேயன் குறு 359*

"பாணனே! வெற்றியை உடைய தலைவன் மாலைக் காலத்திலே, விரிந்த இளைய வெண்ணிலா ஒளியில், குறிய கால்களை உடைய கட்டிலினிடத்தே உள்ள நறிய மலர் பரப்பிய படுக்கையில் படுத்தலை உடைய யானையைப் போலப் பெருமூச்சு விட்டானாகி விருப்பத்தினால் தன் மகனைத் தழுவினான். அம் மகனின் தாயாகிய தலைவி அத் தலைவனது புறத்தைத் தழுவினாள். இதனைப் பார்ப்பாயாக. இச் செயல் அழகுடையது." என்று தோழி பாணனுக்குக் கூறினாள்.

## 144. என் வயப்படுத்துவேன்

அரில் பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாள் இரை பெறூஉம் ஊரன்
பொன்கோல் அவிர் தொடித் தற் கெழு தகுவி
எற் புறங்கூறும் என்ப; தெற்றென
வணங்கு இறைப் பணைத் தோள் எல் வளை மகளிர்
துணங்கை நாளும் வந்தன; அவ் வரைக்
கண் பொர, மற்று அதன்கண் அவர்
மணம் கொளற்கு இவரும் மள்ளர் போரே.

*– ஔவையார் குறு 364*

"பிணக்கை உடைய கொடிப் பிரம்புகளைப் போன்ற கோடுகள் பொருந்திய புறத்தை உடைய நீர் நாயானது வாளை மீனாகிய உணவைப் பெறுகின்ற ஊருக்குத் தலைவனுடைய பொன்னாலாகிய திரட்சியும் விளக்கமும் உடைய வளை அணிந்த, தனக்குப் பொருந்திய தகுதியை உடைய பரத்தை என்னைப் புறங்கூறினாள் என்று கூறுவர். அவள் கூறுவது உண்மையா அன்றா என்பது விளங்கும்படி, வளைந்த சந்தை உடைய மூங்கிலைப் போன்ற தோள்களில் ஒளி உடைய வளையை அணிந்த மகளிர் துணங்கைக் கூத்தாடும் நாள்களும் வந்தன. அக் காலத்தில் ஒருவர் கண்

*மற்றொருவர் கண்ணோடு மாறுபடும்படி அத் துணங்கைக் கூத்தினிடத்து, அம் மகளிரை மணம் செய்து கொள்ளும் பொருட்டு, வீரர்களது சேரிப் போரானது விரும்பிக் கொள்ளப்படும்." என்று இற்பரத்தை வேறு ஒரு பரத்தைத் தன்னைப் புறங்கூறினாள் என்று அப்பரத்தைக்குப் பாங்கா யினார் கேட்கக் கூறினாள்.*

## 145. மலையைக் கண்டேனும் ஆற்றிடுவாய்

**கொடியோர் நல்கார் ஆயினும், யாழ நின்**
**தொடி விளங்கு இறைய தோள்கவின் பெறீஇயர்,**
**உவக்காண் – தொழி – அவ் வந்திசினே –**
**தொய்யல் மா மழை தொடங்கலின், அவர் நாட்டுப்**
**பூசல் ஆயம் புகன்றுறீ இழி அருவி**
**மண்ணுறு மணியின் தொன்றும்**
**தண் நறுந் துறுகல் ஓங்கிய மலையே.**

*– மதுரை மருதன் இளநாகன் குறு 367*

*"தோழியே! நெகிழ்ச்சியை உடைய பெரிய மழை பெய்யத் தொடங்குதலினால் அத் தலைவரது நாட்டி லுள்ள ஆரவாரத்தை உடைய மகளிர்த் திரள் விரும்பி நீராடும் பொருட்டுப் புகுகின்ற தண்ணிய நறிய அருவி யினால் கழுவப்பட்ட நீல மணியை போலத் தோன்றுகின்ற குண்டுக் கற்கள் உயர்ந்த மலையை உடைய தலைவர் தண்ணளி செய்யாராயினும்., சந்துகளை உடைய வளைகள் விளங்கும் நின் தோள்கள் அழகு பெறும் வண்ணம் அங்கே வந்து பார்ப்பாயாக." என்று தோழி தலைவிக்குக் கூறினாள்.*

## 146. இனிது வாழ்வேன்

**மெல்லியலோயே! மெல்லியலோயே!**
**நல் நாண் நீத்த பழி தீர் மாமை**
**வன்பின் ஆற்றுதல் அல்லது, செப்பின்,**
**சொல்ல கிற்றாம் மெல்லியலோயே!**
**சிறியரும் பெரியரும் வாழும் ஊர்க்கே,**
**நாள் இடைப் படாஅ நளி நீர் நீத்தத்து**
**இடிகரைப் பெரு மரம் போல,**
**தீது இல் நிலைமை முயங்குகம் பலவே.** *– நக்கீரர் குறு 368*

"மென்மையான இயல்புடையவளே! மென்மையான இயல்புடையாய்! நல்ல நாளிலே நம்மை நீங்கிய குற்றமற்ற மாமையின் இயல்பை, நம் வலிய இயல்பினால் பொறுத்திருத்தலை அன்றி, அத் துன்பத்தைச் சொல்லுதற்கும் ஆற்றல் அற்றோம். சிறியோரும் பெரியோரும் வாழ்கின்ற ஊரில் ஒரு நாளேனும் இடையீடு படாத செறிந்த நீரை உடைய வெள்ளத்தினது திண்ணிய கரையிலே உள்ள பெரிய மரத்தைப் போல தீங்கில்லாத நிலையில் இருந்து இனிப் பலமுறை தலைவரை முயங்குவோமாக!" என்றாள் தலைவி தோழியிடம்.

## 147. ஓருயிரும் ஈருடலும்

பொய்கை ஆம்பல் அணி நிறக் கொழு முகை
வண்டு வாய் திறக்கும் தண் துறை ஊரனொடு
இருப்பின், இரு மருங்கினமே; கிடப்பின்,
வில்லக விரலின் பொருந்தி; அவன்
நல் அகம் சேரின், ஒரு மருங்கினமே.

*– வில்லக விரலினார் குறு 370*

"பொய்கையிலே உள்ள ஆம்பலினது அழகிய நிறத்தை உடைய கொழுவிய அரும்பில் வண்டுகள் இதழை திறக்கும் குளிர்ந்த நீர்த்துறைகளை உடைய ஊருக்கு உரியவனாகிய தலைவனோடு நாம் இருந்தால் இரண்டு உடலை உடையோம். அவனோடு துயின்றால் வில்லை அகப்படப் பிடித்த வீரர்களைப் போல பொருந்தி அவன் தனது நல்ல அகத்தின் கண்ணே சேர்ந்தால் ஓர் உடலை உடையோம்." என்று பரத்தை தலைவிக்கு உற்றார் கேட்கும்படிக் கூறினாள்.

## 148. பேச்சை நம்பமாட்டேன்

உழுந்துடைக் கழுந்தின் கரும்புடைப் பணைத் தோள்,
நெடும் பல் கூந்தல், குறுந்தொடி, மகளிர்
நலன் உண்டு துறத்தி ஆயின்,
மிக நன்று அம்ம – மகிழ்ந! – நின் சூளே.

*– ஓரம்போகியார் குறு 384*

"தலைவனே! உழுந்தங்காயை அடித்தற்குரிய கழுத்து தேய்ந்த தடியைப் போல உள்ள, கரும்பு எழுதிய தொய்யிலை

உடைய, நெடிய பலவாகிய கூந்தலும் தோளும் குறிய வளை களையும் உடைய பரத்தையரது பெண்மை நலத்தை நுகர்ந்து துறந்து ஈண்டு வருவாய் ஆயின் நீ அவர் மாட்டு செய்த சூள் மிக நன்றாயிருந்தது." என்று பரத்தையிடம் சென்று மீண்ட தலைவனிடம் தோழி வாயில் மறுத்துக் கூறினாள்.

## 149. பழி மிகுந்தது

மயங்கு மலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள் தவச் சிலவே அலரே
கூகைக்கோழி வாகைப் பறந்தலைப்
பசும் பூண் பாண்டியன் வினை வடல அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை,
ஒளிறு வாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே

*– பரணர் குறுந் 393*

*"தலைவ! விராவிய பல மலர்கள் உடைய நின் மாலை குழையும்படி அணைந்த நாள்கள் மிகச் சிலவாகும். பழி மொழியோ, கோட்டானாகிய கோழியை உடைய வாகை என்னும் இடத்துள்ள போர்களத்தில், பசிய பூணை அணிந்த பாண்டியனது ஏவலிலே வல்ல அதிகன் தனது யானை யோடு பட்ட காலத்தில் விளங்குகின்ற வாட்படையை உடைய கொங்கர்களுடைய வெற்றியால் உண்டாகிய ஆர வாரத்தினும் மிகப் பெரிதாகயுள்ளது." என்று தலைவிக்குக் கூறுவது போல் தலைவனுக்கு உணர்த்தினாள்.*

## 150. விடுதலும் தொடுதலும்

ஊர் உண் கேணி உண்துறைத் தொக்க
பாசி அற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி,
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே. *– பரணர் குறுந் 399*

*தோழி! பசலையானது தலைவர் நம்மைத் தீண்டுந் தோறும் நம் உடலை விட்டகன்று, பிரியுந்தோறும் பரவுத லால், ஊரினரால் உண்ணப்படும் நீரை உடைய (ஊருணி - குளம்) உண்ணுந்துறையின் இடத்தே கூடிய பாசியைப் போன்றது.*




## நற்றிணை

### 151. வாழ்க அவள்!

ஐய! குறுமகட் கண்டிகும்; வைகி,
மகிழ்நன் மார்பில் துஞ்சி, அவிழ் இணர்த்
தேம் பாய் மராஅம் கமழும் கூந்தல்
துளங்குஇயல் அசைவர, கலிங்கம் துயல்வர,
செறிதொடி தெளிர்ப்ப வீசி, மறுகில்,
பூப் போல் உண்கண் பெயர்ப்ப நோக்கிச்,
சென்றனள் வாழிய, மடந்தை, – நுண் பல்
சுணங்கு அணிவுற்ற விளங்கு பூணள்;
மார்புறு முயக்கிடை ஞெமிர்ந்த சோர் குழை,
பழம் பிணி வைகிய தோள் இணைக்
குழைந்த கோதை, கொடி முயங்கலளே.

*– ஓரம்போகியார் நற் 20*

*"ஐய! ஓர் இளைய மகளைக் கண்டோம். அவள் மருத நிலத் தலைவனாகிய உன்னிடம் தங்கி, உன் மார்பில் துயின்று எழுந்து வண்டுகள் பாய்ந்த மராமரத்தின் அவிழ்ந்த பூங் கொத்துகள் மணக்கும் கூந்தல் அசையும் இயல்போடு அசைந்துவர, ஆடை அசைய, செறிந்த வளையல்கள் ஒலிக்கக் கைவீசி, மலர் போன்ற மையுண்ட கண்களால் உலாவிப் பார்த்து நேற்றுத் தெருவில் சென்றனள். அம் மடந்தை வாழ்க! அவள் நுண்ணிய பலவாகிய தேமல் அழகு செய்யப் பெற்றவள். விளங்கிய அணிகளை உடையவள். உன் மார்பு உள்ள முயக்கத்தினிடையே நெரிந்த காதணியையும், பழைய வருத்தம் தங்கிய இரு தோள்களையும், துவண்ட மாலையை யுமுடைய அவள், கொடிபோல் உன் முயக்கமில்லாது*

இன்று தெருவில் சென்றனள்" என்று பரத்தையிடமிருந்து திரும்பி வந்த தனக்கு யாரையுமே தெரியாதென்றுரைக்கையில் தலைவி ஆத்திரத்துடன் இவ்வாறு உரைத்தாள்.

## 152. யாரையும் தெரியீரோ?

கண்டனென் – மகிழ்ந! கண்டு எவன் செய்கோ? –
பாணன் கையது பண்புடைச் சீறியாழ்
யாணர் வண்டின், இம்மென இமிரும்,
ஏர் தரு தெருவின், எதிர்ச்சி நோக்கி, நின்
மார்பு தலைக்கொண்ட மாண்இழை மகளிர்
கவல் ஏமுற்ற வெய்து வீழ் அரிப் பனி –
கால் ஏமுற்ற பைதரு காலை,
கடல்மரம் கவிழ்ந்தெனக் கலங்கி, உடன் வீழ்பு,
பலர் கொள் பலகை போல –
வாங்கவாங்க நின்று ஊங்கு அஞர் நிலையே.

*– கொற்றனார் நற் 30*

"இனியனே! பாணன் கையிலிருக்கும் மிக நல்ல சீறி யாழ் புதுவண்டு போல இம் என ஒலிக்கும். அழகிய தெருவில் எதிர் பார்த்து உன் மார்பைத் தமக்கிடமாக்கிக் கொண்டனர் மாட்சிமிக்க அணிகலன்களையுடைய பரத்தையர். அவர் ஆசையால் இன்புற்று, நீ பிரிந்த போது வெய்யதாகக் கண்ணீர் வடித்தனர். கடலில் புயல்காற்று வீசியதால் கப்பல் கவிழ்ந்து விட்டது. துன்புற்ற காலமாகிய அப்போது கலக்க மடைந்த கப்பலோடு வீழ்ந்த பலரும் அங்கு மிதந்த பலகை ஒன்றைப் பிடித்துக் கொண்டனர். அப் பலகையை ஒவ் வொருவரும் தனித்தனி இழுப்பது போலப் பரத்தையர் ஒவ்வொருவரும் உன்னை இழுக்க இழுக்க, உன் செறிந்த துன்பத்தின் நிலையை யான் கண்டேன். கண்டு என்ன செய்ய வல்லேன்?" என்று, பரத்தையிடம் உறவாடி வந்த தலைவன் தனக்கு யாரையுமே தெரியாதென்று கூறுகையில் தோழி இவ்வாறுரைத்தாள்.

## 153. கள்வனைப் போல வந்தான்.

நெடு நா ஒள் மணி கடி மனை இரட்ட,
குரை இலைப் போகிய விரவு மணற் பந்தர்,

பெரும்பாண் காவல் பூண்டென, ஒரு சார்,
திருந்துஇழை மகளிர் விரிச்சி நிற்ப,
வெறி உற விரிந்த அறுவை மெல் அணைப்
புனிறு நாறு செவிலியோடு புதல்வன் துஞ்ச,
ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்
பசு நெய் கூர்த்த மென்மை யாக்கைச்
சீர்கெழு மடந்தை ஈர் – இமை பொருந்த,
நள்ளென் கங்குல், கள்வன் போல,
அகன் துறை ஊரனும் வந்தனன் –
சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே.

*– கோண்மா நெடுங்கோட்டனார் நற் 40*

*சிறப்பு மிக்க தலைவன் இல்லத்தில் நீண்ட நாவை யுடைய ஒளிமிக்க மணி ஒலிக்கும். ஒலிக்கும் ஓலைகளால் வேயப்பட்ட பந்தர் மணல் பரப்பில் இருக்கும். பெரிய பாணன் காவல் பூண்டது போல ஒருபக்கம் இருப்பான். திருந்திய அணி கலன்கள் அணிந்த பெண்கள் நல்லோரை எதிர்பார்த்து நிற்பர். இவ்வாறாய இல்லத்தில் நறுமணம் உண்டாக விரித்திருந்த நூலாடையுடைய மெல்லிய படுக்கை யில் அண்மையிற் பிறந்த புதல்வன் செவிலியருகில் உங்குகி றான். சிறப்பு மிக்க தலைவி வெண் சிறுகடுகு அணிந்த நெய்யாட்டு நிறைவேறிய அணிமைக் காலத்தில் பசிய நெய் விளங்கும் மெல்லிய உடம்போடு இரு இமைகளும் பொருந்த தூங்கிக் கிடந்தாள். இருள் செறிந்த இரவிலே அகன்ற நீர்த் துறையையுடைய ஊரனாகிய தலைவனும் கள்வன் போலப் புகுந்தாள். சிறந்த தன் தந்தையின் பெயரைச் சூட்டிக் கொள்ளப் போகும் மகன் பிறந்தான் என்ற காரணத்தால் தலைவன் தன் இல்லம் போந்தான்" என்று தலைவிக்கு வேண்டியவர் கேட்கப் பரத்தை நகையாடினாள்.*

## 154. அறியாமையால் இழந்தேன்

அறியாமையின், அன்னை! அஞ்சி,
குழையன் கோதையன் குறும் பைந் தொடியன்
விழவு அயர் துணங்கை தழூஉகம் செல்ல,
நெடு நிமிர் தெருவில் கைபுகு கொடு மிடை

நொதுமலாளன் கதுமெனத் தாக்கலின்,
'கேட்போர் உளர்கொல், இல்லைகொல்? போற்று' என,
'யாணது பசலை' என்றனன்; அதன் எதிர்,
'நாண் இலை, எலுவ!' என்று வந்திசினே –
செறுநரும் விழையும் செம்மலோன் என,
நறு நுதல் அரிவை! போற்றேன்,
சிறுமை பெருமையின் காணாது துணிந்தே.

– *மருதம் பாடிய இளங்கடுங்கோ* நற் 50

*"அன்னாய், யான் அறியாமையினால் அச்சத்தோடு சென்று கொண்டிருந்தேன். காதணியைக் கையிற் கொண்டவனாய், மாலையை உடையவனாய்ச் சிறிய பசிய வளையல்களையுடையவனாய்த் தலைவன் விழாக் கொண்டாடும் இடத்திற்குத் துணங்கைக் கூத்து ஆடுவோர்க்குத் தலைக்கு கொடுக்கச் சென்று கொண்டிருந்தான். மிகவும் நீண்ட தெரு முடிந்த இடத்தில் பெண்கள் துணங்கை காணத் தங்கும் வளைந்த இடத்தில் இப்போது நொதுமலாளன் ஆகவிருக்கும் தலைவன் விரைவில் வந்து எதிர்ப்பட்டான். அப்போது பார்த்த யான், "உன்னைக் கேட்பாருண்டா? இல்லையா? நீயே அறிந்தால் போதும்" என்று கூறினேன். அப்போது அவன் என்னை அறியாமல், 'யாண்டையது பசலை' என்றனன். அதற்கு எதிராக, 'நண்ப! நீ நாணம் இல்லாதவன்' என்று கூறி வந்துவிட்டேன். நறிய நெற்றியையுடைய பெண்ணே; அவன் பகைவரும் விரும்பும் தலைமையையுடையவன் என்பதைப் போற்றாது என் சிறுமை பெரிதாகலான் ஆராயாது துணிந்து அவ்வாறு கூறி வந்தேன்" என்று தலைவனால் அனுப்பப்பட்ட பாணனை வாயில் மறுத்துத் தோழி கூறினாள்.*

## 155. கோரையும் நெய்தலும் வேண்டும்

மலை கண்டன்ன நிலை புணர் நிவப்பின்
பெரு நெற் பல் கூட்டு எருமை உழவ!
கண்படை பெறாஅது, தண் புலர் விடியல்,
கருங் கண் வராஅல் பெருந் தடி மிளிர்வையோடு
புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ் சோறு
கவர் படு கையை கழும மாந்தி,

நீர் உறு செறுவில் நாறு முடி அழுத்த, நின்
நடுநரொடு சேறிஆயின், இவண்
சாயும் நெய்தலும் ஓம்புமதி; எம்மில்
மாஇருங் கூந்தல் மடந்தை
ஆய் வளைக் கூட்டும் அணியுமார் அவையே.

*– தூங்கலோரியார் நற் 60*

"மலை கண்டாற் போன்ற நிலைபொருந்திய உயரமுள்ள பெரிய பல நெற்கூடுகளையுடைய, எருமை பூட்டியுழும் உழவனே, நீ இரவில் கண்ணுறங்காது குளிர்ச்சியாய்ப் புலரும் விடியற் காலையிலே எழுந்து கரிய கண்ணையுடைய வரால் மீனின் பெரிய தசையைச் சமைத்த குழம்போடு சேர்த்து, உணவுக்குரிய அரிசியால் ஆக்கிய பொலிவுள்ள பெரிய சோற்றுத் திரள்களை விருப்பம் மிக்க கையால் மயக்கங் கொள்ள உண்டு, நீர் மிக்க வயலிலே நாற்று முடிகளை நடுவதற்காக உன் நடும் ஆள்களோடு சென்றால் அங்குள்ள கோரைகளையும் நெய்தல்களையும் களைந்து எறிந்து விடாமல் பாதுகாப்பாயாக. ஏனென்றால் அவை எம் இல்லத்தில் செறிக்கப்பட்ட கரிய பெரிய கூந்தலையுடைய மடந்தைக்கு அழகிய வளையல்களாகப் பூட்டிக் கொள்ளவும் தழை உடையாக அணிந்து கொள்ளவும் முறையே கோரையும் நெய்தலும் உதவும்" என உழவனுக்கு உரைத்தல் போல தலைவனுக்குத் தோழி இற்செறிப்பு உணர்த்தினாள்.

## 156. மறவாது சொல்வாய்

சிறு வெள்ளாங் குருகே! சிறு வெள்ளாங் குருகே!
துறை போகு அறுவைத் தூ மடி அன்ன
நிறம் கிளர் தூவிச் சிறு வெள்ளாங்குருகே!
எம் ஊர் வந்து, எம் உண்துறைத் துழைஇ,
சினைக் கெளிற்று ஆர்கையை அவர் ஊர்ப் பெயர்தி;
அனைய அன்பினையோ, பெரு மறவியையோ –
ஆங்கண் தீம் புனல் ஈங்கண் பரக்கும்
கழனி நல் ஊர் மகிழ்நர்க்கு என்
இழை நெகிழ் பருவரல் செப்பாதோயே?

*– வெள்ளிவீதியார் நற் 70*

"சிறிய வெண்ணிற நாரையே, சிறிய வெண்ணிற நாரையே; நீர்த்துறையிலே வெளுத்த வெள்ளாடையின் மாசற்ற மடி போன்ற வெள்ளை நிறமான சிறகுகளையுடைய சிறிய வெள்ளிய நாரையே; நீ எம் ஊரில் வந்து எமது நீர் உண்ணும் துறைகளில் துழாவிக் கௌிற்று மீன்களை உண்கிறாய். பிறகு அவர் ஊருக்குத் திரும்பப் போகிறாய். அங்கேயுள்ள இனிய நீர் இங்கே பரவிக் கிடக்கும். வயல்களை யுடைய நல்ல ஊரையுடைய என் அன்பருக்கு நீ எனது அணிகள் கழன்ற நோயைச் செப்பாமல் இருக்கிறாய். நீ அவ்வாறாய அன்புடைய பறவையா? அல்லது பெரிய மறதியுடைய பறவையா? எனக்கு விளங்கவில்லையே" என்று தலைவி தன் வேட்கையைத் தலைவனைக் கண்டு கூறுமாறு நாரையிடம் கூறினாள்.

## 157. அவளின்றி மருந்து வேறு இல்லை

'மன்ற எருமை மலர்தலைக் காரான்
இன்தீம் பாற்பயம் கொண்மார், கன்று விட்டு,
ஊர்க் குறுமாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும் புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து,
தழையும் தாரும் தந்தனன்,இவன்' என,
இழை அணி ஆயமொடு தகு நாண் இடைஇ,
தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெருந்தோட் குறுமகள் அல்லது,
மருந்து பிறிது இல்லை, யான் உற்ற நோய்க்கே.

*– பூதன்தேவனார் நற் 80*

"தொழுவத்திலுள்ள அகன்ற தலையையுடைய எருமைக் காரானின் மிகவும் இனிமையுள்ள பாலை நிரம்பப் பெறும் பொருட்டுக் கன்றுகளைத் தொழுவத்தில் கட்டிவிட்டு, எருமைகளை மட்டும் ஓட்டிக் கொண்டு, மேய்க்கும் ஊரிலுள் இளம் சிறுவர்கள் அந்த எருமைகளின் மேலே ஏறிக் கொண்டு வீட்டை விட்டுப் புறப்படும் நன்றாகப் புலர்ந்த விடியற் காலத்தில், விரும்பி வந்து உடுக்கத் தழையும் சூடிக்கொள்ள மாலையும் கொடுத்தான் இவன்" என்று கலன்கள் அணிந்த ஆயத்தோடு, தகுந்த நாணம் தன்னைத் தடைசெய்ய என்னை

யடையத் தை மாதம் குளிர்ந்த குளத்தில் நீராடும் நோன்பு செய்யும் பெரிய தோளையுடைய இந்த இளமகளைத் தவிர யான் கொண்ட நோய்க்கு மருந்து பிறிது இல்லை" என்று தோழி, தன்னுடன் தலைவியை ஊடல் தீர்த்து இணைத்து வைக்காததால் தலைவன் நெஞ்சோடு புலம்பினான்.

## 158. ஊஞ்சல் ஆடியிருந்தால்

ஆடு இயல் விழவின் அழுங்கல் மூதூர்,
உடையோர் பான்மையின் பெருங் கை தூவா,
வறன் இல் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப் புகர் கொண்ட புன் பூங் கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர, ஓடி,
பெருங் கயிறு நாலும் இரும் பனம் பிணையல்
பூங் கண் ஆயம் ஊக்க, ஊங்காள்,
அழுதனள் பெயரும் அம் சில் ஓதி,
நல்கூர் பெண்டின், சில் வளைக் குறுமகள்
ஊசல் உறு தொழில் பூசல் கூட்டா
நயன் இல் மாக்களொடு கெழீஇ,
பயன் இன்று அம்ம, இவ் வேந்துடை அவையே!

*– அஞ்சில் அஞ்சியார் நற் 90*

"கூத்தாட்டம் நடக்கும் இயல்பான மகிழ் விழாவுள்ள ஒலியுடைய பழைய ஊரில், செல்வர் மிகுதியாகவுள்ளமையால் கையுழைப்பும் வறட்சியும் இல்லாத வண்ணாத்தி இரவில் தோய்த்து உணவாக்கிய கஞ்சியிலிட்டுப் புலர்த்திய மெல்லிய அழகிய ஆடையையும் பொன்னரி மாலையையும் மார்பில் அணிந்து அவை அசைய நடந்து வந்தாள் ஒரு பெண். கரிய பனை நாரினாலே திரித்த பெரிய கயிற்றால் பிணித்துத் தொங்கவிட்ட ஊசலில் ஓடிச் சென்று ஏறினாள். பூப் போன்ற கண்களையுடைய தன் ஆயம் ஆட்ட ஆடாளாய் அழுது நீங்கினாள். அவள் அழகிய சிலவாகிய கூந்தலை யுடையவள்; பெண்மையில் குறைவானவள். சில வளையல்களைப் பூண்ட அவள் இளைய பரத்தையாவாள். இவ் வேந்துடைய அவை ஊசல் ஆட்டமான தொழிலை வருத்தத்தோடு செய்யாது. நன்மையில்லாத மாக்களோடு உறவு கொண்டு பயன் இல்லை.

எனவே பாண! போய்வா" என்று தலைவிக்கு உரைப்பாள் போன்று தோழி பாணனுக்குக் கூறி வாயில் மறுத்தாள்.

### 159. தலைவன் நடுநடுங்கினான்!

உள்ளுதொறும் நகுவேன் – தோழி! – வள் உகிர்
மாரிக் கொக்கின் கூரலகு அன்ன
குண்டு நீர் ஆம்பல் தண் துறை ஊரன்
தேம் கமழ் ஐம்பால் பற்றி, என் வயின்
வான் கோல் எல் வலை வெளவிய பூசல்,
சினவிய முகத்து, 'சினவாது சென்று, நின்
மனையோட்கு உரைப்பல்' என்றலின், முனை ஊர்ப்
பல் ஆ நெடு நிரை வில்லின் ஒய்யும்
தேர் வண் மலையன் முந்தை, பேர் இசைப்
புலம் புரி வயிரியர் நலம் புரி முழவின்
மண் ஆர் கண்ணின் அதிரும்,
நன்னர் ஆளன் நடுங்கு அஞர் நிலையே. – *பரணர் நற் 100*

"தோழி! அதை நினைக்குந்தோறும் நான் நகுவேன். பெரிய நகத்தையுடைய மழைக்காலக் கொக்கின் கூம்புநிலை போல ஆழமான குளத்திலுள்ள ஆம்பல் மலரும் தண்ணிய துறையையுடைய ஊரன், பூமணம் கமழும் என் கூந்தலைப் பற்றி இழுத்து மடியில் உட்கார வைத்து என்னிடமுள்ள சிறந்த வேலைப்பாடு அமைந்த ஒளியுள்ள என் கை வளையல் களைக் கழற்றி விளையாடிய பூசலை இப்போது சினங் கொண்ட முகத்தோடு யான் சென்று, "சினங்காட்டாமல் உன் மனைவிக்கு உரைப்பேன்" என்று சொன்னேன். அது கேட்ட வுடன், நன்மையை மேற் கொள்பவராகிய அவர் நடுங்கினார். அந் நடுக்கம், பகைவரது ஊரின் போர் முனையிலே பல நெடிய ஆன் நிரைகளை வில்லின் திறமையாலே கைப்பற்றி அவற்றை ஓட்டிக் கொண்டுவந்து இரவலர்களுக்குக் கொடையாக அளிக்கும் மலையமான் திருமுடிக்காரி என்பவன் அரியணை யிலே கொலு வீற்றிருக்கும்போது, வேற்றுநாட்டுக் கூத்தர் வந்து பரிசில் பெற விரும்பி முழக்கும் மத்தளத்தின் மண் வைத்த பக்கம் அதிர்வது போல இருந்தது" என்று தலைவனின் பரத்தை தலைவியும் பிறரும் கேட்கத் தன் விறலியிடம் கூறினாள்.

## 160. புன்னகையைக் காணலாம்!

தட மருப்பு எருமை மட நடைக் குழவி
தூண் தொறும் யாத்த காண் தகு நல் இல்,
கொடுங் குழை பெய்த செழுஞ் செய் பேதை
சிறு தாழ் செறித்த மெல் விரல் சேப்ப,
வாழை ஈர்ந் தடி வல்லிதின் வகைஇப்,
புகை உண்டு அமர்த்த கண்ணள், தகைபெறப்
பிறை நுதல் பொறித்த சிறு நுண் பல் வியர்
அம் துகில் தலையில் துடையினள், நப் புலந்து,
அட்டிலோளே; அம் மா அரிவை -
எமக்கே வருகதில் விருந்தே! - சிவப்பு ஆன்று,
சிறு முள் எயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகம் காண்கம்மே.

*- மாங்குடி கிழார் நற் 120*

"வளைந்த மருப்பையுடைய எருமையின் இளநடைக் கன்றுகள் தூண்கள் தோறும் கட்டப்பட்ட காணத் தகுந்த நல்ல இல்லம். வளைந்த குழை என்னும் காதணி அணிந்த காதலி அவ் வீட்டில் வாழ்கிறாள். சிறு கணையாழி அணிந்த மெல்லிய விரல் சிவக்கும்படியாக வாழை இலையின் பருத்த அடிக்காம்மைத் திறம்பட அரிந்து வகைப்படுத்திய பின் சமையல் செய்வதால் புகையுண்டு மாறுபட்ட கண்ணை யுடையவளாய் இருக்கிறாள். அழகான பிறை போன்ற அவள் நுதலில் சிறிய நுண்ணிய பல வியர்வைத் துளிகள் தோன்று கின்றன. அவற்றை அழகிய சேலையின் முன்தானையால் துடைத்துக் கொள்கிறாள். நம்மைப் புலந்தாலும் அழகிய மாமை நிறத்தையுடைய அவள் விருந்தினர்க்காகச் சமையல் செய்கிறாள். இத்தகைய நிலையை ஏற்படுத்தும் விருந்து எமக்கு அடிக்கடி வந்து கொண்டிருக்க வேண்டும். இவ்வாறு வந்தால் நம்மைப் புலந்த அம் மகள் சினம் நீங்கி, சிறிய கூரிய பற்கள் தோன்றப் புன்முறுவல் கொள்வாள். அவள் முகத்தை நாம் காணப் பெறுவோம். அது எம் விருப்பம்" என்று விருந்து வாயிலாக புகுந்த தலைவன் சொன்னான்.

## 161. அன்னை சீற்றம் அடைவாள்

நகை நன்கு உடையன் – பாண! – நும் பெருமகன்;
'மிளை வலி சிதையக் களிறு பல பரப்பி,
அரண் பல கடந்த முரண் கொள் தானை
வழுதி, வாழிய பல! எனத் தொழுது, ஈண்டு
மன் எயிலுடையோர் போல, அஃது யாம்
என்னலும் பரியலோ இலம்' எனத் தண் நடைக்
கலி மா கடைஇ வந்து, எம் சேரித்
தாரும் கண்ணியும் காட்டி, ஒருமைய
நெஞ்சம் கொண்டமை விடுமோ? அஞ்ச,
கண்ணுடைச் சிறு கோல் பற்றிக்
கதம் பெரிது உயைடள், யாய்; அழுங்கலோ இலளே.

*– கடுவன் இளமள்ளனார் நற் 150*

*“பாணனே! உன் தலைவன் எல்லாராலும் நகுதற்குரியன். காவல் காக்கும் அரணின் வலிமை சிதையும்படி பல யானை களைப் பரப்பி அழித்து அரண் பலவற்றை வென்ற வலிமை மிக்க சேனையை உடையவன் வழுதி என்பான். அவன் பலகாலம் வாழ்க எனத் தொழுது ஒன்று சேர்ந்திருக்கும் நிலையான மதிலுடைய குறுநில மன்னர் போல எம்மிடம் வந்தான் தலைவன். அதற்கு யாம் சிறிதும் இரங்குதல் செய்யோம் எனக் கூறினோம். அதன் பிறகு, மெல்லிய நடையுடைய குதிரையைச் செலுத்தி எம் சேரி வந்து தலை வன் தாரும் கண்ணியும் காட்டி ஒரு தன்மையான என் நெஞ்சத்தைக் கவர்ந்து கொண்டான். அதனால் இனித் தலைவனை விடுதல் அமையுமோ? அமையாது. எம் தாய் நீ அஞ்சும்பட்டி கணுக்களையுடைய சிறிய மூங்கிற் கோலைப் பிடித்துக் கொண்டு சினம் பெரிதுடையவளாய் இருப்பாள். அவள் எதற்கும் இரங்குகிறவள் இல்லை.” எனப் பரத்தை தலைவனை நெருங்கிப் பாணன் இருப்பைக் கண்டு கூறினாள்.*

## 162. தலைவரைக் காத்திட எழுவோம்

மடக் கண், தகரக் கூந்தல், பணைத் தோள்,
வார்ந்த வால் எயிற்று, சேர்ந்து செறி குறங்கின்,

பிணையல் அம் தழை தைஇத், துணையிலள்
விழவுக் களம் பொலிய வந்து நின்றனளே;
எழுமினோ எழுமின், எம் கொழுநற்கு ஆக்கம்;
ஆரியர் துவன்றிய பேர் இசை முள்ளூர்ப்,
பலர்உடன் கழித்த ஒள் வாள் மலையனது
ஒரு வேற்கு ஓடியாங்கு, நம்
பன்மையது எவனோ, இவள் வன்மை தலைப்படினே?

*– ஆசிரியர் ? நற் 170*

*செவ்வரிக் கண்; மயிர்ச்சாந்து பூசிய கூந்தல்; மூங்கில் போன்ற தோள்; நிரைந்த வெள்ளை நிறமான பற்கள்; திரண்டு நெருங்கிய தொடைகள்; இவற்றையுடையவள் ஒப்பற்ற விறலி, பின்னிய அழகிய தழையுடையை உடுத்தி விழாக் களம் பொலிய வந்து நின்றனள். "விரைந்து எழுங்கள், நம் கணவன் மார்களைக் காப்போம். விறலியின் வலிமை கூடி விடு மானால் நமது பன்மை என்ன செய்ய முடியும்? பெரிய புகழையுடைய முள்ளூர்ப் போர்க்களத்தில் ஆரியர்கள் நெருங்கிப் பல எண்ணிக்கையில் இருந்தவர்கள், ஒள்ளிய வாள்படையை யுடைய மலையமான் திருமுடிக் காரியின் ஒரு வேற்படைக்கு ஆற்றாது தோற்றோடினர். அதுபோல நம் கூட்டம் என்ன செய்ய முடியும்? அழிந்து பயனில்லாது போகும்"- என்றனர் தோழியர்கள்.*

## 163. என்னோடு நீங்கும் இவர்கள் பகை

பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலின், செந்நெல்
விரவு வெள்ளரிசியின் தாஅம் ஊரன்
பலர்ப் பெறல் நசைஇ, நம்இல் வாரலனே;
மாயோள், நலத்தை நம்பி விடல் ஒல்லாளே;
அன்னியும் பெரியன்; அவனினும் விழுமிய
இரு பெரு வேந்தர், பொரு களத்து ஒழித்த
புன்னை விழுமம் போல,
என்னொடு கழியும் – இவ் இருவரது இகலே.

*– ஆசிரியர் ? நற் 180*

"வயலருகில் இருக்கும் பலா மர இலைகளைக் கூடாக்கிச் செந்நிற எறும்புகள் முட்டையிட்டு நெருங்கி மொய்த்திருக்கும். அவ் வயலுக்கு வந்த நாரை இரையுண்ண அக் கூட்டைத் தேய்த்தலாலே அம் முயிறுகளும் அவற்றின் முட்டைகளும் உதிரும். அது, சிவந்த நெல் கலந்த வெண்மையான அரிசி போலப் பரந்து கிடக்கும். அவ்வாறாகிய ஊரன் பரத்தையர் பலரைப் பெற்று நுகர விரும்பியதால் நம் இல்லத்திற்கு வரவில்லை. வந்தாலும் மாமை நிறத்தையுடைய தலைவி, அவன் நலத்தை விரும்பிப் புலத்தலை விட்டு விட உடன்பட மாட்டாள். அன்னியும் பெரிய திதியனும் விழுமிய இருபெரு வேந்தர்கள். அவரது போர்க்களத்தில் அழிந்த புன்னை மரம் இருவர் போரையும் ஒழித்தது. அதுபோல யான் ஒழிந்தால் இவ் இருவரது இகலும் ஒழியும்" எனப் பரத்தையிடமிருந்து வந்த தலைவன் தலைவியை நாடத் தோழி தலைவியின் சினத்தை ஆற்றாமையால் இவ்வாறுரைத்தாள்.

## 164. பாணரைப் பற்றியும் பகர்வாயாக

கண்ணி கட்டிய கதிரல் அன்ன
ஒண் குரல் நொச்சித் தெரியல் சூடி,
யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்,
'சாறு' என நுவலும் முது வாய்க் குயவ!
ஈதும் ஆங்கண் நுவன்றிசின் மாதோ –
ஆம்பல் அமன்ற தீம் பெரும் பழனத்துப்
பொய்கை ஊர்க்குப் போவோய் ஆகிக்,
'கை கவர் நரம்பின் பனுவற் பாணன்
செய்த அல்லல் பல்குவ – வை எயிற்று,
ஐது அகல் அல்குல் மகளிர்! – இவன்
பொய் பொதி கொடுஞ் சொல் ஓம்புமின்' எனவே

*– கூடலூர்ப் பல்கண்ணனார் நற் 200*

"அரும்பு கட்டிய கதிர்போன்ற ஒள்ளிய பூங் கொத்தையுடையது நொச்சி. அந்த நொச்சியால் ஆக்கிய மாலையைத் தரித்து, ஆறு கிடந்தது போன்ற அகன்ற நெடிய தெருவில், திருவிழா என்று எடுத்துச் சொல்லிச் செல்லும் முதிய

அறிவுள்ள குயவனே, ஆம்பல் நெருங்கிய இனிய பெரிய மருத நிலத்தில் பொய்கையுள்ள ஊர்க்குப் போய்ச் சேர்ந்து, அங்குள்ள மகளிரைப் பார்த்து, "கூரிய பற்களையும் மெல்லிய தாய் அகன்ற அல்குலையுமுடைய மகளிரே, கை விரலால் வாசிக்கப்படும் நரம்பினாலே பாட்டுப் பாடும் பாணன் செய்த துன்பங்கள் பெருகின. இவன் பொய் பொதிந்த கொடிய சொற்களை நம்பாமல் உம்மைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்" என்று இதனையும் சேர்த்து அங்குக் கூறிச் செல்லுக" என்று பரத்தையிடமிருந்து வந்த தலைவன் தூதனுப்ப அதனைத் தலைவி வெறுக்கையில், திருவிழா பற்றி பெருமிதம் பேசும் குயவனிடம் தோழி கூறினாள்.

## 165. பண்பே செல்வம்

**அரிகால் மாறிய அம் கண் அகன் வயல்**
**மறு கால் உழுத ஈரச் செறுவின்,**
**வித்தொடு சென்ற வட்டி பற்பல**
**மீனொடு பெயரும் யாணர் ஊர!**
**நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்**
**செல்வம் அன்று; தன் செய் வினைப் பயனே;**
**சான்றோர் செல்வம் என்பது, சேர்ந்தோர்**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென் கட் செல்வம் செல்வம் என்பதுவே.**

*- மிளைகிழான் நல்வேட்டனார் நற். 210*

"நெல்லறுத்து நீங்கப் பெற்றது வயல். அழகிய இடமகன்ற அவ் வயலில் மறுபடியுழுத ஈரமுள்ள சேற்றில் விதைக்க விதையோடு சென்ற கடகப்பெட்டி (வட்டி) பற்பல மீன்களோடு திரும்பி வரும் புது வருவாயையுடைய ஊரனே; உள்ளதும் இல்லதும் சேர்த்து அள்ளிவிட்டுப் பேசுதலும் விரைந்து செல்பவற்றை ஊர்ந்து செல்லுதலும் செல்வம் அல்ல. அவையெல்லாம் செய்த வினையின் பயனாக வந்து வாய்க்கக் கூடியவை. சான்றோர் செல்வம் என்று போற்றக் கூடியது யாது எனில், தன்னைச் சேர்ந்தவர்களின் துன்பம் கண்டபோது அஞ்சி, நெகிழ்ந்துருகி, அதைப் போக்கி இனியராய் விளங்கும் தன்மையே, அதுவே உண்மையான செல்வம் ஆகும்" என்று

பரத்தையிடமிருந்து மீண்ட தலைவன் தோழியின் துணையை நாட மறந்து மனிதப் பண்பை விளக்கிக் கூறினான்.

## 166. விரும்பத் தக்கவர் அவரே

துனி தீர் கூட்டமொடு துன்னார் ஆயினும்;
இனிதே, காணுநர்க் காண்புழி வாழ்தல்;
கண்ணுறு விழுமம் கை போல் உதவி,
நம் உறு துயரம் களையார் ஆயினும்,
இன்னாது அன்றே, அவர் இல் ஊரே;
எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்
குருகு ஆர் துழனியின் இதணத்து ஆங்கண்,
ஏதிலாளன் கவலை கவற்ற,
ஒரு முலை அறுத்த திருமாவுண்ணிக்
கேட்டோர் அனையர் ஆயினும்,
வேட்டோர் அல்லது, பிறர் இன்னாரே.

*– மதுரை மருதன் இளநாகனார் நற் 216*

"வெறுப்புத் தீர்ந்த கூட்டத்திற்கு என் காதலர் என்னை நெருங்காராயினும், கண்டு மகிழத் தக்க அவரைக் காணுமிடத்து வாழ்க்கை இனிதாயுள்ளது. கண் அடைந்த துன்பத்தை நீக்கக் கை பயன்படுவது போல நாம் அடைந்த மனத் துன்பத்தை என் காதலர் நீக்காராயினும், அவர் இல்லாத ஊர் எனக்கு இனிமையற்றதாய் உள்ளது. தீப் போன்ற பூவுடைய வேங்கை மரத்தைத் தெய்வம் காக்குமிடத்தில், பறவை நிறைந்த வயலில் அமைந்துள்ள பரணின் பக்கத்தில் அயலான் ஒருவன் செய்த கொடுஞ் செயலால் மனக்கவலை மிகவும் வருத்த, ஒரு முலையை அறுத்த திருமாவுண்ணி என்பவள் துயரத்தைக் கேள்விப்பட்டோர், வருத்தம் அடைந்தனராயினும், அவளை விரும்பியவர் ஒழிக மற்றவர் அவ்வளவு துன்பமடைந்திருக்க மாட்டார்" என்று பரத்தை தலைவனிடம் உள்ள பற்றார்வத்தை தோழியர் அறியக் கூறினாள்.

## 167. பரத்தையின் பக்கம் சேர்வாய்

முயப் பிடிச் செவியின் அன்ன பாசடை,
கயக் கணக் கொக்கின் அன்ன கூம்பு முகை,

கணைக் கால், ஆம்பல் அமிழ்து நாறு தண் போது,
குணக்குத் தோன்று வெள்ளியின், இருள் கெட விரியும்
கயற்கணம் கலித்த பொய்கை ஊர!
முனிவு இல் பரத்தையை என் துறந்து அருளாய்;
நனி புலம்பு அலைத்த எல்லை நீங்க,
புது வறம்கூர்த்த செறுவில் தண்ணென
மலி புனல் பரத்தந் தாஅங்கு,
இனிதே தெய்ய, நிற் காணுங்காலே.

*– ஆலங்குடி வங்கனார் நற் 230*

*“பெண் யானையின் நெருங்கிய காதுகள் போலப் பசிய இலைகள்; குளத்தில் கூட்டமான கொக்குகள் போலக் கூம்பிய மொட்டுகள்; இவற்றிற்கேற்ற திரண்டதண்டு; இவற்றை உடைய ஆம்பலின் அமிழ்து கமழும் குளிர்ந்த அலரும் பருவத்து அரும்புகள் கீழ்த்திசையில் தோன்றும் வெள்ளி போல இருள் கெடும்படி மலரும், கயல் மீன் கூட்டம் மிக்க பொய்கையையுடைய ஊரனே! வெறுப்பு இல்லாத பரத்தையை, எம்மைக் கைவிட்டு அருள்செய்வாய், மிக்க தனிமைத் துன்பம் வருத்திய எல்லை நீங்க, புதிய வறட்சி மிக்க வயலில் குளிரும்படி மிக்க நீர் பரவி நிறைந்தாற் போல உன்னைக் காணும் போதெல்லாம் எமக்கு இனிமை ஏற்படுகிறது. அதுவே போதும்” என்று பரத்தையுடன் தொடர்பு கொண்ட தலைவன் தலைவியின் அன்பு பெற வேண்டுகையில் தோழி மறுத்துரைத்தாள்.*

## 168. நீர் யார்?

நகுகம் வாராய் – பாண! பகுவாய்
அரி பெய் கிண்கிணி ஆர்ப்ப, தெருவில்
தேர் நடை பயிற்றும் தேமொழிப் புதல்வன்
பூ நாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
காமர் நெஞ்சம் துரப்ப, யாம் தன்
முயங்கல் விருப்பொடு குறுகினேமாகப்,
பிறை வனப்பு உற்ற மாசு அறு திருநுதல்
நாறு இருங் கதுப்பின் எம் காதலி வேறு உணர்ந்து,

வெரூஉம் மான் பிணையின் ஒரீஇ,
யாரையோ? என்று இகந்து நின்றதுவே!

*– மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் நற் 250*

*“பாண, நகைப்போம், வருக. பிளந்த வாய் வழி பரல்கள் கிண்கிணி காலில் கிடந்து ஒலிப்பத் தெருவிலே வந்து சிறு தேர் உருட்டி நடை பழகிக் கொண்டிருந்த, தேன் போன்ற இனிய மொழிகளைப் பேசும் என் புதல்வனைக் கண்டேன். அவனைத் தூக்கி என் மார்போடு அணைத்தேன். பூமணம் கமழும் அவனது சிவந்த வாய் நீராலே என் மார்புச் சந்தனம் சிதைந்தது. அச் சிதைவோடு என் வேட்கையுள்ள நெஞ்சம் தூண்டிச் செலுத்தியதால் யான் அவளைத் தழுவும் விருப்பத் தோடு குறுகினேன். அப்போது மூன்றாம் பிறைத் திங்கள் போன்ற அழகு பொருந்திய குற்றமற்ற சிறப்புடைய நெற்றியை யும் மணம் கமழும் கரிய கூந்தலையுமுடைய என் காதலி வேறுபட நினைத்து அஞ்சிய மாண்பினை போல ஒதுங்கிச் சென்று, யாரையோ என்று சொல்லி அப்பால் சென்று நின்றாள்.” பரத்தையுடன் பயின்ற தலைவன் தலைவி ஏற்க மாட்டாள் என்றறிந்து தன் செல்வனுடன் செல்கையில் ‘நீர் யார்’ என்றுரைத்தாள்.*

## 169. நான் மறக்கவில்லை

கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை
பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்,
தண்டு சேர் மள்ளரின் இயலி, அயலது
குன்று சேர் வெண் மணல் துஞ்சும் ஊர!
வெய்யை போல முயங்குதி: முனை எழத்
தெவ்வர்த் தேய்த்த செவ் வேல் வயவன்
மலி புனல் வாயில் இருப்பை அன்ன, என்
ஒலி பல் கூந்தல் நலம் பெறப் புனைந்த
முகை அவிழ் கோதை வாட்டிய
பகைவன்மன்? யான் மறந்து அமைகலனே!

*– பரணர் நற் 260*

*“வலிமையான கால்களையுடைய எருமை கழுநீர் மலரைத் தின்று, பொய்கையிலுள்ள குளிர்ந்த தாமரை மலரை*

வெறுத்துக், கையில் தடியையுடைய வீரரைப் போல நடந்து, பக்கத்திலுள்ள குன்றுபோற் சேர்ந்த வெள்ளையான மணலில் துயிலும் ஊரனே, நீ இப்போது மிகவும் காதல் உள்ளவன் போல நெருங்குகிறாய். போர் எழப் பகைவர் களைத் தொலைத்தவனும் சிவந்த வேற்படை உடைய வனுமான வயவன் என்பவனுக்கு உரிமையானது நீர்வளம் மிக்க இருப்பையூர். அவ் ஊர் போன்ற என் தழைத்த பல் கூந்தல் அழகு பெறப் புனைந்த அரும்பு மலர்ந்த பூமாலை வாடும்படி செய்த பகைவன் நீ, யான் உன் செய்கையை மறந்து விடவில்லை. ஆதலால் என்னைத் தொடாதே" என்று பரத்தையிடமிருந்து வந்த தலைவனிடம் தலைவி ஊடிக் கூறினாள்.

## 170. விருந்தினரால் ஊடல் தவிர்த்தேன்

'கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம், கொக்கின்
கூம்பு நிலை அன்ன முகைய ஆம்பற்
தூங்கு நீர்க் குட்டத்து, துடுமென வீழும்
தண் துறை ஊரன் தண்டாப் பரத்தமை
புலவாய்' என்றி – தோழி, – புலவேன் –
பழன யாமைப் பாசறைப் புறத்துக்,
கழனி காவலர் சுரி நந்து உடைக்கும்,
தொன்று முதிர் வேளிர், குன்றூர் அன்ன என்
நல் மனை நனி விருந்து அயரும்
கைதூவின்மையின் எய்தாமாறே. — *பரணர் நற் 280*

"கொக்கின் கூம்பிய நிலைபோன்ற அரும்புகளையுடைய ஆம்பல் மலர் நிறைந்திருக்கும் குளத்து ஆழமான நீரிலே மா மரத்திலிருந்து உதிர்ந்து ஒழிந்த இனிய மாம்பழம் "துடும்" என விழும். அவ்வாறான தண்ணிய துறையை யுடைய மருத நிலத் தலைவன் நீங்காத பரத்தைமை கண்டும் புலவாதே" என்று என்னைப் பாத்துச் சொல்கிறாய். தோழியே, மிகப் பழைய வேளிர்களுடைய குன்றூர் என்பதில் வயல்களைக் காவல் செய்வோர். வயல் ஆமையின் பசிய இலைபோலக் காணப்படும் முதுகில் தாம் சுடுகின்ற நத்தையை உடைத்து உண்பர். அந்த ஊர் போன்ற எனது நல்ல மனையில் விருந்தி

னர்களை ஓம்புவதில் கைவிடாமலிருப்பதால் அவரை எதிர்ப் படவில்லை. அதனால் யான் புலவாது உள்ளேன்." என்று போற்றா ஒழுக்கமுற்று வந்த தலைவன் தோழியைத் தூதுவிட அவளிடம் தலைவி இவ்வாறு கூறினாள்.

## 171. வண்டு மகன்

வயல் வெள் ஆம்பல் சூடு தரு புதுப் பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
ஓய்நடை முது பகடு ஆரும் ஊரன்
தொடர்பு நீ வெஃகினை ஆயின், என் சொல்
கொள்ளல் மாதோ, முள் எயிற்றோயே,
நீயே பெரு நலத்தையே; அவனே,
'நெடு நீர்ப் பொய்கை நடு நாள் எய்தி,
தண் கமழ் புது மலர் ஊதும்
வண்டு' என மொழிப; 'மகன்' என்னாரே.

*- மதுரை மருதன் இளநாகனார் நற் 290*

"முள்போன்ற கூரிய பற்களையுடையவளே! வயலிலே யுள்ள வெள்ளை நிறமான ஆம்பல் அறுபட்டுச் சூட்டில் உள்ளன. அப்போது மலர்ந்த புதிய ஆம்பற் பூவைக் கன்றை யுடைய புனிற்றா தின்னும். அது தின்ற மிச்சிலை ஓய்ந்த நடை யுள்ள முதிய காளைமாடு தின்னும். அவ்வாறாய ஊரை யுடைய தலைவன் தொடர்பை நீ விரும்பினால் என் சொல்லை ஏற்றுக் கொள்ளுக. நீயோ, பெருமை அடையக் கூடிய அழகை யுடையவள். அவனோ, "நிரம்பிய நீரையுடைய பொய்கையில் நள்ளிரவில் அடைந்து நறுமணமுள்ள புது மலரைத் தேனுக் காக ஊதும் வண்டு போன்றவன்" என்று உலகத்தார் சொல்லுவர். அவனை மகன் என்று சொல்லார். ஆதலால் நீ அவனிடம் புலவாதிருப்பாயாக" என்று பரத்தை விறலியிடம் போலத் தலைவியின் ஊடலைத் தவிர்க்கக் கூறினாள்.

## 172. வேறுபட்ட செயல்

சுடர்த் தொடிக் கோமகள் சினந்தென, அதன் எதிர்
மடத் தகை ஆயம் கைதொழுதாஅங்கு,
உறு கால் ஒற்ற ஒல்கி, ஆம்பல்

தாமரைக்கு இறைஞ்சும் தண் துறை ஊரன் –
சிறு வளை விலை எனப் பெருந் தேர் பண்ணி, எம்
முன் கடை நிறீஇச் சென்றிசினோனே!
நீயும், தேரொடு வந்து பேர்தல் செல்லாது,
நெய் வார்ந்தன்ன துய் அடங்கு நரம்பின்
இரும் பாண் ஒக்கல் தலைவன்! பெரும் புண்
ஏஎர் தழும்பன் ஊணூர் ஆங்கண்,
பிச்சை சூழ் பெருங் களிறு போல, எம்
அட்டில் ஓலை தொட்டனை நின்மே. – *பரணர் நற் 300*

*"நெய் வடிந்தாற் போன்ற பிசிர் அடங்கிய நரம்பு பூட்டிய யாழையுடைய பெரிய சுற்றத்தைக் கொண்ட பாணர் தலைவனே, ஒளியுள்ள வளையல்கள் அணிந்த அரசி சினந்தால், வேலைக்காரிகள் தலைகுனிந்து வணங்குவார்கள். அதுபோல விரைவான காற்று அடிப்பதினாலே ஆம்பல் குவிந்து தாமரையிடத்திலே வந்து சாய்ந்து வணங்கி நிற்கும். அவ்வாறாய குளிர்ந்த துறைக்குத் தலைவன் ஒருவன் பெரிய தேரை அழகு செய்து உன் காதலியின் சிறிய வளையலின் விலை (பெண்ணுக்கு கையுறை) என்று எம் இல்லத்தின் வாயிலின் முன்னே நிறுத்திவிட்டுச் சென்று விட்டான். நீயும் அவ்வாறு தேரொடு வந்து பெண் பேசிப் போக முடியாமல் இங்கே நிற்கிறாய். போரிலே மார்பில் பெரும் புண்ணை ஏற்று அழகு பெற்ற 'தழும்பன்' என்பவனுக்கு உரிமையானது ஊணூர் என்பது. அந்த ஊரை யானை வாழும் மலை சூழ்ந்துள்ளது. அதிலுள்ள ஒரு யானை வீட்டின் ஒரு புறத்தில் ஒதுங்கி நிற்பது போல எம் சமையல் அறையின் பனை ஓலையால் வேயப்பட்ட கூரையின் ஓலையைத் தொட்டுக் கொண்டு ஒதுங்கி நிற்கின்றாய். நீ அப்படியே நிற்பாயாக. வேறு என்ன செய்யப் போகிறாய்" என்று ஒரு பரத்தையை மற்றொரு பரத்தையை நாடும் தலைவனைக் கண்டு ஆத்திரமுடன் கூறினாள் விறலி.*

## 173. மிகைப்படுத்துவதில் வல்லவன்

விளக்கின் அன்ன சுடர் விடு தாமரை,
களிற்றுச் செவி அன்ன பாசடை தயங்க,

உண்துறை மகளிர் இரிய, குண்டு நீர்
வாளை பிறழும் ஊரற்கு, நாளை
மகட் கொடை எதிர்ந்த மடம் கெழு பெண்டே!
தொலைந்த நாவின் உலைந்த குறு மொழி
உடன்பட்டு, ஓராத் தாயரொடு ஒழியுடன்
சொல்லலைகொல்லோ நீயே – வல்லைக்,
களிறு பெறு வல்சிப் பாணன் கையதை
வள் உயிர்த் தண்ணுமை போல,
உள் யாதும் இல்லது ஓர் போர்வைஅம் சொல்லே?

*– பரணர் நற் 310*

"விளக்குப் போல ஒளிவிடக் கூடிய தாமரை மலரும் ஆண் யானையின் செவிபோன்ற தாமரை இலையும் விளங்க வுள்ள ஆழமான பொய்கையில் நீருண்ணும் துறையில் பெண்கள் அஞ்சியோடும்படி வாளைமீன் துள்ளும் ஊரனுக்கு ஒரு நாளைக்கு ஒரு பரத்தையைக் கொணர்ந்து கொடுக்க ஏற்றுக்கொண்ட அறியாமையுடைய விறலியே, மெய்ம்மை தொலைந்த உன் நாவினால் சொல்லிய நிலையற்ற குறு மொழிக்கு உடன்பட்டு ஆராயாத பரத்தையரின் தாய்மாரிடம் ஒரு சார்பு எய்தி, யானைகளைப் பரிசிலாகப் பெற்று உணவைப் பெறும் பாணனது கையிலுள்ள வளம் பொருந்திய ஒலியையுடைய தண்ணுமை போல உள்ளே யாதும் இல்லாத - ஒரு போர்வையால் மறைத்திருப்பது போன்ற - அழகிய சொற்களை நீ விரைவாகச் சொல்வாயல்லையோ?" என்று பரத்தையிடம் பிரிந்து வந்த தலைவன், தலைவியிடம் தூதாக விடுத்த விறலி எதிர்த்து இவ்வாறு கூறினாள்.

## 174. இவனையும் கைப்பற்றினள்

'விழவும் மூழ்த்தன்று; முழவும் தூங்கின்று;
எவன் குறித்தனள்கொல்?' என்றிஆயின் –
தழை அணிந்து அலமரும் அல்குல், தெருவின்,
இளையோள் இறந்த அனைத்தற்கு, பழ விறல்
ஓரிக் கொன்ற ஒரு பெருந் தெருவில்,
காரி புக்க நேரார் புலம்போல்,
கல்லென்றன்றால், ஊரே; அதற்கொண்டு,

காவல் செறிய மாட்டி, ஆய்தொடி
எழில் மா மேனி மகளிர்
விழுமாந்தனர், தம் கொழுநரைக் காத்தே. — *கபிலர் நற் 320*

"ஊரிலே திருவிழா முடிந்தது. முழவு ஒலிப்பதும் ஒழிந்தது. வேறு பரத்தை யாது குறித்தனள் என்றால் கூறுதும். அசையும் அல்குலில் தழையுடை யணிந்து தெருவில் அவ் இளையோள் சென்றாள். அதற்கே இவ் ஊரில் சலசலப்பு ஒலியுண்டாயிற்று. பழைய வெற்றியுடைய வல்வில் ஓரியைக் கொன்று, திருமுடிக் காரி புகுந்தபோது பகைவர் புலத்து ஒப்பற்ற பெருந் தெருவில் பேரிரைச்சல் ஏற்பட்டது. அவ் ஒலிபோல இவ் ஊரிலும் உண்டாயிற்று. அது கொண்டு ஆய்ந்த வளையையும் மாந்தளிர் போன்ற உடல் அழகினையும் உடைய இல்லத்துப் பெண்கள் காவல் செறியச் செய்து தம் கணவன்மார்களைப் பாதுகாத்துச் சிறப்படைந்தனர்" என்று ஒரு பரத்தை, மற்றொரு பரத்தையிடம் செல்லும் தலைவனைப் பற்றி விறலியிடம் கூறினாள்.

## 175. புல்லிய மனத்தில் பண்பாடு ஏது?

தட மருப்பு எருமைப் பிணர்ச் சுவல் இரும் போத்து,
மட நடை நாரைப் பல் இனம் இரிய,
நெடு நீர்த் தண் கயம் துடுமெனப் பாய்ந்து,
நாட் தொழில் வருத்தம் வீட, சேண் சினை
இருள் புனை மருதின் இன் நிழல் வதியும்
யாணர் ஊர! நின் மாண் இழை மகளிரை
எம் மனைத் தந்து நீ தழீஇயினும், அவர்தம்
புன் மனத்து உண்மையோ அரிதே: அவரும்,
பைந் தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து,
நன்றி சான்ற கற்போடு
எம் பாடு ஆதல் அதனினும் அரிதே.
— *ஆலங்குடி வங்கனார் நற் 330*

"வளைந்த மருப்பையும் வலிய பிடரியையுமுடைய கரிய எருமைக் கடா, மடநடை நாரையும் பல கூட்டமும் பறந்தோட, நிரம்பிய நீருடைய குளிர்ந்த குளத்தில் 'துடும்' எனப் பாய்ந்து தன் அன்றைய நாள் வருத்தத்தை நீக்கும்.

அதன் பிறகு உயர்ந்த கிளைகளையும் அடர்ந்த இருளையு முடைய மருத மரத்தின் இனிய நிழலில் வந்து தங்கியிருக்கும். அவ்வாறாய் புதிய வருவாயையுடைய ஊரனே, சிறந்த அணி கலன்களை அணிந்த உன் பரத்தையரை எம் மனைக்கே அழைத்து வந்து நீ தழுவி வாழ்ந்தாலும் அவர்களின் புன்மை யான மனத்தில் உண்மையான அன்பு விளங்குதல் அரிதாகும். அவர்களும் பெண்களையும் ஆண்களையும் பெற்று அறம் நிறைந்தவர்களாய்க் கற்பு உடையவர்களாய் எம்மைப்போல் எம் தகுதி யுடையவர்களாய் ஆவது அதைவிட அரிதாகும். இவற்றை நீ அறிந்தாயில்லை" என்று தலைமகனை தோழி வாயின் மறுத்தாள்.

## 176. உன்னை வெறுக்கவும் இல்லை

புல்லேன், மகிழ்ந! புலத்தலும் இல்லேன் –
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படை மாண் பெருங் குளம் மடைநீர் விட்டென,
கால்அணைந்து எதிரிய கணைக் கோட்டு வாளை
அள்ளல்அம் கழனி உள்வாய் ஓடி,
பகடு சேறு உதைத்த புள்ளி வெண் புறத்துச்,
செஞ் சால் உழவர் கோல் புடை மதரிப்,
பைங் காற் செறுவின் அணைமுதல் பிறழும்
வாணன் சிறுகுடி அன்ன, என்
கோள் நேர் எல் வளை நெகிழ்த்த நும்மே! – *நக்கீரர் நற் 340*

"மகிழ்ந, சிறுகுடி என்னும் ஊர் போன்ற அழகிய வேலைப் பாடமைந்த ஒளிபொருந்திய என் வளையல்களை நெகிழ்த்த உன்னைப் புல்லேன்; புலத்தலும் இல்லேன். ஏனென்றால் கேள்: பாகன் குறிப்பது தவிரப் பிற கல்லாத யானைகளையும் விரைவாச் செல்லும் தேரையுமுடையவன் செழியன். அவன் பெயராலே செய்தனர் சிறந்த ஒரு குளம். அதன் மடை வழியே நீரை விட்டனர். அந் நீர் வெளியே சென்றது. குளத்திலிருந்த திரண்ட மருப்பையுடைய வாளை மீனும் அந் நீரின் கால்வாயை அடைந்து எதிர் சென்றது. அதன் பின்னர் சேற்றை யுடைய வயலின் உள்ளே புகுந்தது. அங்கே உழுகின்ற எருமைக் கடாவின் சேறுபட்ட காலில்

படாமல் புள்ளியுள்ள வெள்ளையான முதுகோடு ஓடியது. அதைக் கண்ட செவ்விய சால் அடித்து உழும் உழவர் தம் கைக் கோலால் அடித்தனர். அந்த அடிக்கும் அஞ்சாது ஒதுங்கி அவ் வாளை மீன் பசிய கால்வாயுள்ள வயல் வரப்பின் பக்கத்தில் பிழைத்துப் புரண்டது. அதுவே வாணன் என்பவனின் சிறுகுடி என்னும் ஊர்" என்று தன்னை மறந்து பரத்தையரிடம் இருந்து திரும்பிய தலைவனிடம் தலைவி வெறுத்துக் கூறினாள்.

## 177. அவளுடனே இனிது வாழ்க

**வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ,**
**பழனப் பல் புள் இரிய, கழனி**
**வாங்கு சினை மருதத் தூங்குதுணர் உதிரும்**
**தேர் வண் விராஅன் இருப்பை அன்ன, என்**
**தொல் கவின் தொலையினும் தொலைக! சார**
**விடேஎன்; விடுக்குவென் ஆயின், கடைஇக்**
**கவவுக் கை தாங்கும் மதுகைய, குவவு முலை**
**சாடிய சாந்தினை; வாடிய கோதையை;**
**ஆசுஇல் கலம் தழீஇயற்று;**
**வாரல்; வாழிய, கவைஇநின்றோளே!** — *பரணர் நற் 350*

"வெண்ணிற நெற்கதிரை அறுப்பவர் தண்ணுமை என்னும் வாச்சியத்தை முழக்குவர். அதுகேட்டு வயலிலுள்ள பறவைகள் எல்லாம் அஞ்சி, மருதமரக் கிளைகளில் போய் உட்காரும். வயலை நோக்கித் தாழ்ந்து வளைந்த கிளைகளை யுடைய அம் மரத்தின் தொங்கும் பூங்கொத்துகள் உதிரும். அப்படி வளப்பமுள்ளது இருப்பையூர். அது இரவலர்க்குத் தேர் வழங்கும் கொடை வள்ளலான விராஅன் என்பவனுக்குச் உரிமையானது. அந்த ஊர் போன்ற என் இயற்கை அழகு கெடுவதாயினும் கெடுக. தலைவ, உன்னை என் அருகில் நெருங்க விடமாட்டேன். விட்டாலும் என் கைகள் உன்னைப் புறத்தே செலுத்தித் தடுக்கும் வலிமை யுடையனவாகும். நீயோ பரத்தையரின் திரண்ட கொங்கைகளால் சாடப்பட்ட சந்தனத்தை உடையாய். வாடிய மாலையையுடையாய். உன்னைத் தீண்டுவது விட்டெறிந்த கலங்களைத் தீண்டுவது

போலாகும். ஆதலால் நீ இங்கே வர வேண்டா. நீயும் உன்னைத் தழுவிய பரத்தையும் நெடுங்காலம் வாழ்வீர் களாக" என்று தலைவனிடம் வெறுத்துரைத்து எள்ளினாள்.

## 178. நீடு வாழ்க!

முழவு முகம் புலர்ந்து முறையின் ஆடிய
விழவு ஒழி களத்த பாவை போல
நெருநைப் புணர்ந்தோர் புதுநலம் வௌவி,
இன்று தரு மகளிர் மென் தோள் பெறீஇயர்,
சென்றீ – பெரும, – சிறக்க, நின் பரத்தை!
பல்லோர் பழித்தல் நாணி, வல்லே
காழின் குத்திக் கசிந்தவர் அலைப்ப,
கையிடை வைத்து மெய்யிடைத் திமிரும்
முனியுடைக் கவளம் போல, நனி பெரிது
உற்ற நின் விழுமம் உவப்பேன்
மற்றும் கூடும், மனை மடி துயிலே. – *ஓரம்போகியார் நற் 360*

"பெரும! வருந்திய பாகர் விரைவாகப் பரிக்கோலால் குத்தி அலைத்தபோது சினங் கொண்ட யானை, கையிடையே வைத்திருந்த கவளத்தை உடம்பில் தடவிக் கொள்ளும். அதுபோலப் பலரும் உன்னைப் பழித்தலால் நீ நாணி மிகப் பெரிதுற்ற உன் துன்பத்தோடு வந்தாய். உன் வருகை கண்டு நான் உவப்பேன் எனினும் நீ இங்கு வந்து மனையில் சோம்ப லாக உறங்கும் துயில் மற்றொரு நாளும் கூடும். ஆதலால் மத்தளம் ஒலிக்க, முறையாகக் கூத்து நிகழ்ந்து விழா முடிந்த களத்திலுள்ள பாவை போன்ற அழகுள்ள பரத்தையை நேற்றுப் புணர்ந்து அவள் புதுநலம் நுகர்ந்து, இன்று பாணன் தரும் புதுப் பரத்தையின் மெல்லிய தோளைப் பெறச் செல்வாயாக. உன் பரத்தமை சிறக்க!" என்ற பரத்தையைப் பிரிந்து தலைவியின் ஊடலைத் தீர்க்க வந்தவனிடம் தோழி சினம் வெளிப்படக் கூறினாள்.

## 179. விழிகளை மூடிச் சிரித்தாள்

வாராய், பாண! நகுகம் – நேரிழை
கடும்புடைக் கடுஞ் சூல் நம் குடிக்கு உதவி

நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள் காழ்
விளங்கு நகர் விளங்கக் கிடந்தோள் குறுகிப்,
'புதல்வன் ஈன்றெனப் பெயர் பெயர்த்து, அவ் வரித்
திதலை அல்குல் முது பெண்டு ஆகி,
துஞ்சுதியோ, மெல் அம் சில் ஓதி?' என,
பல் மாண் அகட்டில் குவளை ஒற்றி,
உள்ளினென் உறையும் எற் கண்டு மெல்ல
முகை நாண் முறுவல் தோற்றி,
தகை மலர் உண்கண் கை புதைத்ததுவே.

*– உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் நற் 370*

*"பாண, வருக. நாம் நினைத்து நகையாடுவோம். சிறந்த அணிகலன் அணிந்த தலைவி முன்பு சுற்றத்தார் உடைய வளாய் முதற் கருப்பத்தில் நம் குடி செழிக்குமாறு மகனைப் பெற்று உதவினாள். நெய்யுடனே ஒளிவீசும் வெண்சிறு கடுகு முதலானவற்றைப் பூசி விளங்கிய நம் இல்லம் சிறப்புறு மாறு ஒய்ந்து படுத்திருந்தாள். அவளை யான் நெருங்கி, "மெல்லிய அழகிய சிலவாகிய கூந்தலை உடையவளே! நீ புதல்வனைப் பெற்றுத் தந்ததனால் தாய் என்று பெயர் பெற்று அழகிய வரிகளும் ஈன்ற பெண்களுக்குள்ள வெளுப் புள்ள அல்குலும் உடைய முதுபெண்டு ஆகி இவ்வாறு துயில்கின்றாயோ?" என்று கூறியவாறே பல மாட்சிமைந்த அவள் வயிற்றில் என் கையிலிருந்த குவளை மலரால் ஒற்றினேன். ஒற்றியவாறே நான் பல கருதினேன். அப்போது அவள் கண் விழித்து அங்கே இருந்த என்னைப் பார்த்து மெல்ல முல்லையின் முகைபோல் புதிய முறுவல்கட்டி, தன் அழகிய மலர் போன்ற மையுண்ட கண்களைக் கையால் மூடிக் கொண்டு மகிழ்ந்தாள். அவள் இப்பொழுது ஊடல் கொண்டாளே" என்று தலைவன் தவித்தான்.*

## 180. பயனில சொல்லாதே

நெய்யும் குய்யும் ஆடி, மெய்யொடு
மாசு பட்டன்றே கலிங்கமும்; தோளும்,
திதலை மென் முலைத் தீம் பால் பிலிற்ற,
புதல்வற் புல்லிப் புனிறு நாறும்மே;

வால் இழை மகளிர் சேரித் தோன்றும்
தேரோற்கு ஒத்தனெம் அல்லேம்; அதனால்
பொன் புரை நரம்பின் இன் குரல் சீறியாழ்
எழாஅல் வல்லை ஆயினும், தொழாஅல்;
கொண்டு செல் – பாண! நின் தண் துறை ஊரனை,
பாடு மனைப் பாடல்; கூடாது நீடு நிலைப்
புரவியும் பூண் நிலை முனிகுவ;
விரகு இல மொழியல், யாம் வேட்டது இல் வழியே!

*– கூடலூர்ப் பல்கண்ணனார் நற் 380*

“பாணனே, நெய்யும் தாளிப்புப் புகையும் படிந்து உடம்பொடு உடையும் அழுக்காயின. தேமல் படர்ந்த மெல்லிய கொங்கையில் இனிய பால்சுரக்க அதனை ஊட்டுவதற்காக மகனைத் தழுவியதால் அவளுடைய தோளும் முடை நாற்றம் வீசும். ஆகையால் தூய அணிகலன் அணிந்த பரத்தையரின் தெருவில் அழகுறத் தோன்றும் தேரோன் தலைவனுக்கு யாம் பொருத்தம் உடையேம் அல்லேம். அதனால் பொன் போன்ற நரம்பின் இனிய ஓசையையுடைய சிறிய யாழை எடுத்து இசை எழுப்புதலில் நீ வல்லவனே ஆனாலும் தொழாதே. உன் தண் துறை ஊரனை அழைத்துக் கொண்டு செல். சிறந்த எம் மனை நின்று நீ பாடாதே. நெடுநேரம் நிற்பது கூடாது. குதிரைகளும் தம்மைத் தேரில் பூட்டியிருத்தலை வெறுக்கும். யாம் விரும்பாதபோது நீ பயனில்லாத சொற்களைப் பேசாதே” என்று வாயிலாக வந்த பாணனிடம் வெறுப்புற்றுக் கூறினாள் தலைவி.

## 181. நலனை இழக்கும் தோள்கள்

வாளை வாளின் பிறழ, நாளும்
பொய்கை நீர் நாய் வைகுதுயில் ஏற்கும்
கை வண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
வயல் வெள் ஆம்பல் உருவ நெறித் தழை
ஐது அகல் அல்குல் அணி பெறத் தைஇ,
விழவின் செலீஇயர் வேண்டும் மன்னோ;
யாணர் ஊரன் காணுநன் ஆயின்,
வரையாமையோ அரிதே; வரையின்;

வரைபோல் யானை, வாய்மொழி முடியன்
வரை வேய் புரையும் நல் தோள்
அளிய – தோழி, தொலையுந – பலவே.

*– ஔவையார் நற் 390*

"தோழியே, பொய்கையில் வாளைமீன் வாள் போல் பிறழும். அப் பொய்கையிலுள்ள நீர்நாய் நாளும் இடையறாத துயிலை ஏற்கும். அவ்வாறாய பொய்கைகள் உள்ள ஊர் கோயில் வெண்ணி. அதன் அரசன் கைவண்மை உடைய கிள்ளிவளவன். அவ் ஊரைச் சுற்றியுள்ள வயலில் வெள்ளையான ஆம்பல் மலர் நிரம்பியிருக்கும். அம் மலரின் அழகிய நெளிவையுடைய தழையுடைய மெல்லிதாய் அகன்ற அல்குலில் அழகுபெற அணிந்து கொண்டு நாமும் விழாவுக்குச் செல்ல வேண்டும். அப்போது புது வருவாயுடைய ஊரனாகிய நம் தலைவன் நம்மைக் கண்டால் நம் அழகில் ஈடுபட்டு ஏற்றுக் கொள்வான். அவ்வாறு ஏற்றுக்கொண்டால் மலை போன்ற யானைகளை உடையவனும் வாய்மொழி தவறாதவனுமான முடியன் என்பவனின் மலையிலுள்ள மூங்கில் போன்ற நல்ல தோள்கள் வாடி அழகு தொலையும். அவை இரங்கத் தகுந்தன" என்று பரத்தையிடமிருந்து மீண்ட தலைவனை விரும்பியவளாய் தலைவி ஏவலர் கேட்கப் புகன்றாள்.

## 182. நீ இல்லை என்றால் நான் இல்லை

வாழை மென் தோடு வார்புறுபு ஊக்கும்
நெல் விளை கழனி நேர் கண் செறுவின்,
அரிவனர் இட்ட சூட்டு அயல், பெரிய
இருஞ் சுவல் வாளை பிறழும் ஊர!
நின்இன்று அமைகுவென் ஆயின், இவண் நின்று
இன்னா நோக்கமொடு எவன் பிழைப்பு உண்டோ?
மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து
அறம் கெடல் அறியாது ஆங்கு, சிறந்த
கேண்மையொடு அணைஇ, நீயே
கெடு அறியாய் என் நெஞ்சத்தானே.

*– ஆலங்குடி வங்கனார் நற்றி 400*

"வாழையின் மெல்லிய இலைகள் ஒழுங்காக அசையும் படியான நெல்விளையும் வயலில் செவ்விய பரந்த இடத் தில் கதிர்அறுப்பவர் இட்ட சூட்டின் பக்கத்தில் பெரிய கரிய கழுத்தையுடைய வாளை மீன் துள்ளும்படியான ஊரனே, உன்னையன்றி யான் இங்கு இருப்பேனாயின், இங்கு இனிமையற்ற நிலையோடு என்ன பிழைப்பு எனக்கு உண்டு. ஒன்றுமில்லை. வீரமிக்க சோழரது உறையூரின் அவையில் நிலைபெற்றிருக்கும் அறம் அங்கிருந்து செல்ல அறியாதது போல, சிறந்த நட்போடு கலந்து என் நெஞ்சத்தி ருந்த நீயும் நீங்கிச் செல்ல அறியாது உள்ளாய். எனவே என்னோடு இருந்து விடுக" என்றாள் காதற் பரத்தை.





# அகநானூறு

## 183. பொய்ம் மொழியால் ஆவது என்?

அரி பெய் சிலம்பின் ஆம்பல் அம் தொடலை,
அரம் போழ் அவ் வளைப் பொலிந்த முன்கை,
இழை அணி பணைத் தோள், ஐயை தந்தை,
மழை வளம் தரூஉம் மா வண் தித்தன்
பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண் –
கழை நிலை பெறாஅக் காவிரி நீத்தம்
குழை மாண் ஒள் இழை நீ வெய்யோளொடு
வேழ வெண் புணை தழீஇ, பூமியர்
கயம் நாடு யானையின் முகன் அமர்ந்தாஅங்கு
ஏந்து எழில் ஆகத்துப் பூந் தார் குழைய
நெருநல் ஆடினை, புனலே; இன்று வந்து,
'ஆக வன முலை அரும்பிய சுணங்கின்,
மாசு இல் கற்பின், புதல்வன் தாய்!' என,
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி, எம்
முதுமை எள்ளல்; அஃது அமைகும்தில்ல!
சுடர்ப் பூந்த தாமரை நீர் முதிர் பழனத்து,
அம் தூம்பு வள்ளை ஆய் கொடி மயக்கி,
வாளை மேய்ந்த வள் எயிற்று நீர்நாய்,
முள் அரைப் பிரம்பின் மூதரில் செறியும்,
பல் வேல் மத்தி, கழாஅர் அன்ன எம்
இளமை சென்று தவத் தொல்லஃதே;
இனிமை எவன் செய்வது, பொய்ம்மொழி, எமக்கே?

*– பரணர் அக 6*

"மணிகள் உள்ளே இடப்பட்ட சிலம்பையும் ஆம்பல் மலரால் தொடுக்கப்பட்ட மாலையையும் அரத்தால் இயற்றப் பெற்ற அழகிய வளையலுடன் பொலிவுடைய முன் கை களையும், இழைகள் அணிந்த பருத்த தோள்களையுமுடைய ஐயை என்பவளின் தந்தை சிறந்த வள்ளன்மை உடைய தித்தன். அம் மன்னனுக்குரிய மழை வளத்தால் உண்டான குவியலான நெல்லை உடைய உறையூரில், ஓடக் கோல் நிலை பெறாத காவிரியாற்று வெள்ளத்தில் நேற்று நீ விரும்பிய, மாட்சிமை யுடைய காதணியையும், ஒள்ளிய பிற அணி களையும் உடைய பரத்தையுடனே, வேழக் கரும்பினால் ஆன வெண்மையான தெப்பத்தைக் கொண்டு, பூழி நாட்டா ரின் நீர் நிலையில் பெண் யானையுடன் சென்று நீராடும் ஆண் யானை போல் முகம் மலர்ந்து அங்கு நின் உயர்ந்த மார்பில் அணிந்த பூமாலை குழைய நீராடினாய். அத்தகைய நீ இன்று இங்கே வந்து 'மார்பில் உள்ள அழகிய கொங்கை யில் தோன்றிய தேமலையும் குற்றமில்லாத கற்பையும் உடைய, என் மைந்தனின் தாயே' என்று வஞ்சனையுடைய பொய்யான சொற்களை வணங்கிப் பலகாலும் கூறி என் முதுமையை இகழாதே! அம் முதுமைக்கு யாம் பொருத்த மாவோம். அது பற்றி நாணம் கொள்ளோம். தீயைப் போன்ற தாமரைப் பூக்களையுடைய வயலில் அழகிய உள் துளை களைக் கொண்ட வள்ளையின் மெல்லிய கொடிகளை உழக்கி வாளை மீன்களைத் தின்ற கூரிய பற்களையுடைய நீர் நாய், முள்கள் பொருந்திய தண்டை உடைய பிரம்பின் பழைய புதர்களில் தங்கியிருக்கும் இடங் களைப் பெற்ற பல வேற் படைகளையும் 'மத்தி' என்பவனின் 'கழாஅர்' என்ற ஊரைப் போன்ற எம் இளமை கழிந்து பழையதாயிற்று. ஆதலால் உன் மாயப் பொய்ம் மொழி எங்கட்கு இனிமை செய்வது எவ்வாறு?" என்று பரத்தை யிடமிருந்து வந்த தலைவனிடம் தலைவி கூறினாள்.

## 184. மகனுக்குத் தாயாதல் பொருந்தும்

நாயுடைய முது நீர்க் கலித்த தாமரைத்
தாதின் அல்லி அவிர் இதழ் புரையும்,

மாசு இல் அங்கை, மணி மருள் அவ் வாய்,
நாவொடு நவிலா நகைபடு தீம் சொல்,
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை,
தேர் வழங்கு தெருவில், தமியோற் கண்டே,
கூர் எயிற்று அரிவை குறுகினள், யாவரும்
காணுநர் இன்மையின், செத்தனள் பேணி,
பொலங்கலம் சுமந்த பூண் தாங்கு இள முலை,
'வருகமாள, என் உயிர்!' எனப் பெரிது உவந்து,
கொண்டனள் நின்றோட் கண்டு, நிலைச் செல்லேன்,
'மாசு இல் குறுமகள்! எவன் பேதுற்றனை?
நீயும் தாயை இவற்கு?' என, யான் தற்
கரைய, வந்து விரைவனென் கவைஇ –
களவு உடம்படுநரின் கவிழ்ந்து, நிலம் கிளையா,
நாணி நின்றோள் நிலை கண்டு, யானும்
பேணினென் அல்லெனொ – மகிழ்ந! – வானத்து
அணங்கு அருங் கடவுள் அன்னோள் நின்
மகன் தாய் ஆதல் புரைவது ஆங்கு எனவே?

*– சாகலாசனார் அக 16*

*"தலைவனே, நீர் நாய்கள் பொருந்திய பழைய நீரில் தழைத்த தாமரை மலரின் பொகுட்டைச் சூழ்ந்துள்ள உள்ளிதழ் களை அடுத்துள்ள மெல்லிய இதழைப் போன்ற குற்றம் இல்லாத உள்ளங் கையையும், பவளம் போன்ற சிவந்த வாயை யும், நாவால் திருத்தமாகப் பேசப்படாத கேட்பவர்க்கு நகை யைத் தோற்றுவிக்கும் இனிய சொல்லையும், காண்பவர் விரும் பும் பொன்னால் ஆன அணிகலன்களையும் அணிந்த நம் அரிய மகனை, அவன் சிறிய தேரை உருட்டி விளையாடும் தெரு வில் தனியனாய்க் கண்டு பொன்னணிகள் அணிந்த கூரிய பற்களையுடைய நின் காமக் கிழத்தி அவனை நெருங்கினாள்.*

*அங்குப் பார்ப்பவர் எவரும் இல்லாமையால் நினக்கும் அவனுக்கும் உள்ள உருவ ஒப்புமை கருதி அவன் தனக்கும் மகனாவான் என எண்ணி, 'என் உயிரே வருக' எனச் சொல்லி எடுத்துப் பொன்னணிகளால் சுமக்கப் பெற்ற தன் இளைய கொங்கை மீது அணைத்துக்கொண்டு நின்றாள். அவளை யான் கதவின் பின்புறம் மறைவாக நின்று கண்டேன்.*

நின்ற நிலையினின்று மீண்டு செல்லாது விரைந்து அவளிடம் சென்றேன். அவளை அணைத்துக் கொண்டேன். யான் அவளை நம் இல்லத்துக்கு வருமாறு அழைத்தேன். அவள் மிகவும் மயங்கினாள். அப்போது "குற்றம் இல்லாத இளமகளே! நீ எதற்கு மயங்கினாய்? இச் சிறுவனுக்கு நீயும் தாயே ஆவாய்!" என்று கூறினேன்.

அவள், ஒருவர் தாம் செய்த களவைக் கண்டு கொண்டவர் முன், உடன்பட்டு நிற்பவரைப் போல், முகம் கவிழ்ந்து நிலத்தைக் கால் விரலால் கீறி நாணி நின்றாள். அத்தகையவரின் நிலையைக் கண்டு யானும் இரங்கி வானத்தில் காண்பதற்கு அரிய கடவுளான அருந்ததியைப் போன்ற அவள் நின் மகனுக்குத் தாயாதல் தகுதியானதே என எண்ணி, அவள் வருந்தாதபடி முகமன் உரை கூறி அனுப்பி வைத்தேன் அல்லேனோ?'' இங்ஙனமாகவும், பரத்தையர் யாரையும் அறியேன் எனப் பொய் கூற வேண்டா?" என்று சேரியிலிருந்து திரும்பிய தலைவனிடம் தலைவி சொன்னாள்.

### 185. ஊடல் நீங்கியது

கூன் முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற,
மீன் முள் அன்ன, வெண்கால் மா மலர்
பொய்தல் மகளிர் விழவு அணிக் கூட்டும்
அவ் வயல் நண்ணிய வளம் கேழ் ஊரனைப்
புலத்தல் கூடுமோ – தோழி! – அல்கல்
பெருங் கதவு பொருத யானை மருப்பின்
இரும்பு செய் தொடியின் ஏர ஆகி,
'மாக் கண் அடைய மார்பகம் பொருந்தி
முயங்கல் விடாஅல் இவை' என மயங்கி,
'யான் ஓம்' என்னவும் ஒல்லார், தாம் மற்று
இவை பாராட்டிய பருவமும் உளவே; இனியே
புதல்வற் தடுத்த பாலொடு தடைஇ,
திதலை அணிந்த தேம் கொள் மென் முலை
நறுஞ் சாந்து அணிந்த கேழ் கிளர் அகலம்
வீங்க முயங்கல் யாம் வேண்டினமே
தீம் பால் படுதல் தாம் அஞ்சினரே, ஆயிடைக்
கவவுக் கை நெகிழ்ந்தமை போற்றி, மதவு நடைச்

செவிலி கை என் புதல்வனை நோக்கி
'நல்லோர்க்கு ஒத்தனிர் நீயிர்; இஃதோ
செல்வற்கு ஒத்தனம், யாம்' என, மெல்ல என்
மகன்வயின் பெயர்தந்தேனே; அது கண்டு,
'யாமும் காதலம், அவற்கு' எனச் சாஅய்,
சிறு புறம் கவையினனாக, உறு பெயல்
தண் துளிக்கு ஏற்ற பல உழு செஞ் செய்
மண் போல் நெகிழ்ந்து, அவற் கலுழ்ந்தே
நெஞ்சு அறை போகிய அறிவினேற்கே?

*– பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி அக 26*

*"நம் தலைவரிடம் ஊடல் கொண்டிருந்த நீ அவர் வந்த போது நின் ஊடல் எவ்வாறு நீங்கிற்று?' என வினவும் தோழியே, கேட்பாயாக :*

*வளைவான முட்களையுடைய முள்ளிச் செடி குவிந்த குலையினின்றும் தாமே உதிர்ந்த மீனின் முள்ளைப் போன்ற வெண்மையான காம்புகளை உடைய கருமையான மலர் களை, விளையாடும் இளம் பெண்கள் தாம் கொண்டாடும் திருவிழாவை அழகு செய்தற் பொருட்டுப் பொறுக்கிச் சேர்ப்பர். இத்தகைய இடமான அழகிய வயல்கள் பொருந்திய வளம் பொருந்திய ஊரையுடைய நம் தலைவனுடன் எம்மைப் போன்றவர் ஊடல் கொண்டிருக்க முடியுமோ? தலைவருடன் ஊடாமைக்குக் காரணத்தைச் சொல்வேன் கேட்பாயாக :*

*நாள்தோறும், இக் கொங்கைகள், பெரிய மதிலின் கதவுகளைப் பாய்ந்து குத்திய ஆண் யானையின் கொம்பு களைப் போல் விளங்க, இவற்றின் கருமையான கண்கள் யானைக் கொம்பின் இரும்பால் செய்து கட்டப்பட்ட பூண்கள் போல் அழகுடையனவாய், யான் என் மார்பிடம் முழுவதும் அவற்றில் பொருந்தும்படி தழுவுவதலினின்று என்னை விலக்காதே, எனச் சொல்லி முயங்குவார். இக் கொங்கைகளின் அழகில் பெரிதும் மயங்கி, அவர் கூறும் பாராட்டுதலை விரும்பாமல், 'இனி இப் புகழுரையைக் கூறாது ஒழிவீர்' என்று யான் தடுக்க, அவர் உடன்படாதவ ராய் இக் கொங்கைகளைப் பலவகையாய்ப் பாராட்டிய காலமும் உண்டு. அவையெல்லாம் முன்னம் நிகழ்ந்தவை.*

இனியோ, பிறிதொன்றையும் விரும்பாதபடி தடை செய்தற்குக் காரணமான பால் சுரப்பினால் மிகுதியாய்ப் பருத்துச் சரிந்த, தேமல் படர்ந்துள்ள இடங்களைத் தம்மிடத்தே கொண்டுள்ள மென்மையான எம் கொங்கைகள் அவரது நறிய சந்தனம் அணியப்பெற்ற நல்ல நிறம் விளங்கும் மார்பில் அழுந்திப் புடை படுக்குமாறு தழுவுதலைப் பெரிதும் விரும்புகின்றோம். ஆனால் அவரோ தம் மார்பில் பால் படுதலை அஞ்சினார்.

அப்போது, முன்பு எம்மை அணைத்தலை விடாத அவர் கைகள் இன்று நெகிழ்ந்தமை கண்டேன். கண்டு, செவிலித் தாயின் கையில் இருந்த மெல்லிய நடையுடைய என் புதல்வனை நோக்கி அவர் கேட்ப, 'பெரும! நீவிர் பரத்தை மகளிர்க்கே' மிகவும் பொருந்தியுள்ளீர். யாம் இப்போதே செவிலித் தாயின் கையில் உள்ள எம் மகனுக்குத் தாயாதற்கே பொருந்தியவராயுள்ளேம்' எனக் கூறி, மெல்ல என் மகனிடத்துச் சென்றேன். அவ்வாறு யான் புலந்து போவதைக் கண்டு தலைவர் என்னிடம் பணிவுடைமை தோற்றுவித்து 'அவனுக்கு யாமும் அன்புடையோம்' எனக் கூறி என் முதுகுப் பக்கமாக வந்து என்னைக் கட்டி அணைத்துக் கொண்டார்.

மிக்க பெயலான மழையை ஏற்றுக் கொண்ட பல முறையும் உழப்பட்ட வயலின் செம்மண் போல் என் உள்ளம் நெகிழ்ந்தது; கலங்கி அவரை ஏற்றுக் கொண்டேன். என் நெஞ்சை வஞ்சித்துச் சென்ற புல்லறிவுடைய எனக்கு அவரைக் கண்டபோது ஊடுதல் கூடமோ? இதற்கு நான் என்ன செய்வேன்?" என்று தலைவி தோழியிடம் இயம்பினாள்.

## 186. வீரனின் மகிழ்ச்சியினும் அலர் பெரிது

பகுவாய் வராஅற் பல் வரி இரும் போத்துக்
கொடு வாய் இரும்பின் கோள் இரை துற்றி,
ஆம்பல் மெல் அடை கிழிய, குவளைக்
கூம்பு விடு பல் மலர் சிதையப் பாய்ந்து, எழுந்து,
அரில் படு வள்ளை ஆய் கொடி மயக்கி,

தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது,
கயிறு இடு கதச் சேப் போல, மதம் மிக்கு,
நாள், கயம் உழக்கும் பூக் கேழ் ஊர!
வரு புனல் வையை வார் மணல் அகன் துறை,
திரு மருது ஓங்கிய விரி மலர்க் காவில்
நறும் பல் கூந்தற் குறுந் தொடி மடந்தையொடு
வதுவை அயர்ந்தனை என்ப. அலரே,
கொய் சுவல் புரவிக் கொடித் தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப,
சேரல், செம்பியன் சினம் கெழு திதியன்,
போர் வல் யானைப் பொலம் பூண் எழினி,
நார் அரி நறவின் எருமையூரன்,
தேம் கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான், இயல் தேர்ப் பொருநன், என்று
எழுவர் நல் வலம் அடங்க, ஒரு பகல்
முரைசொடு வெண்குடை அகப்படுத்து, உரை செல,
கொன்று, களம் வேட்ட ஞான்றை
வென்றி கொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே!

*– மதுரை நக்கீரர் அக 36*

*பிளந்த வாயையும் பல வரிகளையும் கொண்ட பெரிய ஆண் வரால் மீன் வளைவான தூண்டிலில் தனக்குக் காலனான இரையை விழுங்கி ஆம்பல் கொடியின் மெல்லிய இலை கிழிய மேல் எழும்; குவளையின் அரும்பு மலர்ந்த பல மலர்களும் சிதையுமாறு பக்கத்தே பாயும்; பின்னர் மாறுபட்டுப் பின்னிக் கிடக்கும். வள்ளைக் கொடிகளைக் குலைத்து விடும்; அத் தூண்டிலை இட்ட, மீன் பிடிப்பவன் இழுக்கவும் இழுபடாது; மூக்கில் கயிறு கட்டி இழுக்கப் படும். சினம் கொண்ட எருதினைப் போன்று செருக்கு மிக்கு நாள் காலையில் தெளிந்த நீரைக் கலக்கும். இத்தகைய நிகழ்வுக்கு இடமான மலர்கள் பொருந்திய ஊரனே! கேட்பாயாக:*

*எக் காலத்தும் நீர் வற்றாது வரும் வையையாற்றின் மிக்க மணல் பொருந்திய அகன்ற துறையை அடுத்துள்ள அழகிய மருதமரம் ஓங்கிய விரிந்த மலர்களையுடைய சோலையில்*

நல்ல மணமுடைய கூந்தலையும் சிறிய வளையல்களையும் உடைய பரத்தையை மணம் செய்து கொண்டாய் என ஊரவர் உரைப்பர். அப் பழிச் சொல் -

கொய்த பிடரி மயிரை உடைய குதிரைகள் பூட்டப் பட்ட கொடிகட்டப்பட்ட தேரையுடையவன் பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானம் என்ற ஊரின் அகன்ற இடம் எல்லாம் செந்நிறம் கொள்ள, சேரன், சோழன், சினம் மிகுந்த திதியன், போரில் வல்ல, யானைகளையுடைய பொன்னணி அணிந்த எழினி, பன்னாடையால் அரிக்கப் பெற்ற கள்ளை யுடைய எருமையூரின் தலைவன், தேன் மணம் கமழும் மார்பிடத்தே பூசி உலர்ந்த சந்தனத்தையுடைய இருங்கோ வேண்மான், நன்கு அமைந்த தேரையுடைய பொருநன் என்று கூறப்படும் எழுவர் அதுவரை பெற்றிருந்த வெற்றிப் புகழ் யாவும் அழியும்படி, ஒரு நாளிலேயே அவர்களின் முரசுகளுடன் வெண்குடைகளைப் பற்றிக் கொண்டான். அதனால் தனது வெற்றிப்புகழ் எங்கும் பரவ, மறக்கள வேள்வி செய்தான். அப்போது அவ் வெற்றிக்குக் காரணமான பாண்டியனின் போர் வீரர் எழுப்பிய மகிழ்ச்சி ஆரவாரத்தை விடப் பெரியது! அங்ஙனமாகவும் நீ, நான் தவறிழைக்கவில்லை''என்று கூறுகின்றனை; இங்ஙனம் பொய் கூறாதே, என்று தலைவனிடம் தலைவி இயம்பினாள்.

## 187. நின்னைத் தடுப்பார் யார்?

சேற்று நிலை முனைஇய செங் கட் காரான்
ஊர் மடி கங்குலில், நோன் தளை பரிந்து,
கூர் முள் வேலி கோட்டின் நீக்கி,
நீர் முதிர் பழனத்து மீன் உடன் இரிய,
அம் தூம்பு வள்ளை மயக்கி, தாமரை
வண்டு ஊது பனி மலர் ஆரும் ஊர!
யாரையோ? நிற் புலக்கேம், வாருற்று,
உறை இறந்து, ஒளிரும் தாழ் இருங் கூந்தல்,
பிறரும், ஒருத்தியை நம் மனைத் தந்து,
வதுவை அயர்ந்தனை என்ப, அஃது யாம்
கூறேம். வாழியர், எந்தை! செறுநர்

களிறுடை அருஞ் சமம் ததைய நூறும்
ஒளிறு வாட் தானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூர் அன்ன என்
ஒண் தொடி நெகிழினும் நெகிழ்க;
சென்றீ, பெரும! நிற் தகைக்குநர் யாரோ?

*- அள்ளூர் நன்முல்லையார் அக 46*

*"சேற்றில் நிற்கும் நிலையை வெறுத்த சிவந்த கண்களை உடைய எருமை, ஊரவர் எல்லாம் உறங்கும் நள்ளிரவில் வலிய கயிற்றை அறுத்துக் கொண்டு புறப்பட்டுப் போய்க் கூர்மையான முள்ளையுடைய வேலியைத் தன் கொம்பால் அகற்றி விட்டு, நீர் மிகுந்த வயலில் மீன்கள் எல்லாம் ஓட இறங்கி, அங்குள்ள வள்ளைக் கொடிகளை நிலைகுலையச் செய்து வண்டுகள் உள்ளிருந்து ஊதும் தாமரையின் குளிர்ந்த மலரைத் தின்னும் ஊரை உடையவனே!*

*உன்னுடன் ஊடல் கொள்வதற்கு நீ எத்தகைய உறவுடையாய்? அயலவனான உன்னை யாங்கள் ஊட மாட்டோம். ஐயனே, யாங்கள் வாளாவிருக்கவும் இவ் ஊரில் உள்ள அயலவர் யாம் விரும்பாத செய்தியைக் கூறுவர். நீண்டு மழைக்காலின் அழகையும் கடந்து திகழும் கரிய கூந்தலையுடைய பரத்தை ஒருத்தியை மணம் செய்து கொண்டாய் என்பர். அத்தகைய பழியை யாம் கூறோம். நீ வாழ்க, என்று வாழ்த்தவும் செய்கின்றோம்.*

*பெரும! பகைவரின் யானைகளைக் கொண்ட அரிய போரினைச் சிதைந்திடக் கொல்லும் ஒளிரும் வாட்படையை உடைய வெற்றி பொருந்திய செழியனின் நெற்குவியலையுடைய அள்ளூர் போன்ற எனது ஒள்ளிய வளையல் நெகிழ்ந்து வீழினும் வீழ்க. நீ நின் பரத்தையிடம் செல்க; உன்னைத் தடுப்பவர் யார் உள்ளார்? கும்பிட்டு நின்ற பாணனின் காட்சி எனக்கு நகையை உண்டாக்குகின்றது" என்று வாயில் வேண்டிச் சென்ற தலைவனிடம் தோழி மறுத்துக் கூறினாள்.*

## 188. நகை ஆகின்றே - தோழி!

மணி கண்டன்ன துணி கயம் துளங்க,
இரும்பு இயன்றன்ன கருங் கோட்டு எருமை

ஆம்பல் மென் அடை கிழிய, குவளைக்
கூம்பு விடு பல் மலர் மாந்தி, கரைய
காஞ்சி நுண் தாது ஈர்ம் புறத்து உறைப்ப,
மெல்கிடு கவுள் அல்குநிலை புகுதரும்
தண் துறை ஊரன் திண் தார் அகலம்
வதுவை நாள் அணிப் புதுவோர்ப் புணரிய,
பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்
புனிற்றாப் பாய்ந்தெனக் கலங்கி, யாழ் இட்டு,
எம் மனைப் புகுதந்தோனே. அது கண்டு
மெய்ம்மலி உவகை மறையினென் எதிர்சென்று,
'இம் மனை அன்று; அஃது உம் மனை' என்ற
என்னும் தன்னும் நோக்கி,
மம்மர் நெஞ்சினோன் தொழுது நின்றதுவே.

*- மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் அக 56*

"தோழியே கேட்பாயாக: நேற்று இரும்பால் ஆனது போன்று காணப்படும் கரிய கொம்புகளையுடைய எருமையினம், அவை விடியற்காலத்தில் பளிங்கு மணியைக் கண்டாற் போன்ற தெளிவான நீரையுடைய குளம் கலங்குமாறு அதில் படர்ந்துள்ள ஆம்பலின் மெல்லிய இலைகள் கிழிய நீரிலே பாய்ந்தன. அங்கு மலர்ந்துள்ள பல குவளை மலர்களையும் நிரம்பத் தின்றன; பின்பு கரையில் உள்ள காஞ்சி மரங்களின் நுண்ணிய மகரந்தம், ஈரமான தன் முதுகின் மீது சிந்த, அசைவிடும் கன்னத்தை உடையனவாய் வந்து தாம் தங்கும் இடமான கொட்டிலில் தங்கும். அத் தகைய குளிர்ந்த நீர்த் துறைகள் பலவற்றையும் உடைய ஊர்த் தலைவனின் மாலை சூடிய திண்மையான மார்புடன் திருமணக் கோலம் கொண்ட புதிய பரத்தையரைக் கூட்டும் பொருட்டுப் பெரிதும் அவாவுடன் வந்தான் பாணன்.

அந்தப் பாணனைத் தெருவில் நின்ற ஈன்றணிமையை உடைய பசுவானது சினந்து பாய்ந்தது. அப்போது அவன் மனம் கலங்கித் தன் கையில் இருந்த யாழை நிலத்தில் எறிந்து விட்டு அஞ்சி ஓடிவந்து என் இல்லத்துள் புகுந்தான். அதைக் கண்டு எனக்குள் உண்டான மகிழ்ச்சியை எனக்குள் மறைத்துக்

*கொண்டு அவனது எதிரே சென்றேன். சென்று, 'இந்த வீடு நீ புகுவதற்குரிய உங்கள் வீடு அன்று. அங்குள்ள வீடாகும்' என்று அறிவுறுத்தினேன். என் நிலையையும் தன் நிலையையும் தன் நெஞ்சால் நினைத்துப் பார்த்து அவன் மயங்கிய மனத்துடன் கை கூப்பியபடி என்னைத் தொழுது நின்றான். அதனை இப்போது நினைத்தாலும் எனக்குச் சிரிப்பை ஏற் படுத்துகின்றது" என்று பரத்தை மனை சென்று திரும்பிய பாணனைக் கண்டு தோழியிடம் தலைவி கூறினாள்.*

## 189. பல்லோர் பழமொழி உண்மை

'இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறு இன்று எய்துப,
செறுநரும் விழையும் செயிர் தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்' எனப்
பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே ஆகுதல் வாய்த்தனம் – தோழி!
நிரை தார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு
வதுவை அயர்தல் வேண்டி, புதுவதின்
இயன்ற அணியன், இத் தெரு இறப்போன்
மாண் தொழில் மா மணி கறங்க, கடை கழிந்து,
காண்டல் விருப்பொடு தளர்பு தளர்பு ஓடும்
பூங் கண் புதல்வனை நோக்கி, 'நெடுந் தேர்
தாங்குமதி, வலவ!' என்று இழிந்தனன், தாங்காது,
மணி புரை செவ் வாய் மார்பகம் சிவணப்
புல்லி, 'பெரும! செல் இனி, அகத்து' எனக்
கொடுப்போற்கு ஒல்லான் கலுழ்தலின், 'தடுத்த
மாநிதிக் கிழவனும் போன்ம்' என, மகனொடு
தானே புகுதந்தோனே; யான் அது
படுத்தனென் ஆகுதல் நாணி, இடித்து, 'இவற்
கலக்கினன் போலும், இக் கொடியோன்' எனச் சென்று
அலைக்கும் கோலொடு குறுக, தலைக்கொண்டு
இமிழ் கண் முழவின் இன் சீர் அவர் மனைப்
பயிர்வன போல வந்து இசைப்பவும், தவிரான்,
கழங்கு ஆடு ஆயத்து அன்று நம் அருளிய

பழங் கணோட்டமும் நலிய,
அழுங்கினன் அல்லனோ, அயர்ந்த தன் மணனே.

*– செல்லூர்க் கோசிகன் கண்ணனார் அக 66*

“தோழியே, பகைவரும் விரும்பும் குற்றம் இல்லாத அழகையுடைய மக்களைப் பெற்ற தலைமையுடையோர் இவ் உலகத்தில் புகழோடும் விளங்கி மறுமை உலகத்து வாழ்வையும் குற்றம் இல்லாது பெறுவர் என்று பலரும் கூறிய பழமொழிகள் எல்லாம் உண்மையாவதைக் கண் கூடாக் கண்டோம்.

வரிசைப்பட அணிந்த மலர் மாலையையுடைய நம் தலைவன், நேற்று ஒருத்தியை மணம் செய்து கொள்ள வேண்டி விரும்பிப் புதியதாய் இயன்ற அலங்காரத்தை உடையவராய் இத் தெருவினைக் கடந்து செல்லலானார். அப்போது, மாண்புடைய தொழிலில் சிறந்த அவரது குதிரையின் மணி ஒலித்தது; அதைக் கேட்டுத் தலைவாயிலைக் கடந்து போய்த் தன்னைக் காணும் விருப்பத்துடன் தளர்ந்து தளர்ந்து ஓடிவந்த மலர்போன்ற கண்களையுடைய தம் புதல்வனைக் கண்டார்.

தம் புதல்வனைக் கண்டு தலைவர் ‘வலவனே, நீண்ட தேரை நிறுத்துவாயாக!’ எனச் சொல்லித் தேரினின்று இறங்கினார். காலம் தாழ்த்தாமல் மகனின் பவளம் போன்ற சிவந்த வாய் தம் மார்பகத்தைப் பொருந்தத் தழுவி, ‘பெரும!’ இனி வீட்டுக்குச் செல்க! என்று விடுத்தார். மகன் அதற்குச் இணங்காது அழுதான். அங்ஙனம் அழுத மகனுடன் இவன் குபேரனும் ஆவான் எனக்கூறி வீட்டுக்குள் வந்தார்.

இச் செயலை நான்தான் செய்தேன் என்று தலைவரும் மற்றவரும் எண்ணுவதற்கு இடமாதலை நினைத்தேன். நாணினேன். இக் கொடியவன் இந்தப் புதுமணமகன் செயலை இடையூறு செய்து கலக்கிவிட்டான் போலும் என்று கடிந்து கூறி அம் மகனை அடிப்பதற்குக் கோலுடன் அணுகினேன். அப்போது அவர் மகனைத் தம்பால் அணைத்துக் கொண்டார்.

மணம் நிகழும் அவர் மனையில் ஒலிக்கும் கண்ணை யுடைய முழவின் இனிய ஓசை, தம்மை அழைப்பவை போல முழங்கிற்று. முன்பொருநாள் யாம் கழங்கு ஆடும் தோழியர் கூட்டத்தினின்று நீங்கி அவரை முதன் முதலாகக் கண்ட போது நம்மைத் தேற்றி அருள்செய்தற்காகக் கூறிய சூளுரை தான் தம் மனத்தே தோன்றிச் சுடுவதால் அவர் விரும்பிய மணத்தையும் மேற்கொள்ளாமல் கைவிட்டார் அல்லரோ!"

## 190. தலைவனை முழுதும் வயப்படுத்துவேன்

மண் கனை முழவொடு மகிழ் மிகத் தூங்க,
தண் துறை ஊரன் எம் சேரி வந்தென –
இன் கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு
நன் கலன் ஈயும் நாள் மகிழ் இருக்கை
அவை புகு பொருநர் பறையின், ஆனாது,
கழறுப என்ப, அவன் பெண்டிர், 'அந்தில்
கச்சினன், கழலினன், தேம் தார் மார்பினன்,
வகை அமைப் பொலிந்த, வனப்பு அமை, தெரியல்,
கரியல் அம் பொருநனைக் காண்டிரோ?' என
அதிமந்தி பேதுற்று இனைய,
சிறை பறைந்து உரைஇச் செங்குணக்கு ஒழுகும்
அம் தண் காவிரி போல,
கொண்டு கைவலித்தல் சூழ்ந்திசின், யானே.

*– பரணர் அக 76*

யாங்கள் ஓரிரவு மண்ணை உடைய தண்ணுமையுடன் காண்பவர்க்கு மகிழ்ச்சியை உண்டாக்கும் கூத்தாட்டத்தை நிகழ்த்தினோம். அந்த ஆட்டத்தைக் காணும் பொருட்டுக் குளிர்ந்த நீர்த்துறையை உடைய தலைவன் எம் சேரிக்கு நாங்கள் அழைக்காமலேயே வந்தான். அவ் அளவிலேயே அதை அறிந்து, அவனுடைய பெண்டிர், எம்மிடம் பொறாமை கொண்டு, இனிமையையும் கள்ளையும் உண்ட அஃதை என்பவனின் யானைகளையும் நல்ல அணிகளையும் பரி சிலர்க்கு வழங்கும் மகிழ்ச்சி பொருந்திய நாலோலக்க மண்டபத்தில் புகும் பொருந, நின் பறையைப் போன்று இடையறாது என்னை இகழ்வர் எனக் கூறுவர்.

முற்காலத்தில் ஒருநாள் "ஆதிமந்தி' என்பவள் தன் கணவனைக் காணாமல், 'கச்சினை உடையவனும், கழலை அணிந்தவனும், தேன் ஒழுகும் மாலை அணிந்தவனும் மார்பை உடையவனும் பல்வேறு வகைத் தொழில் திறம் அமைந்த மாலையையும் சுரித்த தாடி மயிரையும் உடைய வனுமான என் கணவனான ஆட்டனத்தியை நீவீர் கண்ட துண்டோ?' என்று எதிரில் வருபவரையெல்லாம் வினவினாள், ஆயினும் விடை பெறவில்லை. அதனால் பெரிதும் மயங்கி வருந்தினாள். அணையை அழித்துக் கரைகளில் பரவி நேர் கிழக்காகப் பாயும் அழகிய குளிர்ந்த காவிரிப் பேராறு ஆட்டனத்தியைக் கைக்கொண்டது போல இப்போது யான் சூளினை மேற்கொண்டு அவனை முழுதும் கைப்பற்றிக் கொண்டிடத் துணிந்துள்ளேன். அப்போது அவன் பெண்டிர் என் செய்வார்? என்று 'தலைவனை நயப்பித்துக் கொண் டாள்' எனக் கூறக் கேட்ட பரத்தை தலைவியின் பங்கிலி ருப்போர் கேட்கக் கூறினார்.

## 191. என் காதலி தலைகுனிந்தாள்

உழுந்து தலைப்பெய்த கொழுங் களி மிதவை
பெருஞ் சோற்று அமலை நிற்ப, நிரை கால்
தண் பெரும் பந்தர்த் தரு மணல் ஞெமிரி,
மனை விளக்குறுத்து, மாலை தொடரி
கனை இருள் அகன்ற கவின்பெறுகாலை;
கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்
கேடு இல் விழுப்பு புகழ் நாள் தலைவந்தென,
உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர்,
பொது செய் கம்பலை முது செம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர,
புதல்வற் பயந்த திதலை அவ் வயிற்று
வால் இழை மகளிர் நால்வர் கூடி,
'கற்பினின் வழாஅ, நற் பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆக!' என,
நீரொடு சொரிந்த ஈர் இதழ் அலரி
பல் இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க,

வதுவை நல் மணம் கழிந்த பின்றை,
கல்லென் சும்மையர், ஞெரேரெனப் புகுதந்து,
'பேர் இற்கிழத்தி ஆக' எனத் தமர் தர,
ஓர் இற் கூடிய உடன் புணர் கங்குல்,
கொடும் புறம் வளைஇ, கோடிக் கலிங்கத்து
ஒடுங்கினள் கிடந்த ஓர் புறம் தழீஇ,
முயங்கல் விருப்பொடு முகம் புதை திறப்ப,
அஞ்சினள் உயிர்த்தகாலை, 'யாழ நின்
நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரை' என,
இன் நகை இருக்கை, பின் யான் வினவலின்,
செஞ் சூட்டு ஒண் குழை வண் காது துயல்வர,
அகம் மலி உவகையள் ஆகி, முகன் இகுத்து,
ஒய்யென இறைஞ்சியோளே – மாவின்
மடம் கொள் மதைஇய நோக்கின்,
ஒடுங்கு ஈர் ஓதி, மாஅயோளே.

*– நல்லாவூர் கிழார் அக 86*

*மிக்க இருளானது நீங்கிய அழகுடைய விடியற் காலையில் தீய கோள்களின் தொடர்பு நீங்கப் பெற்ற வளைந்த வெண்மையான திங்களினைக் குற்றமில்லாத சிறந்த புகழை உடைய உரோகிணி என்ற நாளினை அடைந்தது. அப்போது நம் இல்லத்தில் உழுத்தப் பருப்பு இட்டுச் சமைத்த பொங்கலுடன் மிக்க சோற்றையும் உறவினரும் மற்றவரும் உண்ணுகையினால் ஏற்படும் ஆரவாரம் இடையறாது கேட்க, வரிசையான கால்களையுடைய குளிர்ந்த பெரிய திருமணப் பந்தலில் புதியதாகக் கொண்டுவந்த மணலைப் பரப்பி வீட்டில் விளக்கை ஏற்றி வைத்து மாலைகளைத் தொங்க விட்டனர்.*

*தலையில் குடம் ஏந்தியவரும், புதிய அகன்ற வாயைக் கொண்ட மண் ஏனத்தை உடையவரும் ஆகிய மணத்தைச் செய்து வைக்கும் ஆரவாரம் உடைய மங்கல முதிய மகளிர் முன்னே தரவேண்டியவற்றையும் பின்னே தரவேண்டியவற்றையும் முறை முறையாக எடுத்துத் தந்தனர்.*

*மகனைப் பெற்ற தேமலையுடைய அழகிய வயிற்றைப் பெற்ற தூய அணிகளையுடைய மகளிர் நால்வர் ஒன்று கூடி நின்று கற்பினின்றும் வழுவாது நல்ல பலவாகிய உதவி*

களையும் செய்து நின்னை மனைவியாகப் பெற்ற உன் கணவனை நீ பெரிதும் விரும்புகின்றவள் ஆவாய், எனச் சொல்லி வாழ்த்தி, மங்கல நீருடன் கலந்து சொரியப் பெற்ற, நனைந்த இதழ்களை உடைய பூக்கள் கரிய கூந்தலின் மீது நெற்களுடன் பொருந்தி விளங்க இங்ஙனம் நன்றாகிய திரு மணம் முடிந்து பின்பு, சுற்றத்தார் கல் என்ற ஒலியினராய் விரைந்து வந்து தலைவியை நோக்கி, 'நீ பெரிய மனை வாழ்க்கைக்கு உரியவளாக ஆகுக!' என்று வாழ்த்தி, என்னிடம் அவளைக் கூட்டினர்.

ஓர் அறையில் உடன் கூடிய புணர்ச்சிக்குரிய இரவில், அவள் நாணத்தால் தன் முதுகை வளைத்துத் தன் புடவைக் குள் ஒடுங்கிக் கிடந்த இடத்தை நான் அடைந்தேன். அவளைத் தழுவும் விருப்புடன் அவள் முகத்தை மூடியிருந்த புடவையைச் சிறிது திறந்தேன். அப்போது அவள் தன் பெண்மையால் அஞ்சிப் பெரு மூச்செறிந்தாள். அப்போது 'உன் உள்ளம் எண்ணியதை மறைக்காது சொல்வாய்' எனப் பின்பு வினவினேன். அதனால் இனிய மகிழ்ச்சியுடன் கூடிய இருக்கையில், மானின் மடத்தை உடையதும், செருக்கை உடையதுமான பார்வையையும், ஒடுங்கிய கூந்தலையும் உடைய மாமை நிறத்தை உடையவள் சிவந்த மணிகள் பதித்த ஒளி பொருந்திய குழை காதில் அசைய, உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியினளாகி முகத்தைத் தாழ்த்தி விரைந்து தலை குனிந்தாள். என்று பண்டு நிகழ்ந்ததைத் தலைவன் நினைந்து இன்புற்றான்.

## 192. தலைவி ஊடலைத் தீர்க்க முடியாது

நறவு உண் மண்டை நுடக்கலின், இறவுக் கலித்து,
பூட்டு அறு வில்லின் கூட்டுமுதல் தெறிக்கும்
பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்
அர வாய் அன்ன அம் முள் நெடுங் கொடி
அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி,
அசைவரல் வாடை தூக்கலின், ஊதுஉலை
விசை வாங்கு தோலின், வீங்குபு ஞெகிழும்
கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர!

'ஒண் தொடி ஆயத்துள்ளும் நீ நயந்து
கொண்டனை' என்ப 'ஓர் குறுமகள்' அதுவே –
செம்பொற் சிலம்பின், செறிந்த குறங்கின்,
அம் கலுழ் மாமை, அஃதை தந்தை,
அண்ணல் யானை அடு போர்ச் சோழர்
வெண்ணெல் வைப்பின் பருவூர்ப் பறந்தலை,
இரு பெரு வேந்தரும் பொருது களத்து ஒழிய,
ஒளிறு வாள் நல் அமர்க் கடந்த ஞான்றை,
களிறு கவர் கம்பலை போல,
அலர் ஆகின்றது, பலர் வாய்ப் பட்டே

*– மருதம் பாடிய இளங்கடுங்கோ அக 96*

*கள்ளை உண்ட கலயம் கழுவப்படுதலால் அந்த நீரை யுண்ட இறால் மீன், செருக்குக் கொண்டு நாண் அறுபட்ட வில் தெறிப்பதைப் போல் நெற்கூடுகளின் அடியில் துள்ளி விழும். அத்தகைய இடத்தையுடைய மருத நிலத்து நீர் நிலையில் கரையில் உள்ள பிரம்பின் அரத்தின் வாய்போன்ற முட்களைக் கொண்ட நீண்ட கொடி, அருவியாக வந்து விழும் நீரின் மீது படர்ந்த ஆம்பலின் இலையைச் சுற்று கிறது. அந்த இலையை வாடைக் காற்று விட்டு விட்டுப் புகுந்து அசைக்கின்றது. அத் தோற்றம் கொல்லனின் உலைக் களத்தில் ஊதும் விசைக் கயிற்றால் இழுக்கப்படும் துருத்தி யைப் போல் உயர்ந்து எழுந்து தாழுகின்றது. இத்தகைய வயல்களையும் தோட்டங்களையும் உடைய காஞ்சி மரங்கள் மிகுந்துள்ள ஊரையுடைய தலைவனே!*

*நீ ஒளி பொருந்திய வளையலை அணிந்த பரத்தையர் கூட்டத்துள் ஓர் இளைய மகளை விரும்பி மணந்து கொண்டாய் என்று ஊரவர் கூறுகின்றனர்.*

*ஆகவே அச் செய்தி சிவந்த பொன்னாலான சிலம்பை யும் நெருங்கிய தொடையையும் அழகு மிகும் மாமை நிறத்தையும் உடைய அஃதை என்பவளுக்குத் தந்தையான பெருமை யுடைய யானையையும், வெல்லும் போரையும் உடைய சோழன் வெண்ணெல் விளையும் இடங்களை யுடைய பருவூர்ப் பாண்டியரான இரு பெரு வேந்தர்களும் போரிட்டுக் களத்தே இறந்துபட, விளங்கும் வாளால்*

செய்யும் நல்ல போரை வென்றபோது, அப் பகை மன்னர்களின் ஆண் யானைகளைக் கவர்ந்து கொண்ட சமயத்தில் உண்டான ஆரவாரத்தைப் போல் பலர் வாயிலும் அலரா கின்றது. எனவே யான் தலைவியினது ஊடல் தீர்த்தல் முடியாது. என்று வாயில் மறுத்தாள் தோழி.

## 193. தோழி வா தலைவி காணச் செல்வோம்

எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்து,
பொரி அகைந்தன்ன பொங்கு பல் சிறு மீன்,
வெறி கொள் பாசடை, உணீஇயர், பைப்பயப்
பறை தபு முது சிரல் அசைபு வந்து இருக்கும்
துறைகேழ் ஊரன் பெண்டு தன் கொழுநனை
நம்மொடு புலக்கும் என்ப – நாம் அது
செய்யாம்ஆயினும், உய்யாமையின்,
செறிதொடி தெளிர்ப்ப வீசி, சிறிது அவண்
உலமந்து வருகம் சென்மோ – தோழி!–
ஒளிறு வாட் தானைக் கொற்றச் செழியன்
வெளிறு இல் கற்பின் மண்டு அமர் அடுதொறும்
களிறு பெறு வல்சிப் பாணன் எறியும்
தண்ணுமைக் கண்ணின் அலைஇயர், தன் வயிறே.

*– ஆலங்குடி வங்கனார் அக 106*

"என் தோழியே, தீயானது கொழுந்து விட்டாற் போன்ற இதழ் திறந்து மலர்கின்ற தாமரை மலர்களையுடைய வயல்கள். அங்கு நெற்பொரி முதலியன தெறித்தாற் போன்று பல சிறிய மீன்கள் விளங்கும். அவற்றை உண்ணும் பொருட்டு மணமுடைய பசிய இலையில் பறப்பதைக் கைவிட்ட முதிய சிச்சிலிப் பறவை. மெல்ல மெல்ல அசைந்து வந்திருக்கும். இத்தகைய துறையை உடைய ஊரனின் மனைவி 'தன் கணவனை நம்மொடு கூட்டி வெறுத்துப் பேசுகின்றாள்' என்றர். நாம் அதற்குக் காரணமான ஒன்றைச் செய்ய மாட்டோம். ஆயினும் அவள் கூறும் பழியினின்றும் நீங்க மாட்டாமையின், விளங்கும் வாளையுடைய வெற்றி பொருந்திய பாண்டியன் குற்றம் இல்லாத படைப் பயிற்சியுடன் கூடி நெருங்கிய போரில் செல்வான். அவன் வெல்லுந்

தோறும் களிறான பரிசைப் பெறுபவன் பாணன். அப் பாணன் அடிக்கும் மத்தளத்தின் கண் போல், அப் பரத்தை யின் வயிற்றை அடித்துக் கொள்ளும்படி செறிந்த வளையல் ஒலித்திடக் கையை வீசிச், சிறிது பொழுது அங்கு உலாவி வருவோம், வருவாயாக, என்று பரத்தை தன் தோழியை நோக்கியுரைத்தாள்.

## 194. தலைவி ஊடல் தீராது!

எரி அகைந்தன்ன தாமரை இடை இடை
அரிந்து கால் குவித்த செந் நெல் வினைஞர்
கள் கொண்டு மறுகும் சாகாடு அளற்று உறின்
ஆய் கரும்பு அடுக்கும் பாய்புனல் ஊர!
பெரிய நாண் இலைமன்ற; 'பொரி எனப்
புன்கு அவிழ் அகன்துறைப் பொலிய, ஒள் நுதல்,
நறு மலர்க்கு அணவரும் குறும் பல் கூந்தல்,
மாழை நோக்கின், காழ் இயல் வன முலை,
எஃகுடை எழில் நலத்து, ஒருத்தியொடு நெருநை
வைகுபுனல் அயர்ந்தனை' என்ப; அதுவே,
பொய் புறம் பொதிந்து, யாம் கரப்பவும் கையிகந்து
அலர் ஆகின்றால் தானே; மலர்தார்
மை அணி யானை, மறப் போர்ச் செழியன்
பொய்யா விழவின் கூடற் பறந்தலை
உடன் இயைந்து எழுந்த இரு பெரு வேந்தர்
கடல் மருள் பெரும் படை கலங்கத் தாக்கி
இரங்குஇசை முரசம் ஒழிய, பரந்து அவர்
ஓடுபுறம் கண்ட ஞான்றை
ஆடு கொள் வியன் களத்த ஆர்ப்பினும் பெரிதே.

*– பரணர் அக 116*

*தீயானது கொழுந்து விட்டு எரிவது போன்ற தாமரை மலர்களின் இடை இடையே செந்நெல்லை அரிந்து ஓரிடத்தே குவித்தனர் உழவர். அவர்கள் தங்களுக்குக் கள்ளை ஏறிக் கொண்டு பலகாலும் திரியும் வண்டி, சேற்றில் வந்தால் அதன் சகடங்கள் சேற்றில் ஆழ்ந்து விடாதபடி கருப்பங் கோல்களை முறித்துச் சேற்றில் பரப்புவர். அத்தகைய இயல்பு*

வாய்ந்த நன்கு நீர் பாய்கின்ற ஊரையுடைய தலைவனே, நீ பெரிதும் நாணம் இல்லாதவன் ஆவாய்.

பொரிபோல் புன்கம் பூ மலரும் அகன்ற நீர்த்துறை பொலிவுடைய, ஒளி பொருந்திய நெற்றியையும் நறுமண மலர்கள் அணியப் பெற்ற காண்பதற்கு இனிய பலவாய கூந்தலையும், மா வடுவைப் போன்ற கண்ணையும், முத்து மாலை அசையும் அழகிய முலையையும், நுண்ணிய அழகின் நலத்தையுமுடைய ஒரு பரத்தையுடன் நேற்று இடையறாது ஓடும் நீரில் நீ விளையாடினாய் எனப் பலரும் உரைப்பர். இதுநாள்வரை யாங்கள் பொய்யென்று மூடி மறைக்கவும் எம் செயலைக் கடந்து போயிற்று.

மலர்ந்த மலர் மாலையையும் மையால் அழகு செய்யப் பெற்ற யானையையும் மறத்தன்மை மிக்க போர்த் தொழிலை யும் உடைய பாண்டியனின் என்றும் நீங்காத விழர்வை யுடைய மதுரை நகரத்தின் பக்கத்தில் உள்ள போர்க்களத் தில், தம்முள் ஒன்று கூடிச் சேர சோழ மன்னர்களின் கடல் போன்ற பெரிய படைகளைக் கலக்கம் உண்டாகுமாறு தாக்கி, ஒலிக்கும் ஓசையையுடைய முரசு போர்க்களத்தில் கிடக்க, நான்கு திசைகளிலும் பரவி அம் மன்னர்கள் ஓடினர். அவர்களை அவ்வாறு புறங்கண்ட போது உண்டான ஆர வாரத்தை விடப் பெரிதாக அலராயிற்று. என்று தலைவனை வாயில் மறுத்தாள் தோழி.

## 195. நீ நெஞ்சே மடமை உடையாய்

நின்வாய் செத்து நீபல உள்ளி,
பெரும் புன் பைதலை வருந்தல் அன்றியும்,
மலைமிசைத் தொடுத்த மலிந்துசெலல் நீத்தம்
தலைநாள் மாமலர் தண்துறைத் தயங்கக்
கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேரியாற்று
அறல் வார் நெடுங் கயத்து அரு நிலை கலங்க
மால் இருள் நடுநாள் போகித், தன் ஐயர்
காலைத் தந்த கணைக் கோட்டு வாளைக்கு
அவ் வாங்க உந்தி, அம் சொல், பாண்மகள்,
நெடுங் கொடி நுடங்கும் நறவு மலி மறுகில்

பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்,
கழங்கு உறழ் முத்தமொடு நன்கலம் பெறாஉம்
பயம் கெழு வைப்பிற் பல் வேல் எவ்வி
நயம் புரி நன் மொழி அடக்கவும் அடங்கான்,
பொன் இணர் நறு மலர்ப் புன்னை வெஃகி,
திதியனொடு பொருத அன்னி போல
விளிகுவைகொல்லோ நீயே – கிளிஎனச்
சிறிய மிழற்றும் செவ் வாய்ப் பெரிய
கயல் என அமர்த்த உண் கண், புயல்எனப்
புறம் தாழ்பு இருளிய பிறங்கு குரல் ஐம்பால்,
மின் நேர் மருங்குல், குறுமகள்
பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே?

– நக்கீரர் அக 126

*கிளியைப் போன்று இனிமையாய்ச் சில சொற்களைப் பேசும் சிவந்த வாய், கயல்மீன் போன்று ஒன்றுடன் ஒன்று போரிடுகின்ற மையுண்ட கண்கள், முகில் என்னுமாறு விளங்கும் பூங்கொத்தினை ஏற்ற கூந்தல், கொடிமுல்லை, போன்ற இடை என்னும் இவ் இயல்பு வாய்ந்த இச் சிறுமி யின் பின்னே போய் ஏங்கித் தாழ்ந்து நிற்றலை உடைய அறியாமை உடைய என் நெஞ்சே!*

*நீ, உன் எண்ணங்களை உண்மை என எண்ணி அவற்றை முதலாகக் கொண்டு பலவற்றையும் நினைந்து மிகப் பெரிய துன்பத்தை உடையையாய் வருந்துகின்றாய். அன்றியும், மலை உச்சியினின்று தொடர்புற்று விழுந்த மிக்க வெள்ளத்தால், முதல் நாள் மலர்ந்த மலர்கள் குளிர்ந்த துறைகளில் எல்லாம் விளங்கக் கடற்கரையைக் கரைக்கும் காவிரியான பேராற்றில் கருமணல் பொருந்தும். நீண்ட மடுவின் நிலை கொள்ளாத நீரும் கலங்குமாறு கரிய இருள் பொருந்திய நள் இரவிலே ஓடங்களைச் செலுத்திப் போய், தன் தமையர் விடியற் காலையில் பிடித்து வந்தது திரண்ட கோடுகளை உடைய வாளைமீன் அவ் வாளைமீனுக்கு விலையாக அழகிய வளைந்த கொப்பூழையும் அழகிய சொற்களையும் உடைய பாண்மகள், நீண்ட கொடிகள் அசையும் கள் மிக்க தெருவில் விற்கச் சென்றாள். அங்கு வாங்குபவர் பழைய செந்நெல்லை*

முகந்து கொடுப்பதைக் கொள்ளாமல் கழங்கு போன்ற பெரிய முத்துகளுடன் சிறந்த அணிகளையும் பெறுவாள். இத்தன்மை யுடைய வளம்மிக்க ஊர்களை யுடைய பலவேற்களை உடையவன் 'எவ்வி'.

நன்மை தருகின்ற மொழிகளைச் சொல்லி அடக்கவும், தன் செருக்கு மிகுதியால் அடங்காதவனாய்ப், பொன் போன்ற கொத்துகளாக மலரும் நல்ல மலர்களையுடைய புன்னை மரமான காவல் மரத்தை வெட்ட விரும்பித் திதியன் என்பவனுடன் போரிட்டு இறந்து போனான் அன்னி. அவனைப் போல் நீயும் இறந்து விடுவாய் போலும்! என்று உணர்ப் புவயின் வாரா ஊடற் போதில் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்.

## 196. இவள் நமக்கு இனி என்ன உறவோ?

மைப்பு அறப் புழுக்கின் நெய்க் கனி வெண் சோறு,
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி,
புள்ளுப் புணர்ந்து இனிய ஆக, தெள் ஒளி
அம் கண் இரு விசும்பு விளங்கத், திங்கட்
சகடம் மண்டிய துகள் தீர் கூட்டத்து
கடி நகர் புனைந்து, கடவுள் பேணி,
படு மண முழவொடு பரூஉப் பணை இமிழ,
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்,
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய,
மென் பூ வாகைப் புன் புறக் கவட்டிலை,
பழங் கன்று கறித்த பயம்பு அமல் அறுகைத்
தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற
மண்ணு மணி அன்ன மாஇதழ்ப் பாவைத்
தண் நறு முகையொடு வெண் நூல் சூட்டித்,
தூ உடைப் பொலிந்து மேவரத் துவன்றி,
மழைபட் டன்ன மணல் மலி பந்தர்
இழை அணி சிறப்பின் பெயர் வியர்ப்பு ஆற்றி,
தமர்நமக்கு ஈத்த தலைநாள் இரவின்
'உவர் நீங்கு கற்பின் எம் உயிர் உடம்படுவி!
முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்,

பெரும் புழுக் குற்ற நின் பிறைநுதல் பொறி வியர்
உறு வளி ஆற்றச் சிறு வரை திற' என
ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்,
உறை கழி வாளின் உருவு பெயர்ந்து இமைப்ப,
மறை திறன் அறியாள்ஆகி, ஒய்யென
நாணினள் இறைஞ்சியோளே பேணிப் -
பரூஉப் பகை ஆம்பற் குரூஉத் தொடை நீவிக்,
கரும்பு இமிர் ஆய்மலர் வேய்ந்த
இரும் பல் கூந்தல் இருள் மறை ஒளித்தே.

*- விற்றூற்று மூதெயினனார் அக 136*

"என் நெஞ்சமே, குற்றம் இல்லாதபடி சமைக்கப்பட்ட இனிய நெய் மிக்க வெண்மையான சோற்றை எல்லை இல்லாத வள்ளன்மையுடன் உறவினர் உண்ணுமாறு செய்து, பறவை நற்குறியானது இனிதாகப் பொருந்த, தெளிந்த ஒளியையுடைய பெரிய வானம் களங்கம் இல்லாது விளங்க, வெண்கதிர் உரோகிணி கூடிய நல்ல நாள் சேர்க்கையில், திருமண இல்லத்தை அழகாக அலங்கரித்தனர். முதலில் கடவுளை வழிபட்டனர். ஒலிக்கும் மண முழவுடன் பெரிய முரசமும் ஒலிக்கத் தலைவிக்கு மணநீர் ஆட்டினர் மகளிர். அவர்கள் தலைவியைத் தம் கண்களால் இமையாமல் நோக்கிப் பின் நாணத்தால் விரைவாக மறைந்தனர்.

மென்மையான பூவையுடைய வாகையின் புல்லிய புறத்தை உடைய கவர்த்த இலையைக் கன்றால் கறிக்கப்பட்ட பள்ளமான நிலத்தில் படர்ந்த அறுகம்புல்லின் முகிலின் முதல் பெயலால் ஈன்ற நீலமணி போன்ற இதழையுடைய பாவை போன்ற கிழங்கில் உள்ள குளிர்ந்த அரும்புடன் சேரக்கட்டிய வெண்மையான காப்பு நூலை அணிந்தனர். தூய திருமணப் புடவையால் அழகுபெறச் செய்தனர். மழை பெய்தது போல் விளங்கும் பந்தரிலே அணிகளை வியர்வையை விசிறியால் ஆற்றினர். இவளை நன்கொடையாக நமக்கு வழங்கினர். அவ் இயல்புடைய அம் முதல்நாள் இரவில் -

வெறுப்பு நீங்கிய கற்பினையுடைய என் உயிர்க்கு உடம்பாக அடுத்தவள் கசங்காத புதிய ஆடையால் உடல் முழுவதும் போர்த்தியதால் மிக்க புழுக்கத்தை அடைந்தாள்.

*ஆதலால் பிறை போன்ற அவளது நெற்றியில் வியர்வை அரும்பியது. அவ் வியர்வைத் துளிகளை இங்கு வரும் காற்று ஆற்றுதற் பொருட்டு அந்த ஆடையைத் திறவாய் எனச் சொல்லி அவள் முகத்தைப் பார்க்கும் ஆவலுடன் அவ் வாடையைப் பற்றி இழுத்ததால் உறையினின்று உருவிய வாளைப் போன்று அவளது வடிவம் ஆடையினின்றும் விலகி நின்றது.*

*அவள் தனது வடிவத்தை மறைக்கும் வகையை அறியாதவள் ஆனாள். நாணமுற்றாள். ஆம்பல் மலரால் தொடுக்கப்பட்ட, தன் இடைக்குப் பகையான மாலையை அகற்றிப் பல விடுபூக்கள் செருகப்பட்ட கரிய கூந்தலை விரித்து இருண்ட போர்வையாகக் கொண்டு மறைத்தற்குரிய தன் உறுப்புகளை மறைத்து விரைவாக நாணங்கொண்டாள். வணங்கினாள். முன் நிகழ்ந்தது இது. அத்தகையவள் இன்று நாம் பலவற்றையும் சொல்லி உணர்த்தவும் உணராமல் ஊடல் கொள்கின்றாள். ஆதலால் இனி இவள் நமக்கு என்ன உறவினள்?" என உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்.*

## 197. பாணனின் கூற்றை தலைவி மறுத்தல்

வலி மிகு முன்பின் அண்ணல் ஏஎறு
பனி மலர்ப் பொய்கைப் பகல் செல மறுகி,
மடக் கண் எருமை மாண் நாகு தழீஇ,
படப்பை நண்ணிப், பழனத்து அல்கும்
கலி மகிழ் ஊரன் ஒலி மணி நெடுந் தேர்
ஒள் இழை மகளிர் சேரிப், பல் நாள்
இயங்கல் ஆனாத ஆயின்; வயங்கிழை
யார்கொல் அளியள்தானே எம் போல்
மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி
வளி பொரத் துயல்வரும் தளி பொழி மலரில்
கண்பனி ஆகத்து உறைப்ப, கண்பசந்து
ஆயமும் அயலும் மருளத்,
தாய்ஓம்பு ஆய்நலம் வேண்டாதோளே.

*- உவர்க் கண்ணூர்ப் புல்லங்கீரனார் அக 146*

வலிமை மிக்க தலைமைப் பண்பையும் உடல் வலிமையையும் உடைய எருமைக் கடாவானது குளிர்ந்த மலர்களை உடைய நீர்நிலையில் விழுந்து பகற்பொழுது முழுதும் சுழன்று திரிந்து பின்பு, மடமையுடைய இளைய எருமையைத் தொடர்ந்து செல்லும். தோட்டங்களை அடையும்; அதன் பின்பு ஊர்ப் பொது நிலத்திலே தங்கும். இத்தன்மை உடைய ஆராவாரமும் மகிழ்ச்சியும் கொண்ட ஊரானின் தேரானது ஒளியுடைய அணிகலன் அணிந்த பரத்தையர் சேரிக்குப் பல நாள்களாகச் செல்லவில்லை என்கின்றாய். அப்படியானால் -

மாயம் செய்யும் பரத்தமைத் தொழிலுடைய அவனது வாய்மை போல விளங்கும் சொல்லை மெய் என விரும்பி, பெருங்காற்று வீசுவதால் மழை பெய்யப்பட்ட மலரைப் போல கண்கள் நீரை மார்பில் சொரிந்திடக் கலங்கி ஆயத்தாரும் அயலாரும் 'இவளது நிலை இங்ஙனம் ஆவதோ?' என்று மயங்கவும், பேதையான எம்மைப் போலவே தன் தாய் பேணி வளர்த்த அழகிய நலத்தை வேண்டாது இழப்பாள் ஆகிய அணியை உடையாள் யாரோ அவள் இரங்கத் தக்கவள். என்று வாயில் வேண்டிச் சென்ற பாணற்குத் தலைவ மறுத்துரைத்தாள்.

## 198. தலைவன் தொடர்பால் உண்டா பிழை?

முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டும்
மூட்டுறு கவரி தூக்கி யன்ன,
செழுஞ் செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக் கதிர்
மூதா தின்றல் அஞ்சிக், காவலர்
பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பரீஇ,
காஞ்சியின் அகத்து, கரும்பு அருத்தி, யாக்கும்
தீம் புனல் ஊர! திறவதாகக்
குவளை உண்கண் இவளும் யானும்
கழனி ஆம்பல் முழுநெறிப் பைந் தழை,
காயா ஞாயிற்றாக, தலைப்பெயப்
'பொய்தல் ஆடிப் பொலிக!' என வந்து,
நின் நகாப் பிழைத்த தவறோ பெரும!

கள்ளும் கண்ணியும் கையுறையாக
நிலைக் கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஒச்சித்,
தணி மருங்கு அறியாள், யாய் அழ,
மணி மருள் மேனி பொன் நிறம் கொளலே?

*- ஆலூர் மூலங்கிழார் அக 156*

"பெருமானே! மூன்று வகையான முரசுகளை உடைய மன்னரின் குதிரைத் தலையின் மீது தைக்கின்ற கவரியைத் தொங்க விட்டாற் போன்று தொங்கும் கழனியில் விளைந்த சிவந்த அரியில் உள்ள நெற்கதிரைக் முதிய பசு தின்பதைக் கண்டு அஞ்சி, வயலைக் காப்பவர் அதற்குக் கரும்பை உண்பித்தனர். பின் பாகற் கொடியைப் பகன்றைக் கொடியுடன் அறுத்து அவற்றால் காஞ்சி மரத்தில் பசுவைக் கட்டி வைப்பர். இவ் இயல்பு வாய்ந்த நீர்வளம் உடைய நாட்டை உடையவனே!

எம் தாய், நீர்த் துறையிடத்து நிலைபெற்ற முருகப் பெருமானுக்கு வழிபாட்டுப் பொருள்களாகக் கள்ளும், மலர் மாலையும் நேரே நிற்கும் கொம்பையுடைய வெள்ளாட்டுக் கிடாய் ஆகியவற்றை எல்லாம் செலுத்தினாள். அவ்வாறு செய்தும் எம் தலைவியின் நோய் தணிதற்கு மருந்தைக் காணாதவளாய் வருந்தி அழும்படியாய் எம் தலைவியின் நீலமணி போன்ற மேனி பொன்னிறமான பசலை பாய்ந்தது. இங்ஙனம் ஆவது -

குவளை மலர் போன்ற கண்களை யுடைய இவளும் யானும் வயலில், மலர்ந்த இதழ் ஒடியாத ஆம்பல் மலருடன் கூடிய பசிய தழையாகிய ஆடை எம் உடலில் கிடந்து வருந்துமாறு, ஞாயிறு தோன்றும் விடியற்காலத்தில் விளையாடி மகிழ்வோம் என நினைத்துச் சோலையில் வந்தோம். அங்கு உன்னைக் கண்டு நின்னுடன் நகைத்து உரையாடிப் பிழை செய்தமையால் உண்டான தீமையே ஆகும்" என்று தலைவனிடம் தலைவியை மணம் புரியச் சொன்னாள் தோழி.

### 199. யார் என்னுடன் நீராடியவர்?

'நல் மரம் குழீஇய நனை முதிர் சாடி
பல் நாள் அரித்த கோஒய் உடைப்பின்,

மயங்குமழைத் துவலையின் மறுகு உடன் பனிக்கும்
பழம் பல் நெல்லின் வேளூர்வாயில்,
நறு விரை தெளித்த நாறுஇணர் மாலை,
பொறு வரி இன வண்டு ஊதல கழியும்
உயர் பலி பெறூஉம் உரு கெழு தெய்வம்
புனை இருங் கதுப்பின் நீடுத்தோள்வயின்
அனையேன்ஆயின், அணங்குக, என்!' என
மனையோட் தேற்றும் மகிழ்நன் ஆயின்
யார்கொல் – வாழி, தோழி! – நெருநல்
தார் புண் களிற்றின் தலைப் புணை தழீஇ,
வதுவை ஈர் அணிப் பொலிந்து, நம்மொடு,
புதுவது வந்து காவிரிக்
கோடுதோய் மலிர்நிறை, ஆடியோரே?

*– இடையன் நெடுங்கீரனார் அக 166*

*தோழியே, வாழ்க! நல்ல மரங்கள் சூழ்ந்த கள் விற்கும் இல்லம். அதில் உள்ள பலநாளும் வடிக்கப்பெற்ற கள் நிறைந்த சாடியை முகக்கும் கலம் உடைந்திடின் தெரு வெல்லாம் மழைத்துளி போலக் கள்துளி துளிக்கும் ஊர்; பல பழைய நெற்கூடுகளை உடைய வேளூர். அதன் வாயிலில் உள்ள நறுமண நீர் தெளிக்கப்பட்ட மணம் கமழும் கொத்து களால் ஆன பூமாலையைப் புள்ளிகளையும் வரிகளையும் உடைய கூட்டமான வண்டு மொய்க்காமல் அஞ்சி விலகும். இதற்குக் காரணமான உயர்ந்த பலிகளையே பெறும் அச்சம் பொருந்திய தெய்வம்.*

*மலர் அணிந்த கரிய கூந்தலையுடைய உன்னால் ஐயம் கொள்ளப்பட்டவளுடன் நான் புனலாடி வந்தது உண்மை யாயின் என்னை வருத்தட்டும், என்று இவ்வாறு தன் மனைவியை அவள் கணவன் சூள் உரைத்துத் தெளிய வ்வைத்தான் என்பர். அங்ஙனமாயின் நேற்றுப், புதிதாக வந்த காவிரியின் கரையுச்சியைத் தோய்ந்து வரும் வெள்ளத்தில் மாலையணிந்த யானையைப் போல விளங்கும் புணையின் தலையிடத்தைத் தழுவியிருந்து, கூட்டத்துக்குரிய பெரிய அணியால் பொலிவுற்ற நம்முடன் புனலாடியவர் யாரோ? என்று பரத்தைத் தம் பக்கமுள்ளார் கேட்கக் கூறினாள்.*

## 200. நீ அவளிடமே போ

கடல் கண்டன்ன கண்அகன் பரப்பின்
நிலம் பக வீழ்ந்த வேர் முதிர் கிழங்கின்
கழை கண்டன்ன தூம்புடைத் திரள் கால்,
களிற்றுச் செவி அன்ன பாசடை மருங்கில்,
கழு நிவந்தன்ன கொழு முகை இடைஇடை
முறுவல் முகத்தின் பல் மலர் தயங்க,
பூத்த தாமரைப் புள் இமிழ் பழனத்து,
வேப்பு நனை அன்ன நெடுங் கண் ஈர் ஞெண்டு
இரை தேர் வெண் குருகு அஞ்சி, அயலது
ஒலித்த பகன்றை இருஞ் சேற்று அள்ளல்,
திதலையின் வரிப்ப ஓடி, விரைந்து தன்
நீர் மலி மண் அளைச் செறியும் ஊர!
மனை நகு வயலை மரன் இவர் கொழுங் கொடி
அரி மலர் ஆம்பலொடு ஆர் தழை தைஇ,
விழவு ஆடு மகளிரொடு தழூஉ அணிப் பொலிந்து,
மலர் ஏர் உண் கண் மாண் இழை முன்கைக்
குறுந் தொடி துடக்கிய நெடுந் தொடர் விடுத்தது
உடன்றனள் போலும், நின் காதலி? எம் போல்
புல் உளைக் குடுமிப் புதல்வற் பயந்து,
நெல்லுடை நெடு நகர் நின் இன்று உறைய,
என்ன கடத்தளோ, மற்றே? தன்முகத்து
எழுது எழில் சிதைய அழுதனள் ஏங்கி,
அடித்தென உருத்த தித்திப் பல் ஊழ்
நொடித்தெனச் சிவந்த மெல் விரல் திருகுபு,
கூர் நுனை மழுகிய எயிற்றள்
ஊர் முழுதும் நுவலும் நிற் காணிய சென்மே.

*– மருதம் பாடிய இளங்கடுங்கோ அக 176*

*கடலைக் கண்டாற் போன்ற நீர்ப்பரப்பு. அதில் நிலம் பிளக்கும்படி இறங்கிய வேரில் முதிர்ந்த கிழங்கு. மூங்கிலைப் போன்ற துளையுடைய திரண்ட தண்டு, ஆண் யானையின் காதினைப் போன்ற இலைகள், அவற்றிடையே கழுமரம் உயர்ந்து தோன்றுவதைப் போன்ற செழித்த மொட்டுகள்.*

அம் மொட்டுகளிடையே புன்சிரிப்புடைய முகம்போல் பூத்த பல மலர்கள். இங்ஙனம் விளங்கும் தாமரையினிடையே பறவைகள் ஒலிக்கும் வயல். அவ் வயலில் உள்ள வேப்ப மரத்தின் அரும்பைப் போன்ற நீண்ட கண்ணையுடைய நீர் நண்டு பரத்தமை பொருட்டாகப் பிரிந்து சென்றது. இது இரையை எதிர்பார்த்திருந்த வெண் நாரையைக் கண்டு அஞ்சும். அஞ்சிப் பக்கத்தில் உள்ள பகன்றைக் கொடி படர்ந்த கரிய சேற்றுப் படிவில் தேமல் போல வரியுண்டாக ஓடிப் போய் மறையும். இத்தகைய இயல்பு வாய்ந்த ஊரை யுடைய தலைவனே!

வீட்டில் உள்ள மரத்தின் மீது படரும் வயலைக் கொடியை மலர்களையுடைய ஆம்பற் கொடியுடன் கட்டிய தழை ஆடையை உடுத்து விழாவில் கூத்தாடும் பரத்தையருடன் தழுவி ஆடும் அணியில் நீயும் கூடிப் பொலிந்தனை. நீலமலர் போன்ற மையுண்ட கண்களையும் மாட்சிமையுடைய அணிகலன்களையும் உற்ற நின் காதலியான பரத்தையின் சிறிய வளையல் அணிந்த கையை நீ விட்டு விட்டனை அல்லையோ! அதற்கு அவள் உள் செய்கையைப் பொறுத்துக் கொள்ளாமல் அவள் உன்னைச் சினந்தாள் போலும்!

அங்ஙனம் சினந்த அப் பரத்தை தன் முகத்தினது அழகு கெட அழுது ஏக்கமுற்றுப் பொன்னை உருக்கி வார்த்தாற் போன்ற தேமலையும், பலமுறை முறித்துக் கொள்வதால் சிவந்த விரலையும், கடித்தலால் உரிய முனையைப் பெற்ற முனை மழுங்கிய பற்களையும் உடையவளாய், ஊர் முழுவதும் பழி தூற்றப்படும் நின்னைக் காண்பதற்குத் தேடிச் செல்வாள் ஆகையால், உன் காதலியான அப் பரத்தை எம்மைப் போல் புற்கென்ற உளைபோன்ற தலைமயிரை உடைய மகனைப் பெற்று நெல்லையுடைய பெரிய இல்லத்தில் நின்னைப் பிரிந்து தங்கியிருக்க என்ன கடமைப்பட்டவளோ? அவள் அத்தகைய கடமை உடையவள் அல்லளே, என்று தோழி தலைவன் வாயில் மறுத்துரைத்தாள்.

## 201. தலைவிக்கு நான் பகையல்லேன்

**வானம் வேண்டா வறன்இல் வாழ்க்கை**
**நோன் ஞாண் வினைஞர் கோள் அறிந்து ஈர்க்கும்**

மீன் முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை
நீர் மிசை நிவந்த நெடுந் தாள் அகல்இலை
இருங் கயம் துளங்க, கால் உறுதோறும்
பெருங் களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொடு
எழுந்த கௌவையோ பெரிதே; நட்பே,
கொழுங் கோல் வேழத்துப் புணை துணையாகப்
புனல் ஆடு கேண்மை அனைத்தே; அவனே,
ஒண் தொடி மகளிர் பண்டை யாழ் பாட
ஈர்ந் தண் முழவின் எறிகுணில் விதிர்ப்பத்,
தண் நறுஞ் சாந்தம் கமழும் தோள் மணந்து,
இன்னும் பிறள் வயினானே; மனையோள்
எம்மொடு புலக்கும் என்ப; வென் வேல்
மாரி அம்பின், மழைத்தோற் பழையன்
காவிரி வைப்பின் போஒர் அன்ன என்
செறிவளை உடைத்தலோ இலனே; உரிதினின்
யாம் தன் பகையேம் அல்லேம்; சேர்ந்தோர்
திரு நுதல் பசப்ப நீங்கும்
கொழுநனும் சாலும் தன் உடன்உறை பகையே.

*– பரணர் அக 186*

*வலிய தூண்டில் கயிற்றை உடைய மீன் பிடிப்பவர் மழை பெய்தலை விரும்பாதவர்; வறுமையில்லாத வாழ்வை உடையவர். அவர்கள் தூண்டிலில் கோத்த இரையை மீன் பற்றிக் கொண்டதை உணர்ந்து தூண்டிலை இழுப்பர். இத்தகைய இயல்பு கொண்ட நீர்நிலை. அதில் தழைத்த தாமரையின் நீர் மீது உயர்ந்த நீண்ட காம்பை உடைய அகல மான இலையை உடைய பெரிய குளம்; அலையக் காற்று வீசும் போதெல்லாம் பெரிய ஆண் யானையின் காது போல் அசையும். இத்தகு இயல்புடைய ஊரன். அவனால் எனக்கு எழுந்த அலரோ பெரிது. என்றாலும், அத்தகையவனது நட்போ செழிப்பான கொறுக்கங் கழியால் ஆன தெப்பத்தைத் துணையாய்க் கொண்டு நீரில் விளையாடுகின்ற நட்பின் அளவினதே யாகும்.*

*அத் தலைவனோ தொடியைக் கொண்ட மகளிர் பழைய யாழினை வருடிப் பாடவும் முழவைத் தடியால் அடிக்கவும்,*

குளிர்ந்த நறுமணம் உடைய சந்தனம் மணக்கும் தோளைத் தழுவி இன்னும் வேறொரு பரத்தையின் இல்லிலே உள்ளான். அவன் அப்படியிருக்கவும், அவனுடைய மனைவி 'தலைவன் அவளை விட்டமைக்கு நானே காரணம்' என்று எண்ணி எம்மைப் பழி தூற்றுகின்றாள் என்று கூறுகின்றனர்.

வெற்றியுடைய வேலையும் மழைத்துளி போல் மிக்க அம்பினையும் முகில் போன்ற கரிய கேடகத்தையும் பெற்றவன் பழையன். அவனது காவிரி நாட்டில் உள்ள வைக்கோல் போர்போல் என் கைகளில் செறிந்த என் வளையலை உரிமையால் உடைக்கவும் இல்லை. எனவே -

காமக் கிழத்தியான யான் மனைக்கிழத்தியான தலைவிக்குப் பகை உடையேன் அல்லேன். தன்னைச் சேர்ந்தவரின் அழகிய நெற்றி பசலை உண்டாக அவர்களை நீங்கும் அவளுடைய கணவனே அவளுக்குப் பகையாவதற்குப் பொருத்தமாவர். ஆதலால், தலைவி என்னுடன் புலத்தலுக்குக் காரணம் அவளது அறியாமையே ஆகும் என்று பரத்தை உரைத்தாள்.

## 202. நெருங்காதீர் எம்மை!

நெடுங் கொடி நுடங்கும் நறவு மலி பாக்கத்து,
நாள் துறைப்பட்ட மோட்டு இரு வராஅல்
துடிக்கண் கொழுங் குறை நொடுத்து, உண்டு ஆடி,
வேட்டம் மறந்து, துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி
ஆம்பல் அகல் இலை, அமலை வெஞ் சோறு
தீம் புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து,
விடியல் வைகறை இடூஉம் ஊர!
தொடுகலம்; குறுக வாரல் – தந்தை
கண் கவின் அழித்ததன் தப்பல், தெறுவர,
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்று முரண் போகிய,
கடுந் தேர்த் திதியன் அழுந்தைக், கொடுங் குழை
அன்னிமிஞிலியின் இயலும்
நின் நலத் தகுவியை முங்கியே மார்பே. — பரணர் அக 196

நீண்ட கொடிகள் அசையும் கள் மிக்க பாக்கம். அதில் விடியற்காலை வேட்டையில் அகப்பட்ட பெரிய வயிற்றை உடைய வரால் மீனின் துடியினது கண் போன்ற வலிய

துண்டத்தை அறுத்து விற்றுக் கள்ளுண்டு ஆடி, மீண்டும் வேட்டையாடச் செல்வதை மறந்து உறங்கிக் கிடப்பர் கணவர் மார். அவர்களுக்கு அவர்களின் மனைவியரான பாண் மகளிர் ஆம்பலின் அகலமான இலையில் விரும்பத்தக்க சோற்றைப் பிரம்பினது இனிய பழத்தால் ஆன புளிக் கறியைப் பெய்து இடுவர். இத்தகைய இயல்பு வாய்ந்த ஊரனே!

தன் தந்தையின், கண் அழகு கெடும்படி செய்த தவற்றுக் காக, அழுந்தூரில் வாழும் விரைவாக ஓடும் தேரை யுடைய திதியன் என்பவனைக் கொண்டு, நெடு மொழியை யுடைய கோசர் என்பவர்களைக் கொன்று பகைமை தீர்ந்தாள் அன்னி மிஞிலி. அவளைப் போல் தான் விரும்பிய படி நடக்கின்ற உன் அழகுக்குப் பொருந்திய பரத்தையைத் தழுவிய நின் மார்பை யாம் தீண்டோம். ஆதலால் எம்மை நெருங்கி வராதே! என்று பரத்தையைப் பிரிந்து வந்த தலைவனிடம் தலைவி அன்பின் வெறுப்பால் கூறினாள்.

## 203. என்னென்பேன் இவள் கூற்றை

என் எனப் படும்கொல் – தோழி! நல் மகிழ்ப்
பேடிப் பெண்கொண்டு ஆடுகை கடுப்ப,
நகுவரப் பணைத்த திரி மருப்பு எருமை
மயிர்க் கவின் கொண்ட மாத் தோல் இரும் புறம்
சிறு தொழில் மகாஅர் ஏறிச், சேணோர்க்குத்
துறுகல் மந்தியில் தோன்றும் ஊரன்,
மாரி ஈங்கை மாத் தளிர் அன்ன
அம் மா மேனி, ஆய்இழை மகளிர்
ஆரம் தாங்கிய அலர்முலை ஆகத்து
ஆராக் காதலொடு தார் இடை குழைய,
முழவு முகம் புலரா விழவுடை வியல் நகர்
வதுவை மேவலன்ஆகலின், அது புலந்து
அடுபோர் வேளிர் வீரை முன்துறை,
நெடு வெள் உப்பின் நிரம்பாக் குப்பை,
பெரும் பெயற்கு உருகி யாஅங்கு,
திருந்துஇழை நெகிழ்ந்தன, தட மென் தோளே!

*– மதுரை மருதனின் நாகனார் அக 206*

என் தோழியே! நல்ல கள்ளுண்ட களிப்புடனே பேடி, பெண் வடிவம் கொண்டு ஆடுபவளது பின் சென்று மேல் வளைந்த கையைப் போல் விளங்கும் பெருத்த முறுக்குண்ட கொம்பைப் பெற்ற எருமை அதன் கரிய தோலினை உடைய பெரிய முதுகின் மீது சிறிய செயலைச் செய்யும் சிறுவர்கள் ஏறி அமர்வர். அத் தோற்றம் தொலைவில் உள்ளவர்க்கு உருண்டை யான கல்லின் மீது அமர்ந்த குரங்கு போல் காணப்படும். இவ் இயல்பு வாய்ந்த ஊரை உடையவன் நம் தலைவன். அவன் -

மாரிக்காலத்து ஈங்கைச் செடியில் தோன்றும் சிறந்த தளிர் போன்ற அழகான மாந்துளிர் போன்ற நிறத்தை யுடைய மேனியையும் ஆராய்ந்தெடுத்த அணியையும் உடைய பரத்தை அவளது முத்துமாலை அணிந்த பரந்த முலையை உடைய மார்பில் மிக்க காதலுடன் மலர் மாலை இடைப் பட்டுக் குழைய முழவின் ஒலி ஓய்தலிலாத விழாவுடைய பெரிய மணம் செய்து கொள்வதில் விருப்பம் உடையவன்.

ஆதலால் அச் செயலை வெறுத்து போரை வெல்ல வேளிர்களுக்கு உரிய 'வீரை' என்ற இடத்தில் உள்ள துறை யின் முன்னிடத்தில் நீள்மாகக் குவிந்து கிடக்கும் வெள்ளை உப்பின் அளவற்ற குவியல் பெருமழையால் கரைந்தது போல் என் பெரிய மென்மையான தோள்கள் மெலிந்து வளைகள் நெகிழ்ந்தன. என் நிலை இப்படியாகின்றது! ஆக நீ ஊடல் நீங்கித் தலைவனை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறும் இந்த விறலியின் சொல்லை நாம் என்ன வென்று கூறுவது? என்று வாயில் வேண்டிச் சென்ற விறலிக்கு தலைவி வாயில் மறுத்தாள்.

## 204. துன்பமடையச் செய்வேன் தலைவியை

'நாண் கொள் நுண் கோலின் மீன் கொள் பாண் மகள்-
தான் புனல் அடைகரைப் படுத்த வராஅல்,
நார் அரி நறவு உண்டு இருந்த தந்தைக்கு
வஞ்சி விறகின் சுட்டு வாய் உறுக்கும்
தண் துறை ஊரன் பெண்டிர் எம்மைப்
பெட்டாங்கு மொழிப' என்ப; அவ் அலர்ப்
பட்டனம் ஆயின், இனி எவன் ஆகியர்;

கடல் ஆடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி உழவர் குற்ற குவளையும்,
கடி மிளைப் புறவின் பூத்த முல்லையொடு,
பல் இளங் கோசர் கண்ணி அயரும்,
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்
எறிவிடத்து உலையாச் செறி சுரை வெள் வேல்
ஆதன் எழினி அருறத்து அழுத்திய
பெருங் களிற்று எவ்வம் போல,
வருந்துபர்மாது, அவர் சேரி யாம் செலினே.

*– ஐயூர் முடவனார் அக 216*

*கயிற்றையுடைய தூண்டிற்கோலால் மீனைப் பிடிப்பாள் பாணர் மகள். அவள் நீருடை கரையில் இழுத்துப் போட்ட வரால் மீனைப் பன்னாடையால் வடி கட்டிய கள்ளைக் குடித்து மயங்கியிருந்த தன் தந்தைக்கு வஞ்சி மரத்தின் விறகால் சுட்டு வாயில் ஊட்டுவாள். இத்தகைய இயல்பு உடைய குளிர்ந்த நீராடும் துறையை உடைய தலைவனின் மனைவியர், குற்றம் அற்ற என்னைத் தாம் விரும்பியபடி எல்லாம் பழி தூற்றுகின்றாள் என்று கூறுகின்றனர். அத் தகைய பழிக்கு நாம் ஆளாகி விட்டோம் என்றால் இனி யாது நிகழ்ந்தாலும் நிகழ்க என்று அவர்க்குச் செய்யத் தக்கதைச் செய்தே ஆக வேண்டும். அவர் வாழ்கின்ற சேரி இடத்தே அவர் காணும்படி யாம் செல்வோமென்றால் அவர் வருந்த அதுவே போதும். கடலில் ஆடும் பெண்டிர் கொய்து வந்த புலிநகக் கொன்றை மலரையும், வயலில் உழவர் பறித்து வந்த குவளை மலரையும், காவற் காட்டை யுடைய முல்லை நிலத்தே பூத்த முல்லைப் பூவுடன் சேர்த்துப் பல இளைய கோசர்கள் மாலையாய்க் கட்டி விளையாடுவார்கள். அத்தகைய வளத்தையும் புதிய வரு வாயையும் கொண்ட 'செல்லூர்'த் தலைவன் ஆன 'ஆதன் எழினி' என்பான் பகைவர் மீது எறியும் போது சிதையாத கரையைப் பெற்ற வெண்மையான வேல் மார்பில் பாய்ச்சப் பெற்ற ஆண் யானையின் துன்பத்தைப் போன்று வருத்தம் அடைவர். என்று தலைவன் உறவினர் கேட்டிடப் பரத்தை தன் பாங்காயினாராயிடம் சொன்னாள்.*

## 205. தலைவியின் நீங்காத ஊடல்

உணர்குவென் அல்லென்; உரையல் நின் மாயம்
நாண் இலை மன்ற – யாணர் ஊர!
அகலுள் ஆங்கண், அம் பகை மடிவைக்
குறுந் தொடி, மகளிர் குரூஉப் புனல் முனையின்,
பழனப் பைஞ் சாய் கொழுதிக் கழனிக்
கரந்தை அம் செறுவின் வெண் குருகு ஓப்பும்,
வல் வில் எறுழ்த் தோள், பரதவர் கோமான்,
பல் வேல் மத்தி, கழாஅர் முன்துறை,
நெடு வெண் மருதொடு வஞ்சி சாஅய,
விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடி அணி முன்கை நீ வெய்யாளொடு
முன் நாள் ஆடிய கவ்வை இந் நாள்
வலி மிகும் முன்பின் பாணனொடு, மலி தார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாள் – அவைப்
பாடு இன் தெண் கிணைப் பாடு கேட்டு அஞ்சிப்,
போர்அடு தானைக் கட்டி
பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே. – *பரணர் அக 226*

*புதிய வருவாயை உடைய ஊரனே, நீ பொய்யான சொற்களை என்னிடம் சொல்லாதே. நான் அவற்றை ஏற்றுக் கொள்ளேன். மெய்யாக நீ நாணம் அற்றவன்!*

*அகன்ற ஊரில், அழகிய பகுப்பைக் கொண்ட தழை உடையையும், சிறிய வளையலையும் உடைய மகளிர் நீர் விளையாட்டை வெறுப்பின், நீர் நிலையில் உள்ள கோரை களைப் பறித்துக் கழனியாகிய கரந்தைக் கொடி படர்ந்த வயல்களிலே இரையைத் தேடும் நாரையை ஓட்டுவர். அத் தகைய இடமான, வலிய வில் பொருந்திய வலிய தோள்களை யுடைய பரதவரின் தலைவன் 'மத்திய' என்பான். அவனது கழார் என்ற ஊரில் அமைந்த துறையில், நீண்ட வெண்மை யான மருத மரத்துடன் வஞ்சி மரத்தையும் சாய்த்து விடியற் காலையில் பெருகி வந்த வெள்ளத்தை உற்ற காவிரியாற்றில், வளையலை அணிந்த நின்னால் விரும்பப் பட்ட பரத்தை யுடன் நீ நேற்று விளையாடினாய். அதனால் எழுந்தது அலர்.*

அது, இன்று ஆற்றல் மிக்க வன்மை யுடைய பாணன் என்பவனுடன் கூடிப் போரிடுதலில் வல்ல படையைப் பெற்ற 'கட்டி' என்பான் போரிட வந்து, 'வெளியன்' தித்தன் என்பவனின் அவையிலே உண்டான இனிய ஓசையுடைய கிணைப் பறையினது ஒலியைக் கேட்டு, அவனது பெருமையை உணர்ந்து, அஞ்சிப் போர் செய்யாது ஓடியபோது எழுந்த ஆரவாரத்தை விடப் பெரியதாகும், என்று தலைவனைத் தோழி வாயில் மறுத்தாள்.

## 206. ஊடாமைக்குக் காரணம்

மணி மருள் மலர முள்ளி அமன்ற,
துணி நீர், இலஞ்சிக் கொண்ட பெரு மீன்
அரி நிறக் கொழுங் குறை வௌவினர் மாந்தி,
வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை,
இடை நிலம் நெரிதரும் நெடுங் கதிர்ப் பல்சூட்டுப்
பனி படு சாய்ப் புறம் பரிப்பக் கழனிக்
கருங் கோட்டு மாஅத்து அலங்கு சினைப் புதுப்பூ
மயங்குமழைத் துவலையின் தாஅம் ஊரன்
காமம் பெருமை அறியேன், நன்றும்
உய்ந்தனென் வாழி, தோழி! அல்கல்
அணி கிளர் சாந்தின் அம் பட்டு இமைப்பக்
கொடுங் குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை
அறியாமையின் அழிந்த நெஞ்சின்
'ஏற்று இயல் எழில் நடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டுஇருஞ் சுரியல் மணந்த பித்தை,
ஆட்டன்அத்தியைக் காணீ ரோ?' என
நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின்
'கடல்கொண்டன்று'எனப் 'புனல் ஒளித்தன்று' எனக்
கலுழ்ந்த கண்ணள், காதலற் கெடுத்த
ஆதி மந்தி போல
ஏதம் சொல்லிப் பேதுபெரிது உறலே. — பரணர் அக 236

தோழியே, வாழ்க! வெண்மையான நெல்லை அறுப்பவர் நீலமணியைப் போன்ற மலர்களைக் கொண்ட நீர் முள்ளிச் செடி நிறைந்த தெளிந்த நீரையுடைய மடுவில் கவர்ந்த பெரிய

மீனின் வளவிய துண்டைக் கவர்ந்து உண்டு விட்டுப் போன இடமாகிய களம். அதில் பின்பு அவர்கள் கொண்டுவந்து இட்ட வெற்றிடம் இல்லாது செறிந்த நீண்ட கதிரையுடைய நெற்கட்டுகள் உள்ள பனியால் நனைந்த பக்கங்கள் தாங்கும் படி, கழனியின் வரம்பின் மேல் நின்ற மாமரத்தின் கொம்பு களில் மலர்ந்த புதிய பூக்கள் மழைத்துளியைப் போல் பரவிக் கிடக்கும் ஊரன் நம் தலைவன். அவனுடைய காமத்தின் சிறப்பை அறியாதவள் ஆனேன் நான்.

இரவில் அழகுடன் விளங்கும் சாந்துடன் அழகிய பட்டாடை ஒளி செய்ய, வளைவான காதணி அணிந்த மகளிரைப் போல் நம் தலைவன் நாணத்துடன் இருந்த இருப்பைப் பார்த்து என் மடமையால் உருகிய நெஞ்சினேன் ஆனேன்.

ஆனதால் தன் கணவனை இழந்ததால் அழுத கண்களை உடைய 'ஆதிமந்தி'யைப் போன்று, காளைபோன்ற எழுச்சி யுடைய நடையையும் பொலிவான தோளையும் தொகுதி யான கரிய சுருள் கொண்ட தலைமயிரினையும் பெற்ற 'ஆட்டன் அத்தி' என்ற தலைவனைக் கண்டீரோ?' என்று நாடெல்லாம், ஊரெல்லாம் போய் 'என் தலைவனைக் கடல் கொண்டு ஒளித்தத போலும்' 'நீர் கொண்டு ஒளித்தது போலும்' என்று சொல்லி என் துன்பத்தைப் பலரும் அறியச் சொல்லி தேடிப் போய் மயங்குவதனின்றும் பெரிதும் தப்பினேன் என்று ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைவன் நீங்கியபோது பின் புகுந்த தோழியிடம் தலைவி கூறினாள்.

## 207. நின் ஊடலைப் போக்க இயலாது

பிணர் மோட்டு நந்தின் பேழ் வாய் ஏற்றை
கதிர் மூக்கு ஆரல் களவன் ஆக,
நெடு நீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்
மலி நீர், அகல் வயல் யாணர் ஊர!
போது ஆர் கூந்தல் நீ வெய்யோளொடு
தாது ஆர் காஞ்சித் தண் பொழில் அகல் யாறு
ஆடினை என்ப, நெருநை; அலரே

காய் சின மொய்ம்பின் பெரும் பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணிவாயில்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழ் இசை முரசம் பொரு களத்து ஒழிய,
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய,
மொய் வலி அறுத்த ஞான்றைத்,
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே.

**– பரணர் அக 246**

*பொருக்கையுடைய வயிற்றையும் பிளந்த வாயையும் உடைய ஆண்சங்கு. அது ஆரல் மீன் கரி கூறுபவனாக விளங்க, ஆழ்ந்த நீரை யுடைய பொய்கையில் பெண் சங்குடன் மணம் கொள்ளும். இத் தன்மையான நீர் நிறைந்த அகன்ற வயல்களை யுடைய புதிய வருவாய் மிக்க ஊரை உடையவனே!*

*மலர்கள் நிறைந்த கூந்தலைக் கொண்ட உன்னால் விரும்பப் பட்ட பரத்தையுடனே பூந்துகள் மிக்க காஞ்சி மரச் சோலை சூழ்ந்த அகன்ற ஆற்றில், நேற்று நீ விளை யாடினாய் என்று பலரும் உரைக்கின்றனர். அங்ஙனம் நீ பரத்தையுடன் விளையாடியதால் எழுந்த அலர், மிக்க சினமும் வலியும் கொண்ட பெரும்புகழ் பொருந்திய கரிகால் வளவன், ஆரவாரிக்கும் கள் வளம் வாய்ந்த 'வெண்ணி வாயில்' என்று மிடத்தே, சிறப்புடைய பகை மன்னர் பகை கொண்டு எழுந்த போரில், மிக்க ஒலி பெற்ற வீரமுரசம் போர்க் களத்தில் கிடக்க, வேளிர் பன்னிருவருடன் இருபெரு வேந்தரும் நிலை கெட, அவர்களின் வலிமையைக் கெடுத்த நாளில், 'அழுந்தூரில்' எழுந்த குறையாத ஆரவாரத்தை விடப் பெரியதாய் உள்ளது, எனத் தோழி தலைவனை வாயில் மறுத்தாள்.*

## 208. நீ உன்னவளுடன் வையையாற்றில் திளைத்தாய்

பிணங்கு அரில் வள்ளை நீடு இலைப் பொதும்பில்
மடி துயில் முனைஇய வள் உகிர் யாமை
நொடி விடு கல்லின் போகி அகன்துறைப்

பகுவாய் நிறைய, நுங்கின் கள்ளின்
நுகர்வார் அருந்து மகிழ்பு இயங்கு நடையொடு
தீம் பெரும் பழனம் உழக்கி, அயலது
ஆம்பல் மெல் அடை ஒடுங்கும் ஊர!
பொய்யால்; அறிவென் நின் மாயம். அதுவே
கையகப்பட்டமை அறியாய்; நெருநை
மை எழில் உண்கண் மடந்தையொடு வையை
ஏர் தரு புதுப்புனல் உரிதினின் நுகர்ந்து,
பரத்தை ஆயம் கரப்பவும், ஒல்லாது
கவ்வை ஆகின்றால், பெரிதே; காண்தகத்
தொல் புகழ் நிறைந்த பல் பூங் கழனி,
கரும்பு அமல் படப்பை, பெரும் பெயர்க் கள்ளூர்,
திரு நுதற் குறுமகள் அணி நலம் வவ்விய
அறனிலாளன், 'அறியேன்' என்ற
திறன் இல் வெஞ் சூள் அறி கரி கடாஅய்,
முறி ஆர் பெருங் கிளை செறியப் பற்றி,
நீறு தலைப்பெய்த ஞான்றை,
வீறு சால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே.

*– மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார் அக 256*

*ஒன்றுடன் ஒன்று பின்னிய தூறுகளைக் கொண்ட வள்ளைக் கொடியின் நீண்ட இலைச் செறிவு. அதில் மடிந்து கிடக்கும் உறக்கத்தை வெறுத்த வன்மையான நகத்தையுடைய ஆமை. அஃது ஒலித்தல் செய்யும் பரற்களின் வழியே போய் அகன்ற நீர்த்துறையில் தன் பிளவுபட்டவாய் நிறைந்த பனங் கள் ஒழுக்கினின் பெருக்கை உண்ட களிப்புடன் செல்லும் நடையுடன் வயல்களைக் கலக்கும். பின் அதன் பக்கத்தில் உள்ள ஆம்பலின் மென்மையான இலைக்குள் ஒடுங்கிக் கிடக்கும். இவ் இயல்பு பொருந்திய நாட்டை யுடையவனே!*

*' நீ பொய் சொல்லாதே, உன் வஞ்சத்தை நான் நன்றாக அறிவேன். உன் பரத்தைமை வெளிப்பட்டதை நீ அறிய மாட்டாய். நேற்று மை பூசப்பட்ட கண்களை உடைய பரத்தையுடன் வையை ஆற்றின் அழகுமிக்க புதிய நீரில் உரிமையுடன் இன்பம் நுகர்ந்தனை! அதனைப் பரத்தையர் கூட்டம் ஊரார் அறியாமல் மறைத்தனர். ஆயினும் அது*

மறைக்க முடியாமல் மிகவும் அலராக எழுகின்றது! அழகு விளங்கப் பழமையான புகழ் மிக்க பல வகையான மலர்கள் நிறைந்த வயல்களையும் கரும்புகள் மிக்க தோட்டங்களையும் கொண்ட மிக்க சிறப்புடைய கள்ளூர் என்ற ஊர். அதில் -

அறநெறி நில்லாத ஒருவன் அழகிய நெற்றியை யுடைய இளையவள் ஒருத்தியின் நலத்தைக் கவர்ந்து உண்டான். பின் அவளை நான் அறியேன் என்று கொடிய சூளுரைத் தான். அதன் மெய்மையை, அவர்களின் களவு ஒழுக்கத்தை உணர்ந்த சான்றாவாரை வினவி உண்மையை உணர்ந்தனர். அவனை அவையத்தார் தளிர்கள் பொருந்திய மரத்தின் கிளையில் இறுகப் பிணித்துச் சுண்ணாம்பு நீற்றினைத் தலை யில் பெய்தனர். அப்போது அந்தச் சிறப்பு மிக்க அவையில் எழுந்த ஆரவாரத்தைவிட உன்னால் எழுந்த அலர் பெரி தாய் உள்ளது, என்று தோழி தலைவனை வாயில் மறுத்தாள்.

## 209. சூள் பொய்த்தது அஞ்சுகின்றேன்

கோடுற நிவந்த நீடு இரும் பரப்பின்
அந் தீதிப் பராஅய்ப் புதுப்புனல், நெருநை,
மைந்து மலி களிற்றின் தலைப் புணை தழீஇ,
நரந்தம் நாறும் குவை இருங் கூந்தல்
இளந் துணை மகளிரொடு ஈர்அணிக் கலைஇ,
நீர்பெயர்ந்து ஆடிய ஏந்து எழில் மழைக் கண்
நோக்குதொறும் நோக்குதொறும் தவிர்விலையாகி
காமம் கைம்மிகச் சிறத்தலின், நாண் இழந்து
ஆடினை என்ப – மகிழ்ந! அதுவே
யாழ் இசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய் வாள் எவ்வி ஏவல் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும் பூண் பொருந்தலர்
அரிமணவாயில் உறத்தூர் ஆங்கண்,
கள்ளுடைப் பெருஞ் சோற்று எல் இமிழ் அன்ன,
கவ்வை ஆகின்றால் பெரிதே; இனி அஃது
அவலம் அன்றுமன் எமக்கே; அயல
கழனி உழவர் கலி சிறந்து எடுத்த
கறங்கு இசை வெரீஇப் பறந்த தோகை

அணங்குடை வரைப்பகம் பொலியவந்து இறுக்கும்
திருமணி விளக்கின் அலைவாய்ச்
செரு மிகு சேஎயொடு உற்ற சூளே! — *பரணர் அக 266*

*“தலைவனே, நேற்று, கரையின் உச்சி வரை உயர்ந்த பெரிய பரப்பையுடைய அழகிய இனிய மனத்துக்கு விருப்ப மான புதுநீர் வெள்ளத்தில் வலிமை மிக்க ஆண் யானை யைப் போல் தெப்பத்தின் தலைப்புறத்தைப் பற்றி நின் துணையான மகளிருடன் நரந்தம் புல்லின் மணம் வீசும் கரிய கூந்தலை யுடைய நீர் விளையாட்டுக்குரிய அணிகளை அணிந்து, நீரில் புடை பெயர்ந்து விளையாடி அம் மகளிரின் மிக்க அழகை யுடைய கண்கள் உன்னைப் பார்க்குந்தோறும், நீ விருப்பம் தவிராயாகிக் காமம் அளவு கடந்து மிகுதலால் நாணத்தை இழந்து விளையாடினனை என்று கூறுவர்.*

*அச் செயல்தான், யாழ் இசை ஒலிக்கும் தெருக்களை யுடைய நீடூரின் தலைவன் வாள் வெற்றியுடைய ‘எவ்வி’ என்பான். தன் ஏவுதலை ஏற்றுக் கொள்ளாதவரான பசுமை யான பொன் அணி பூண்ட பகைவரின் மிக்க வன்மையைக் கெடுத்த ‘அரிமணவாயில் உறத்தூர்’ என்ற அங்கு அந்த மன்னன் அளித்த கள்ளுடன் கூடிய பெருஞ்சோறு வழங்கி னான். அந்தப் பகற்பொழுதில் அங்கே ஆரவாரம் உண்டா கியது. அது போல் மிகப் பெரிதான அலராக ஆகியது.*

*இப்போது அச் செயல் எனக்குத் துன்பத்தைத் தர வில்லை. பக்கத்தில் உள்ள வயலில் உழுபவர் செருக்கு மிக்கு எழுப்பிய ஒலிக்கும் ஆரவாரத்தை அஞ்சிப் பறந்து போன மயில், தெய்வத்தையுடைய குன்றில் வந்து தங்கும் இயல் புடைய அழகிய மணிவிளக்கு ஒளிரும் திருச்சீரலைவாயிலில் வீற்றிருக்கின்ற போர் வலிமை மிக்க முருகப்பெருமானுடன் பொருந்திச் செய்த சூளுறவே பெரிதும் துன்பத்தைத் தரு கின்றது” என்று பரத்தையிற் பிரிந்து வந்து கூடிய தலை வனிடம் தலைவி கூறினாள்.*

## 210. சிறைப்படுத்துவேன் மார்பை

நீர் இரும் பொய்கை இரை வேட்டு எழுந்த
வாளை வெண் போத்து உணீஇய, நாரை தன்

அடி அறிவுறுதல் அஞ்சி, பைப்பயக்
கடி இலம் புகூஉம் கள்வன் போலச்,
சாஅய் ஒதுங்கும் துறைகேழ் ஊரனொடு
ஆவது ஆக! இனி நாண் உண்டோ?
வருகதில் அம்ம, எம் சேரி சேர!
அரி வேய் உண்கண் அவன் பெண்டிர் காணத்,
தாரும் தானையும் பற்றி, ஆரியர்
பிடி பயின்று தரூஉம் பெருங்களிறு போலத்,
தோள் கந்தாகக் கூந்தலின் பிணித்து அவன்
மார்பு கடி கொள்ளேன் ஆயின், ஆர்வுற்று
இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படாது ஆகி,
வருந்துகதில்லயாய் ஓம்பிய நலனே! – *பரணர் அக 276*

*நீண்ட பெரிய நீர்நிலையில் இரை தேடுதலை விரும்பிப் புறப்பட்ட வாளையான ஆண் மீனைப் பிடித்துத் தின்பதற்கு நாரையானது தன் காலின் ஒலியை அந்த மீன் அறிந்து கொள்ளலை அஞ்சி, மெல்ல மெல்ல, காவல் மிக்க வீட்டில் புகும் கள்வனைப் போன்று தளர்ந்து நடக்கும். இத்தகைய இடமான துறை பொருந்திய ஊரனால் நமக்கு உண்டாகும் பழி உண்டாகுக. இனிமேல் நமக்கு நாணம் என்பதும் உண்டோ?*

*அவன் நம் சேரியில் பொருந்த வருவானாகுக. செவ் வரி பொருந்திய மை பூசப்பெற்ற கண்களைக் கொண்ட அவனுடைய பெண்டிர் காண, அவனின் மாலையையும் ஆடையையும் பிடித்துக் கொண்டு, ஆரியர் பழக்கி வைத் துள்ள பெண் யானை கொணரும் ஆண் யானையைப் போல் என் தோள் கட்டுத்தறியாக என் கூந்தலான கயிற்றால் கட்டி என் மார்பான கொட்டிலில் சிறை செய்வேன்.*

*அப்படிச் செய்யாது போனால், என் தாய் பாதுகாத்து வளர்த்த என் அழகானது பொருளை விரும்பி இரந்து வந்தவர்க்கு ஈயாமல் சேர்த்து வைத்தவனது பொருளைப் போல் வெளிப்பட்டுத் துன்பப்பட்டு ஒழிக! இதுவே எனது விருப்பம், என்று தலைவனின் பங்கிருப்பவர் கேட்பத் பரத்தை கூறினாள்.*

## 211. பொய் தோன்றின் உண்மை எங்கு உளதாம்?

வெள்ளி விழுத் தொடி மென் கருப்பு உலக்கை,
வள்ளி நுண் இடை வயின் வயின் நுடங்க,
மீன் சினை அன்ன வெண் மணல் குவைஇ,
காஞ்சி நீழல், தமர் வளம் பாடி,
ஊர்க் குறுமகளிர் குறுவழி, விறந்த
இறாஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ் சினை உறங்கும் தண் துறை ஊர!
விழையா உள்ளம் விழையும் ஆயினும்,
என்றும், கேட்டவை தோட்டி ஆக மீட்டு ஆங்கு,
அறனும் பொருளும் வழாமை நாடி
தன் தகவு உடைமை நோக்கி, மற்று அதன்
பின் ஆகும்மே, முன்னியது முடித்தல்,
அனைய, பெரியோர் ஒழுக்கம், அதனால்
அரிய பெரியோர்த் தெரியுங் காலை,
நும்மோர் அன்னோர் மாட்டும், இன்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்,
மெய் யாண்டு உளதோ, இவ் உலகத்தானே?

*– ஓரம்போகியார் அக 286*

*ஊரில் உள்ள பேதைப் பருவ மங்கையர், மென்மையான கரும்பை வெண்மையான சிறந்த பூண் பூண்ட உலக்கை யாகக் கொண்டு கொடியைப் போன்ற சிறிய இடையானது முன்னும் பின்னும் அசையும்படி மீன் முட்டைகளைப் போன்ற வெண்மையான மணலைக் குவித்துக் கொண்டு காஞ்சி மரத்தின் நிழலில் தம் சுற்றத்தாரின் செல்வப் பெருக்கினைப் புகழ்ந்து பாடிக் கொண்டு விளையாடுவர். அப்போது இறால் மீனைத் தின்ற மீன்கொத்திப் பறவை மருதமரத்தின் தாழ்ந்த கிளைகளில் அப் பாடலைக் கேட்டு உறங்கும். இத்தன்மை பொருந்திய குளிர்ந்த நீராடும் துறையை உடைய தலைவனே!*

*எப்போதும் எதனையும் விரும்பாத பெருந்தன்மை பெற்ற தம் உள்ளமானது ஒரேவழி மயங்கி ஒன்றை விரும்பு மாயினும், நாள்தோறும் தாம் கேட்ட அறிவுரைகளைத்*

தோட்டியாகக் கொண்டு, உள்ளம் என்ற யானையைத் தடுத்து நிறுத்தி, அறமும் பொருளும் வழுவாமையை ஆராய்ந்து, தம் தகுதி மிக்கமையை உணர்ந்து, அதன் பின்பே தாம் கருதியதை முடிப்பது உளதாகும். பெரியோர் ஒழுக்கங்கள் அத்தகைய தன்மை கொண்டனவாம். அதனால், அரியவற்றைச் செய்யும் பெரியோர் செயல்களை ஆராயுமிடத்து உம்மை ஒத்த பெரியோரிடத்தும் இத்தகைய பொய்யுடன் கூடிய மொழிகள் தோன்றுமானால் இவ் உலகத்தில் மெய் எங்கு உளதாகும்? யான் அறியேன், என்று மணப்பேன் என்று நீங்கும் தலைவன், தலைவியைக் காத்துக் கொள்ள வேண்டும் தோழியைக் கைப்பற்றியவனுக்குத் தனக்குச் சூளுரைத்ததாகக் கருதி தோழி சொன்னாள்.

## 212. என்னால் இயலாது தலைவியின் சினம் போக்க

கோதை இணர, குறுங்கால், காஞ்சிப்
போது அவிழ் நறுந் தாது அணிந்த கூந்தல்,
அரி மதர் மழைக் கண், மாஅயோளொடு
நெருநையும் கமழ் பொழில் துஞ்சி இன்றும்,
பெரு நீர் வையை அவளொடு ஆடிப்,
புலரா மார்பினை வந்து நின்று, எம்வயின்
கரத்தல் கூடுமோ மற்றே? பரப்பில்
பல் மீன் கொள்பவர் முகந்த இப்பி
நார் அரி நறவின் மகிழ் நொடைக் கூட்டும்
பேர் இசைக் கொற்கைப் பொருநன், வென் வேல்
கடும் பகட்டு யானை நெடுந் தேர்ச் செழியன்,
மலை புரை நெடு நகர்க் கூடல் நீடிய
மலிதரு கம்பலை போல,
அலர் ஆகின்று, அது பலர் வாய்ப் பாட்டே.

*– மதுரைப் பேராலவாயர் அக 296*

*மாலையைப் போன்ற பூங் கொத்துகளையுடைய சிறிய அடியுடைய காஞ்சி மரத்தின் மலரின் பூந்துகளை அணிந்த கூந்தலையும், சிவந்த வரி பரவிய மதர்த்த கண்களையும் உடைய மா நிறத்தையுடைய பரத்தை, அவளுடன் நேற்றும்*

மணம் கமழும் சோலையில் துயின்று, இன்றும் அப் பரத்தையுடன் வையை நீர் வெள்ளத்தில் விளையாடி, ஈரம் உலராத மார்பை உடையையாய் என்னிடம் வந்து நின்று வேண்டுகின்றனை, நீ செய்த இப் பழிச் செயலை எமக்கு மறைத்தல் கூடுமோ? இயலாது!

கடல்நீர்ப் பரப்பில் பல மீன்களைப் பிடிப்பவர் அவற்றுடன் கொண்ட சிப்பிகளைப் பன்னாடையால் அரிக்கப் பெறும் மகிழ்ச்சி தரும் கள்ளின் விலையாகத் தருவர். இத்தகைய தன்மை பெற்ற பெரும் புகழ் பொருந்திய கொற்கைத் துறைக்குத் தலைவனான வெற்றிமிக்க வேலையும் கடிய பெரிய யானையும், நெடிய தேரையும் கொண்ட பாண்டியன் நெடுஞ்செழியன் மலை போன்ற நீண்ட கோயிலையுடைய மதுரை நகரில் வெற்றிக் களிப்பால் ஆடிய போது எழுந்த ஆரவாரத்தைப் போல், உன் செயல் பலராலும் தூற்றப்படுகின்றது. எனவே தலைவியின் சினத்தை என்னால் தணிக்க இயலாது, என்று வாயில் வேண்டிச் சென்ற தலைவனிடம் தோழி வாயில் மறுத்துச் சொன்னாள்.

### 213. அகன்று போ தலைவ

பெரும் பெயர் மகிழ்ந! பேணாது அகன்மோ!
பரந்த பொய்கைப் பிரம்பொடு நீடிய
முட் கொம்பு ஈங்கைத் துய்த் தலைப் புது வீ
ஈன்ற மாத்தின் இளந் தளிர் வருட,
வார் குருகு உறங்கும் நீர் சூழ் வள வயல்
கழனிக் கரும்பின் சாய்ப் புறம் ஊர்ந்து,
பழன யாமை பசு வெயில் கொள்ளும்
நெல்லுடை மறுகின் நன்னர் ஊர!
இதுவோ மற்று நின் செம்மல்? மாண்ட
மதி ஏர் ஒள் நுதல் வயங்கு இழை ஒருத்தி –
இகழ்ந்த சொல்லும் சொல்லி, சிவந்த
ஆய் இதழ் மழைக் கண் நோய் உற நோக்கி,
தண் நறுங் கமழ் தார் பரீஇயினள், நும்மொடு
ஊடினள் – சிறு துனி செய்து எம்
மணல் பலி மறுகின் இறந்திசினோளே.

*– மதுரை கூல வாணிகன் சாத்தனார் அக 306*

'பெரும்புகழ் பொருந்திய தலைவனே! பரந்த நீர் நிலையில் உள்ள பிரம்போடு கூடி நீண்டு வளர்ந்திருக்கும் முள்ளையுடைய ஈங்கையின் பஞ்சு போன்ற துய்யினைக் கொண்ட புதிய பூவும் மா மரத்தின் தளிரும் தன்னைத் தடவுதலால் மீனையுண்ட நாரை உறங்கும். இத்தகு நீர்வளம் கொண்ட வயலில் உள்ள கழனிக் கரும்பின் சாய்ந்த பக்கத்தில் ஊர்ந்து சென்று வயலில் வாழும் ஆமை இளவெயிலில் காய்கின்ற நெற் கூடுகளையுடைய தெருக்கள் அமைந்த வளமுடைய ஊரனே!

சிறந்த வெண்சுடர் போன்ற நெற்றியையும் விளங்கும் அணியையும், உடைய நின் பரத்தையான ஒருத்தி, நின்னை இகழ்ந்த சொல்லையும் சொல்லி, அழகிய இதழையுடைய குளிர்ந்த கண்ணால் வருத்தம் மிகப் பார்த்து, நின் மார்பில் அணிந்த மணம் கமழும் மாலையையும் அறுத்து, உன்னுடன் ஊடிச் சிறு கலாம் செய்து மணல் நிறைந்த எம் தெரு வழியே சென்றாள் அல்லளோ!

இதுதான் நின் தலைமைத் தன்மையோ? எம்மை ஒரு பொருளாக எண்ணிப் போற்றாமல் அகன்று செல்வீராக? என்று தோழி தலைவனை வாயில் மறுத்தாள்.

## 214. ஊடுபவர் அறிவில்லாதவர்

'துறை மீன் வழங்கும் பெரு நீர்ப் பொய்கை,
அரி மலர் ஆம்பல் மேய்ந்த நெறி மருப்பு
ஈர்ந் தண் எருமைச் சுவல் படு முது போத்து,
தூங்கு சேற்று அள்ளல் துஞ்சி, பொழுது பட,
பைந் நிண வராஅல் குறையப் பெயர்தந்து,
குரூஉக் கொடிப் பகன்றை சூடி, மூதூர்ப்
போர் செறி மள்ளரின் புகுதரும் ஊரன்
தேர் தர வந்த, தெரிஇழை, நெகிழ் தோள்
ஊர் கொள்கல்லா, மகளிர் தரத் தர,
பரத்தைமை தாங்கலோ இலென்' என வறிது நீ
புலத்தல் ஒல்லுமோ? – மனை கெழு மடந்தை!–
அது புலந்து உறைதல் வல்லியோரே
செய்யோள் நீங்க, சில் பதம் கொழிந்து,
தாம் அட்டு உண்டு, தமியர் ஆகி,

**தே மொழிப் புதல்வர் திரங்கு முலை சுவைப்ப**
**வைகுநர் ஆகுதல் அறிந்தும்,**
**அறியார் அம்ம, அஃது உடலுமோரே!**

*– ஓரம்போகியார் அக 316*

*துறையில் மீன்கள் இயங்கும் பெரிய நீர் மிக்க பொய்கை யில் உள்ள ஆம்பல் மலரை மேய்ந்த வளைந்த கொம்பையும் குளிர்ந்த முதுகையும் உடைய முதிய எருமைக்கடா, மிக்க சேற்றுக் குழம்பில் கிடந்து இரவெல்லாம் துயிலும். பின் கதிரவன் உதித்த காலையில் பசுமையான நிணத்தைத் தின்ற வரால் மீன்கள் காலில் மிதிபட்டு அழிய வெளிப்படும் வெண்மையான பூக்களை யுடைய பகன்றைக் கொடியைச் சூடிக் கொள்ளும். பின் பழைமைமிக்க ஊரில் போரில் வெற்றி கொண்டு வருவது போன்று புகும். இத் தன்மை பெற்ற ஊரினையுடைய தலைவன்.*

*அவனது விருப்பப்படி ஏவலர் தேரில் கொணர்ந்த விளங்கும் அணிகள் நெகிழப் பெற்ற தோள்களையுடைய ஊர் தாங்காத மிக்க பரத்தையர், பரத்தமையை மேன்மேலும் தன்னிடம் அடையச் செய்ய, அதனால் பரத்தமை ஒழுக்கத்தை ஒழிவில்லாது மேற்கொண்டுள்ளான் என்று கூறி, மனை வாழ்க்கை பொருந்திய கற்புடை மங்கையான நீ பயனில்லாது அவனிடம் ஊடியிருத்தல் பொருத்தமாகுமோ?*

*தலைவன் பரத்தமையை எண்ணி ஊடிப் பிரிந்து வாழும் வன்மையுடையவர். தம்மிடத்தினின்று திருமகள் நீங்க, சிறிய அரிசியைப் புடைத்துத் தாமே சமைத்து உண்பவராய்த் தனித்தவர் ஆவர்; தேன் போலும் இனிய சொல்லை யுடைய குழவியர் பால் இல்லாது சுருங்கிய முலையைச் சுவைத்துப் பார்க்க எளிமையுடையராய் இருப்பர். இதை நன்கு அறிந்தும் தலைவனது பரத்தமை குறித்து மாறுபாட்டை அடைபவர் அறிவு அற்றவர் ஆவர், எனத் தலைவனிடம் வாயில் நேர்ந்த தோழி, தலைவியிடம் சொன்னாள்.*

## 215. போ அவளுடன் புனலாட

**ஊரல் அவ் வாய் உருத்த தித்தி,**
**பேர் அமர் மழைக் கண், பெருந் தோள், சிறு நுதல்,**

நல்லள் அம்ம, குறுமகள் – செல்வர்
கடுந் தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்
நெடுங் கொடி நுடங்கும் மட்ட வாயில்,
இருங் கதிர்க் கழனிப் பெருங் கவின் அன்ன
நலம் பாராட்டி, நடை எழில் பொலிந்து,
விழவில் செலீஇயர் வேண்டும் – வென் வேல்
இழை அணி யானைச் சோழர் மறவன்
கழை அளந்து அறியாக் காவிரிப் படப்பை,
புனல் மலி புதவின், போஒர் கிழவோன்,
பழையன் ஒக்கிய வேல் போல்,
பிழையல கண், அவள் நோக்கியோர் திறத்தே!

*– பரணர் அக 326*

*ஊரலாகிய அழகுடைய தேமலையும், பெரும் போர் செய்யும் குளிர்ந்த கண்களையும், பெருந் தோளையும், சிறிய நெற்றியையும் உடைய நின் இளம் பரத்தை அழகில் சிறந்தவள். எனவே எம் பெருமானே, பழையன் என்பான், வெற்றியுடைய வேலையும் அணிகலன் புணைந்த யானையையும் உடைய சோழ மன்னனின் படைத்தலைவன்; ஓடக்கோலால் ஆழத்தை அளந்தறியாத காவிரிக் கரையினைச் சார்ந்த தோட்டங்களை உடையவன்; நீர் நிறைந்து ஓடும் மதகுகளைப் பெற்றவன்; போஓர் என்ற ஊர்க்குத் தலைவன். அத் தகையவன் பகைவர் மீது செலுத்திய வேலைப் போல அப் பரத்தையால் பார்க்கப் பெற்றவர் அவள் கண்களால் தைக்கப்பெறுவது தவறாது.*

*செல்வரின் விரைந்து செல்லும் தேர் குழிந்த தெருக் களில் நீண்ட கொடிகள் அசையும் ‘அட்ட வாயில்’ என்னு மிடத்தே உள்ள கதிர்களைக் கொண்ட வயலின் அழகை ஒத்த அவளது அழகைப் பாராட்டி, அழகிய நடையால் விளக்கமுற்று அவளுடன் புனல் விழாவில் செல்லுதல் தக்கதேயாகும். ஆதலால் அங்குச் செல்க, என்று தோழி தலைவனின் வாயில் மறுத்தாள்.*

## 216. உடைந்து சிதறுக வளையல்கள்

குழற் கால் சேம்பின் கொழு மடல் அகல் இலைப்
பாசிப் பரப்பின் பறழொடு வதிந்த

உண்ணாப் பிணவின் உயக்கம் சொலிய,
நாள் இரை தரீஇய எழுந்த நீர் நாய்
வாளையொடு உழப்ப, துறை கலுழ்ந்தமையின்,
தெண் கட் தேறல் மாந்தி, மகளிர்
நுண் செயல் அம் குடம் இரீஇ, பண்பின்
மகிழ்நன் பரத்தைமை பாடி, அவிழ் இணர்க்
காஞ்சி நீழல் குரவை அயரும்
தீம் பெரும் பொய்கைத் துறை கேழ் ஊரன்
தேர் தர வந்த நேர் இழை மகளிர்
ஏசுப என்ப, என் நலனே; அதுவே
பாகன் நெடிது உயிர் வாழ்தல் காய் சினக்
கொல் களிற்று யானை நல்கல்மாறே;
தாமும் பிறரும் உளர்போல் சேறல்
முழவு இமில் துணங்கை தூங்கும் விழவின்
யான் அவண் வாராமாறே; வரினே வானிடைச்
சுடரொடு திரிதரும் நெருஞ்சி போல
என்னொடு திரியான் ஆயின், வென் வேல்
மாரி அம்பின் மழைத் தோற் சோழர்
வில் ஈண்டு குறும்பின் வல்லத்துப் புற மிளை,
ஆரியர் படையின் உடைக, என்
நேர் இறை முன்கை வீங்கிய வளையே!

*– பாவைக்கொட்டிலார் அக 336*

துளை பொருந்திய தண்டையுடைய சேம்பின் மடலில் உள்ள அகன்ற இலையுடன் கூடிய பாசி படர்ந்த நீர்ப் பரப்பில் குட்டியுடன் கூடியுள்ள உண்ணாமையால் வருந்திய பெண் நாயின் வருத்தத்தைப் போக்குவதற்குக் காலைப் போதில் இரையைக் கொணர்வதற்காக எழுந்தது. ஆண் நீர்ந்நாய். அது வாளை மீனைப் பற்றி அதனுடனே போரிட்டதால், உண்ணீர் கொள்ளும் நீர்த்துறையின் நீர் கலங்கிக் கிடந்தது. அதனால் நீர் கொள்ள வந்த மகளிர் தெளிந்த கள்ளைக் குடித்து நுண்ணிய தொழிற் சிறப்புடைய குடங்களை ஒரு பக்கத்தில் வைத்து விட்டுத் தம் கணவரின் பரத்தமை ஒழுக்கத்தைப் பாடிக் காஞ்சி மரத்தின் நிழலில் குரவையாடுவர். 'இனிய பெரிய பொய்கையின் துறை

பொருந்திய ஊரையுடைய தலைவன் தேர் கொண்டுவர வந்த பரத்தையரான அணிகளைப் பூண்ட மகளிர் என் அழகினை இகழ்ந்து பேசுகின்றனர் என்பர்.

அது பாகன் நீண்ட காலம் உயிருடன் வாழ்தல் மிக்க சினத்தையுடைய கொல்லும் ஆண் யானை அவனைக் கொல்லாது விட்டு வைத்தலால் நிகழ்வதாகும்.

அம் மங்கையரும் மற்றவரும் பிறரும் பெண்மை நலம் சிறந்தவர் போன்று தலைவனிடம் செல்வதற்குக் காரணம். அப் பரத்தையர் தலைவன் காண மத்தளம் முழங்கும்படி துணங்ளைக் கூத்தாடிடும் திருவிழாவில் யான் அந்த இடத்துக்கு வாராதிருத்தலே ஆகும்.

யான் அங்கு வரின் ஞாயிறு செல்லும் திசையை நோக்கித் திரிகின்ற நெருஞ்சிப் பூவைப் போல் சுவர் எல்லாம் என் அழகை நோக்கியபடியே திரியுமாறு செய்வேன். ஆனால் வெற்றி பொருந்திய வேலையும் மழை போன்ற அம்பையும் முகில் போன்ற தோல் கிடுகையும் உடைய சோழ மன்னரிடம், விற்படை பொருந்திய அரணைக் கொண்ட வல்லம் என்ற ஊரின் புறத்தே உள்ள காவற் காட்டில் வந்து அடைந்த ஆரியரின் படையைப் போல், என் நேரிய சந்தினையுடைய திரண்ட வளையல்கள் உடைந்து சிதறுவனவாகும், என்று நயப்புப் பரத்தை இற்பரத்தையிடம் பக்கம் உள்ளார் கேட்பச் சொல்லினாள்.

## 217. பெரு நகையை உண்டாக்குகிறது

நகை நன்று அம்ம தானே – இறைமிசை
மாரிச் சுதையின் ஈர்ம் புறத்து அன்ன
கூரல் கொக்கின் குறும் பறைச் சேவல்,
வெள்ளி வெண் தோடு அன்ன, கயல் குறித்து
கள் ஆர் உவகைக் கலி மகிழ் உழவர்
காஞ்சி அம் குறுந் தறி குத்தி, தீம் சுவை
மென் கழைக் கரும்பின் நன் பல மிடைந்து,
பெருஞ் செய் நெல்லின் பாசவல் பொத்தி,
வருத்திக் கொண்ட வல் வாய்க் கொடுஞ் சிறை
மீது அழி கடு நீர் நோக்கி, பைப்பயப்

பார்வல் இருக்கும் பயம் கேழ் ஊர!-
யாம் அது பேணின்றோ இலமே - நீ நின்
பண் அமை நல் யாழ்ப் பாணனொடு, விசி பிணி,
மண் ஆர், முழவின் கண் அதிர்ந்து இயம்ப,
மகிழ் துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி,
எம் மனை வாராயாகி, முன் நாள்,
நும் மனைச் சேர்ந்த ஞான்றை, அம் மனைக்
குறுந் தொடி மடந்தை உவந்தனள் - நெடுந் தேர்,
இழை அணி யானைப் பழையன் மாறன்,
மாட மலி மறுகின் கூடல் ஆங்கண்
வெள்ளத் தானையோடு வேறு புலத்து இறுத்த
கிள்ளி வளவன் நல் அமர் சாஅய்,
கடும் பரிப் புரவியொடு களிறு பல வவ்வி,
ஏதில் மன்னர் ஊர் கொள,
கோதை மார்பன் உவகையின் பெரிதே. *- நக்கீரர் அக 346*

*மழைக் காலத்தில் வீட்டினது இறப்பின் மேல் உள்ள சுண்ணாம்பு பூசிய குளிர்ந்த மேலிடம் போன்ற இறகை யுடையது, இறுகக் குறுகப் பறக்கும் ஆண் கொக்கு. அது வெள்ளியால் ஆன வெண்மையான இதழ் போன்ற கயல் மீனைக் குத்தக் கருதியது. கள்ளை உண்ட மகிழ்ச்சியால் ஆன மிக்க செருக்கைக் கொண்ட உழவர் காஞ்சி மரத்தின் குறிய துண்டுகளை நட்டு, இனிய சுவையுடைய மென்மை யான தண்டையுடைய கரும்பின் பல துண்டுகளைக் குறுக்காக அடைத்து, நெற்பயிரையுடைய வயலாகிய பசுமையான பள்ளங்களில் நீரைத் தேக்கி, வருந்தி அமைந்த வலிய இடத்தை யுடைய வளைவான அணையின் மேலே வழிந்து விரைந்து வரும் நீரைப் பார்த்து, மெல்ல மெல்ல அதன்மேல் சென்று நோக்கியிருக்கும். இத்தகைய பயன் பொருந்திய ஊரை யுடையவனே!*

*நாங்கள் உம் பரத்தைமையை ஒரு பொருட்டாகக் கருதவில்லை என்றாலும் நீ நின் பண் செய்யப்பட்ட நல்ல யாழை உடைய பாணனுடன், இழுத்துக் கட்டிய மண் பூசப் பட்ட தண்ணுமையின் கண்கள் அதிர்ந்து முழங்க, மகிழ்ச்சி யுற்ற உனக்குத் துணையாகிய சுற்றத்தவருடன் கள்ளை*

உண்டு எம் இல்லத்துக்கு வராமல், முன் ஒரு நாள் உங்கள் இல்லமாகிய பரத்தை இல்லத்துக்குப் போய் அடைந்தாய். அப்போது, அந்த இல்லத்தில் வாழ்கின்றவள் சிறிய வளை யலை அணிந்த உன் பரத்தை. நீண்ட தேரையும் அணியை அணிந்த யானையையும் உடையவன் பாண்டியன் பழையன் மாறன். அவனை மாளிகைகள் மிக்க தெருக்களை யுடைய மதுரையிலேயே மிக்க படையுடன் வேற்றுப் புலத்தில் போர் செய்ய வந்து தங்கியிருந்த கிள்ளிவளவன், நல்ல போரில் சாய்த்தான், அவனுடைய விரைந்த செலவையுடைய குதிரை களுடன் ஆண் யானைகள் பலவற்றையும் பற்றிக் கொண்ட, பகை மன்னரின் ஊரைக் கவர்ந்து கொள்ள, கோதை மார்பன் என்ற சேரமன்னன் மகிழ்ச்சி அடைந்தான். அவன் மகிழ்ச்சியை விட நின் பரத்தை பெரிதாய் மகிழ்ந்தாள் அல்லளோ! யாங்கள் அதனைக் கருதியதில்லை. அங்ஙன மாகவும் அதை நீ மறுப்பது மிகுந்த நகைப்பை உண்டாக்கு கின்றது, என்று தோழி தலைவனை வாயில் மறுத்தாள்.

## 218. நினையாமல் இரார் நின் பார்வையை

மேல் துறைக் கொளீஇய கழாலின் கீழ்த் துறை
உகு வார் அருந்த, பகு வாய் யாமை
கம்புள் இயவன் ஆக, விசி பிணித்
தெண் கண் கிணையின் பிறழும் ஊரன் –
இடை நெடுந் தெருவில் கதுமெனக் கண்டு, என்
பொற் தொடி முன்கை பற்றினனாக,
'அன்னாய்!' என்றனென்; அவன் கை விட்டனனே,
தொல் நசை சாலாமை, நன்னன் பறம்பில்
சிறுகாரோடன் பயினொடு சேர்த்திய
கற் போல் நாவினோனாகி, மற்று அது
செப்பலென் மன்னால், யாய்க்கே; நல் தேர்க்
கடும் பகட்ட யானைச் சோழர் மருகன்
நெடுங் கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்
நல்லடி உள்ளானாகவும், ஒல்லார்
கதவம் முயறலும் முயல்ப; அதா அன்று,
ஒலி பல் கூந்தல் நம்வயின் அருளாது,

கொன்றனன் ஆயினும் கொலை பழுது அன்றே —
அருவி ஆம்பல் கலித்த முன்துறை
நன்னன் ஆஅய் பிரம்பு அன்ன
மின் ஈர் ஓதி! — என்னை, நின் குறிப்பே? — *பரணர் அக 356*

அருவி வீழ்தலால் ஆம்பல் மலர் தழைத்துள்ள நீர்த் துறையையுடைய நன்னனின் அழகிய பறம்புமலை போன்ற மின்னும் கூந்தலைக் கொண்ட தலைவியே கேள்:

மேலைத் துறையில் கள்ளையுடைய கலயங்களைக் கழுவுதலால் கீழ்த்துறையில் ஓடிவரும் கள்ளின் கலங்கல் நீரைப் பிளந்த வாயையுடைய ஆமை குடிக்கும்; சம்பங் கோழி இன்னியக்காரன் ஆக, இறுகக் கட்டப்பட்ட தெளிந்த கண்ணையுடைய இணைப்பறவை போல் ஆமை விளங்கும் இடம். இத் தகைய ஊரை உடைய தலைவன். அவன் நம் ஊர்த் தெருவின் நடுவில் என்னை எதிர்பாராதபடி கண்டு என் பொன் வளையல் அமைந்த முன் கையைப் பிடித்துக் கொண்டான். அப்போது நான் 'தாயே' எனக் கூவினேன். நீண்ட நாளாக வரும் விருப்பினை நீக்காமலேயே அவன் என் கையை விட்டுவிட்டான்.

நன்னன் என்பவனின் பறம்பு மலையில் சாணைக் கல் செய்யும் தொழிலாளன் அரக்குடன் சேர்த்துப் பொருத்திய சாணைக் கல் போன்று வன்மையுடைய நாவினேன் ஆகிப் பேசாமல் அந் நிகழ்ச்சியைத் தாய்க்குச் சொல்லவில்லை.

நல்ல தேரினையும் கடிய களிற்றையும் கொண்ட சோழ மன்னரின் வழி வந்தவனான் நீண்ட நெற்கதிர்கள் விளையும் வல்லம் என்ற ஊரின் தலைவன் நன்மை உள்ளவனாக விளங்கவும் அவற்றைக் கருதாமல் அவனைப் பகைவர் பற்ற முயல்கின்றனர். அது கிடக்க, தழைத்த பலவான கூந்தலை உடையவளே! நம்மிடம் அருளின்றித் துன்பம் செய்தான் ஆயினும் அது குற்றம் உடையது ஆகாது. என்று பின்னின்று தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைவியைக் குறை நயப்பக் கூறினாள்.

## 219. அழுதபடி உள்ளாள்

தாழ் சினை மருதம் தகை பெறக் கவினிய
நீர் சூழ் வியன் களம் பொலிய, போர்பு அழித்து,

கள் ஆர் களமர் பகடு தலை மாற்றி,
கடுங் காற்று எறிய, போகிய துரும்பு உடன்
காயல் சிறு தடிக் கண் கெடப் பாய்தலின்,
இரு நீர்ப் பரப்பின் பனித் துறைப் பரதவர்
தீம் பொழி வெள் உப்புச் சிதைதலின், சினைஇ,
கழனி உழவரொடு மாறு எதிர்ந்து, மயங்கி,
இருஞ் சேற்று அள்ளல் ஏறி செருக் கண்டு,
நரை மூதாளர் கை பிணி விடுத்து,
நனை முதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்
பொலம் பூண் எவ்வி நீழல் அன்ன,
நலம் பெறு பணைத் தோள், நல் நுதல் அரிவையொடு,
மணம் கமழ் தண் பொழில் அல்கி, நெருநை
நீ தற் பிழைத்தமை அறிந்து,
கலுழ்ந்த கண்ணள், எம் அணங்கு அன்னாளே

*– குடவாயில் கீரத்தனார் அக 366*

*தலைவ, தாழ்வான கிளைகளையுடைய மருத மரம் சிறந்த அழகு பெற்றிருக்கும் நீர் சூழ்ந்த அகலமான களம் பொலிவு பெற உழவர் வைக்கோற் போரைப் பிரித்துக் கடாவிட்டனர். அப்போது பறந்து போன துரும்புகள் முழுவதும் உப்பளத்தில் உள்ள சிறிய பாத்திகளில் இடம் இல்லாத படி எங்கும் விழுந்து பரந்தன. ஆதலால். பெரிய கடற் பரப்பில் குளிர்ந்த துறையில் உள்ள இனிய வெண்மையான உப்பு கெட்டது. ஆதலால் நுளையர்கள் சினந்து வயல் உழவருடன் மாறுபட்டு எதிர்த்துக் கை கலந்து மிக்க சேற்றுக் குழம்பினை ஒருவர் மீது ஒருவர் எறிந்து போரிட்டனர்.*

*அதனைப் பார்த்து, நரைத்த முதியவரான மருதநில மக்கள் போரிடும் அவர்களின் கைப் பிணிப்பை விலக்கிடுவர்; முற்றிய தேனான கள்ளின் தெளிவைப் பரதவர்க்கு அளித்திடுவர். அத்தகைய இடமான பொன்னணி அணிந்த 'எவ்வி' என்பவனது 'நீழல்' என்ற ஊரைப் போன்ற அழகுடைய மூங்கில் போன்ற தோளும் நல்ல நெற்றியும் உடைய பரத்தையுடன், மணம் கமழும் சோலையில் தங்கி நேற்று நீ, தனக்குத் தீங்கு செய்தமையை உணர்ந்து எம் தெய்வம் போன்ற தலைவி அழுத கண்ணை உடையவள் ஆனாள்,*

*என்று பரத்தையிடமிருந்து பிரிந்து வந்த தலைவனிடம் தோழி, வாயில் மறுத்தாள்.*

## 220. என் அழகை எனக்குத் தா

செல்லல், மகிழ்ந! நிற் செய் கடன் உடையென்மன் –
கல்லா யானை கடி புனல் கற்றென,
மலி புனல் பொருத மருது ஒங்கு படப்பை,
ஒலி கதிர்க் கழனி, கழா அர் முன்துறை,
கலி கொள் சுற்றமொடு கரிகால் காண,
தண் பதம் கொண்டு, தவிர்த்த இன் இசை
ஒண் பொறிப் புனை கழல் சேவடிப் புரள,
கருங் கச்சு யாத்த காண்பின் அவ் வயிற்று,
இரும் பொலம் பாண்டில், மணியொடு தெளிர்ப்ப,
புனல் நயந்து ஆடும் அத்தி அணி நயந்து,
காவிரி கொண்டு ஒளித்தாங்கும் அன்னோ!
நும்வயின் புலத்தல் செல்லேம்; எம்வயின்
பசந்தன்று, காண்டிசின் நுதலே; அசும்பின்
அம் தூம்பு வள்ளை அழற் கொடி மயக்கி,
வண் தோட்டு நெல்லின் வாங்கு பீள் விரிய,
துய்த் தலை முடங்கு இறாத் தெறிக்கும், பொற்புடைக்
குரங்குஉளைப் புரவிக் குட்டுவன்
மரந்தை அன்ன, என் நலம் தந்து சென்மே!

*– பரணர் அக 376*

*தலைவ, செல்லாதே. நின்னிடம் செய்யக் கூடிய கடமை எனக்கு உளது. பாகனால் பழக்கப்படுத்தாத காவலையுடைய யானை நீரில் விளையாடலைக் கற்றதாக அதனால் மிக்கெழும் நீர் மோதிய மரங்கள் உயர்ந்த தோட்டத்தையும் கதிர்களைப் பெற்ற வயல்களையுமுடைய கழாஅர் என்ற ஊரின் முன்பு ஆரவாரம் உடைய உறவினருடன் கரிகால் வளவன் கண்டு மகிழும்படி, புனல் விழாக் கொண்டாடி இனிய இசை த்ங்கிய வீரக்கழல் சிவந்த அடியில் புரளக் கரிய கச்சினைக் கட்டிய காட்சிக்கு இனிய வயிற்றில் கட்டப்பட்ட மணியுடன் பெரிய பொன் ஒலிக்க, புனலில் விரும்பி ஆடிய அத்தி என்றவனின் அழகை விரும்பிக் காவரி*

யாறு அவனைக் கவர்ந்து கொண்டு போய்க் கடலில் ஒளித்தது போல், சேரிப் பரத்தை உன்னைக் கவர்ந்து போனாள். அது கொண்டு உம்மை யாம் வெறுக்கவில்லை. அப்படியிருந்தும், நெற்றி பசலை அடைந்தது காண்பாயாக!

சேற்றில் உள்ள அழகிய துளையுடைய ஒள்ளிய வள்ளைக் கொடியைப் பின்னுவித்து வளமான நெல்லின் வளைந்த கதிர் விரிய, துய்யினைத் தலையில் உடைய வளைந்த இறால் மீன் பாயும் இடமான அழகுடைய வளைந்த பிடரி மயிரையுற்ற குதிரையையுடைய குட்டுவனின் 'மாந்தை' என்ற ஊரைப் போன்ற என் அழகைத் தந்து விட்டுச் செல்லுக. உன்னிடம் செய்யும் கடமைகளை மிகவும் உடையோம். என்று காதற் பரத்தை சொன்னாள்.

## 221. நாணம் கொண்டேன் கணையனைப் போல்

பொய்கை நீர்நாய்ப் புலவு நாறு இரும் போத்து
வாளை நாள் இரை தேரும் ஊர!
நாணினென் பெரும! யானே – பாணன்
மல் அடு மார்பின் வலி உற வருந்தி,
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத் திரள் முழவுத் தோள் கையகத்து ஒழிந்த
திறன் வேறு கிடக்கை நோக்கி, நல் போர்க்
கணையன் நாணியாங்கு – மறையினள்
மெல்ல வந்து, நல்ல கூறி
'மை ஈர் ஓதி மடவோய்! யானும் நின்
சேரியேனே; அயல் இலாட்டியேன்
நுங்கை ஆகுவென் நினக்கு' என, தன் கைத்
தொடு மணி மெல் விரல் தண்ணெனத் தைவர,
நுதலும் கூந்தலும் நீவி,
பகல் வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே. – *பரணர் அக 386*

*நீர் நிலையில் உள்ள புலால் நாற்றமுடைய பெரிய ஆண் நீர் நாய், விடியற்காலையில் வாளையான உணவை ஆராயும் ஊரையுடைய தலைவனே, பெரும!*

*மறைந்து மெல்ல வந்து முகமனுரைகள் கூறிக் கரிய நீண்ட கூந்தலை உடைய மடவோளே! யானும் உன் சேரியில் உள்ளவளே! அயல் வீட்டுக்கு உரியவள். உனக்குத் தங்கை யாவேன் என்று சொல்லித் தன் கையின் மோதிரம் அணிந்த மெல்லிய விரலால் நெற்றியையும் கூந்தலையும் தடவிப் பகற்போதில் வந்து திரும்பினாள் உன் பரத்தை அவளைக் கண்டு, பாணன் என்பவனின் மற்போர் செய்தலில் வல்ல மார் பினது வன்மை மிகுதலால் வருந்தி அவனுடன் எதிர்த்துப் போர் செய்தலை விரும்பி மேற்கொண்ட திரண்ட முழவுத் தோள்கள் அப் பாணன் கையகப்பட்டு ஒழியக் கிடந்த வேறு வகையான கிடக்கையைக் கண்டு நல்ல போரில் வல்ல கணையன் என்பான் நாணம் கொண்டதைப் போல் நான் நாணம் கொண்டேன். என்று தோழி வாயில் மறுத்துத் தலைவியின் சிறப்புரைத்தாள்.*

## 222. என் அழகை கொடு

தொடுத்தேன், மகிழ்ந! செல்லல் – கொடித் தேர்ப்
பொலம் பூண் நன்னன் புனனாடு கடிந்தென,
யாழ் இசை மறுகின் பாழி ஆங்கண்,
'அஞ்சல்' என்ற ஆஅய் எயினன்
இகல் அடு கற்பின் மிஞிலியொடு தாக்கி,
தன் உயிர் கொடுத்தனன், சொல்லியது அமையாது;
தெறல் அருங் கடவுள் முன்னர்த் தேற்றி,
மெல் இறை முன்கை பற்றிய சொல் இறந்து,
ஆர்வ நெஞ்சம் தலைத்தலை சிறப்ப, நின்,
மார்பு தருகல்லாய்; பிறன் ஆயினையே;
இனி யான் விடுக்குவென் அல்லென்; மந்தி,
பனி வார் கண்ணள், பல புலந்து உறைய,
அடுந் திறல் அத்தி ஆடு அணி நசைஇ,
நெடு நீர்க் காவிரி கொண்டு ஒளித்தாங்கு, நின்
மனையோள் வவ்வலும் அஞ்சுவல்; சினைஇ,
ஆரியர் அலறத் தாக்கி, பேர் இசைத்
தொன்று முதிர் வட வரை வணங்கு வில் பொறித்து,
வெஞ் சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி அன்ன, என் நலம் தந்து சென்மே! – *பரணர் அக 396*

தலைவனே, உன்னைப் பற்றிக் கொண்டேன். ஆதலால் செல்லாதே.

கொடி கட்டப்பட்ட தேரையும் பொன் அணிகளையும் உடைய நன்னன் என்பவன் புனல் நாடு என்ற நாட்டில் வாழ்பவரைச் சினந்து எழுந்தான். யாழிசை உள்ள தெருக் களையுடைய பாழி என்ற நகரில் நின்று அஞ்சாதீர் என்று 'ஆஅய் எயினன்' உரைத்தான். அவ்வாறு தான் சொல்லிய சொல் பிழையாது போர் வெல்லும் பயிற்சியுடைய 'மிஞிலி' என்பவனுடன் போரிட்டுத் தனது உயிரையும் தந்தான்.

ஆனால் நீயோ வெல்வதற்கு அரிய தெய்வத்தின் முன் தெளிவித்து மெல்லிய சந்தினை உடைய என் முன் கையைப் பற்றிச் சொன்ன சொல்லைக் கடந்து அன்புடைய உள்ளம் மேலும் மேலும் மகிழ்ந்து சிறக்க உன் மார்பைத் தராமல் அயலான் ஆனாய். இனி நான் உன்னை விடமாட்டேன்.

ஆதிமந்தி என்பாள் நீர்வடியும் கண்ணைக் கொண்ட வளாய்ப் பலவற்றையும் வெறுத்து இருக்க, கடிய ஆற்றல் வாய்ந்த ஆட்டன் அத்தி என்ற காதலன் ஆடும் அழகை விரும்பி, நீர்ப் பெருக்கையுடைய காவிரியாறு கவர்ந்து ஒளித்துக் கொண்டாற் போல் உன் மனைவி உன்னைப் பற்றிக் கொள்ளவும் நான் அஞ்சினேன்.

சினம் கொண்டு எழுந்து, ஆரிய அரசர்கள் அலறும்படி அவர்களைத் தாக்கிப் பெரும் புகழை உடைய இமய மலை யின் மீது வளைந்த விற் பொறியைப் பொறித்து, கடுஞ்சினம் உடைய பகை மன்னரைப் பிணித்து வந்த சேரனது வஞ்சி நகரை ஒத்த என் அழகைத் தந்துவிட்டுப் போவாயாக! என்று காதற் பரத்தை தலைவனிடம் சொன்னாள்.






## கலித்தொகை

### 223. ஊடல் நீங்கியவர் உரை

வீங்கு நீர் அவிழ் நீலம் பகர்பவர் வயற் கொண்ட
ஞாங்கர் மலர் சூழ்தந்து, ஊர் புகுந்த வரி வண்டு,
ஓங்கு உயர் எழில் யானைக் கனை கடாம் கமழ் நாற்றம்
ஆங்கு அவை விருந்து ஆற்ற, பகல் அல்கி, கங்குலான்,
வீங்கு இறை வடுக் கொள, வீழுநர்ப் புணர்ந்தவர்
தேம் கமழ் கதுப்பினுள் அரும்பு அவிழ் நறு முல்லை
பாய்ந்து ஊதி, படர் தீர்ந்து, பண்டு தாம் மரீஇய
பூம் பொய்கை மறந்து, உள்ளாப் புனர் அணி நல் ஊர!

அணை மென் தோள் யான் வாட, அமர் துணைப் புணர்ந்து நீ
'மண மனையாய்' என வந்த மல்லலின் மாண்பு அன்றோ—
பொதுக் கொண்ட கவ்வையின் பூ அணிப் பொலிந்த நின்
வதுவை அம் கமழ் நாற்றம் வைகறைப் பெற்றதை?

கனலும் நோய்த் தலையும், 'நீ கனங் குழையவரொடு
புனல் உளாய்' என வந்த பூசலின் பெரிது அன்றோ—
தார் கொண்டாள் தலைக் கோதை தடுமாறிப் பூண்ட நின்
ஈரணி சிதையாது, எம் இல் வந்து நின்றதை?

தணந்ததன் தலையும், 'நீ தளரியலவரொடு
துணங்கையாய்' என வந்த கவ்வையின் கடப்பு அன்றோ—
ஒளி பூத்த நுதலாரோடு ஓர் அணிப் பொலிந்த நின்
களி தட்ப வந்த இக் கவின் காண இயைந்ததை?
என ஆங்கு
அளி பெற்றேம்; எம்மை நீ அருளினை; விளியாது

வேட்டோர் திறத்து விரும்பிய நின் பாகனும்,
'நீட்டித்தாய்' என்று, கடாஅம், கடுந் திண் தேர்;
பூட்டு விடாஅ நிறுத்து. — *நல்லந்துவனார் கலி 66*

*பெருகும் நீர்நிலை. அதிலே மலர்ந்த கருங்குவளை, அம் மலர்களைக் கொண்டு விற்பவர், வயலில் பறித்த மலர் களைச் சுமந்து வருகின்றனர். அம் மலர்ச் சுமையைச் சூழ்ந்த ஊரிடத்துப் புகுகின்றது பாடும் வண்டு. அந்த வண்டுக்கு, சிறந்த இலக்கணம் கொண்ட அழகிய யானையின் நாறும் நாற்றத்தை யுடைய மதத்தை அதில் படிந்திருந்த வண்டுகள் விருந்தாகப் படைக்கும். அப் பூக்களுடன் வந்த வண்டுகள் பகற்பொழு தெல்லாம் தங்கி இரவில் முன்கையில் கிடந்த தொடியில் தம் கணவர் மேனி வடுவைப் பெறமாறு கணவரைக் கூடிய மகளிரின் தேன் மணக்கும் மலரில் கிடந்து அரும்பாகிய தன்மை முற்றி மலர்ந்த முல்லை மலர்களில் பாய்ந்து தேனையுண்டு, பின் வேறு சில பூக்களின் தேனை உண்ண வேண்டும் என்ற நினைவே இல்லாது முன் தாம் விரும்பிய மலர்ப் பொய்கையை மறக்கும்; அதனைத் திரும்ப ஒரு காலத்தும் நினைக்காது. இத்தகைய நீர் வளம் வாய்ந்த நல்ல ஊரனே!*

*ஆரவாரமுடைய சிறப்பற்ற பரத்தையரைப் பூப்பேசி மணந்து கொண்ட திருமணத்தில் உண்டான நின் மணத்தை விடியற்காலத்தில் யாங்கள் பெற்றோம். இங்ஙனம் பெற்றது, மெல்லிய எம் தோள்கள் மெலியுமாறு உன் மனத்துக்கு விருப்பமான பரத்தையரைக் கூடி மண இல்லத்தில் இருந்தாய் என்று பிறர் சொல்ல, உனக்கு உண்டான வளப்பத்தை விடச் சிறந்த ஒன்றன்றோ?*

*நின் மார்பு மாலையைப் பெற்றுக் கொண்டவளின் தலை மாலையை, விடியற் காலத்தில் புறப்பட்டு வருதலால், மனம் தடுமாறி அணிந்து இரண்டு அணியும் கெடாமல் எம் இல்லத்தில் வந்து நின்றாய். இங்ஙனம் நீ நின்றது. எம் மேனி வெம்மையடைவதற்குக் காரணமான காமநோய் மிக, பொன்னால் ஆன மகரக் குழையையுடைய பரத்தையருடன் நீரில் விளையாடுகின்றாய் என்று பிறர் சொல்ல, உன் பொருட்டு உண்டான ஆரவாரத்தைவிடப் பெரியதன்றோ!*

*நீ இங்கு வந்ததால் நின் அருளை யான் பெற்றோம். நீயும் அருள் செய்தாய். இதுவே போதும். இனி நீ விரும்பியவரிடம் நீ செல்வதை விரும்பிய பாகனும், பூட்டுதலை விடாத கடிய திண்மையான தேரை, நீ இவ்விடத்தில் காலம் தாழ்த்தினாய் என் எண்ணி அது நிற்கும் நிலையினின்று செலுத்துவான். அதற்கு முன்பே சென்று அப் பரத்தையரின் அன்பு கெடாமல் அதை நிலை நாட்டுவாயாக! என்று நெடிய ஊடலைக் கை விட்டுத் தலைவி தலைவனைச் சார்ந்தாள்.*

## 224. என் நெஞ்சு தலைவனிடம்

கார் முற்றி, இணர் ஊழ்த்த கமழ் தோட்ட மலர் வேய்ந்து,
சீர் முற்றி, புலவர் வாய்ச் சிறப்பு எய்தி, இரு நிலம்
தார் முற்றியது போல, தகை பூத்த வையை தன்
நீர் முற்றி, மதில் பொரூஉம், பகை அல்லால், நேராதார்
போர் முற்று ஒன்று அறியாத புரிசை சூழ் புனல் ஊரன்—

நலத்தகை, எழில் உண்கண் நல்லார் தம் கோதையால்
அலைத்த, புண், வடு, காட்டி, அன்பு இன்றி வரின் எல்லா!
புலப்பென் யான் என்பேன்மன்?
அந் நிலையே, அவற் காணின்
கலப்பென் என்னும், இக் ஃகயறு நெஞ்சே.

கோடு எழில் அகல் அல்குற் கொடி அன்னார் முலை மூழ்கி,
பாடு அழி சாந்தினன், பண்பு இன்றி வரின் – எல்லா!
ஊடுவென் என்பேன்மன்? அந் நிலையே, அவற் காணின்,
கூடுவென் என்னும், இக் கொள்கை இல் நெஞ்சே.

இனிப் புணர்ந்த எழில் நல்லார் இலங்கு எயிறு
நனிச் சிவந்த வடுக் காட்டி, நாண் இன்றி வரின் எல்லா!
துனிப்பென் யான் என்பேன்மன்?
அந் நிலையே, அவற் காணின்,
தனித்தே தாழும், இத் தனி இல் நெஞ்சே.
என ஆங்கு
பிறை புரை ஏர் நுதால்! தாம் எண்ணியவை எல்லாம்
துறைபோதல் ஒல்லுமோ தூ ஆகாது ஆங்கே
அறை போகும் நெஞ்சு உடையார்க்கு? *—கலி 67*

வையையாறு, கார்காலம் முதிர்தலால் பூங்கொத்துகள் மலர்ந்த மணக்கும் இதழ்களை உடையவை பன் மலர்களைச் சூடி, புலவர் வாயிற் பாடலைத் தான் பெற்று ஊரைச் சூழ்ந்து வரும். அது பெரிய நிலமடந்தை ஒரு பூமாலையைச் சூடிக் கொண்டிருப்பதைப் போல் விளங்கும். இத்தகைய அவ் வையை யாற்றின் நீர் சூழ்ந்து மதிலைப் போரிடும் பகையே அல்லாமல் பகைவர் போரால் வளைத்துக் கொள்வதைச் சற்றும் அறியாத மதில் சூழ்ந்த நீரையுற்ற மதுரை நகரை உடையவன்.

என் தோழியே! எழிலையுடைய மை பூசப் பெற்ற கண்ணையுடைய பரத்தையர் தம் மாலைகளினால் அடித்த அழகையும், நகத்தாலும் பல்லாலும் உண்டாக்கிய புண்களை யும், அணிகளால் உண்டாக்கப்பட்ட வடுக்களையும் தலைவன் என்னிடம் காட்டி அன்பு இல்லாது வருவான் என்றால், நான் அவனிடம் ஊடல் கொள்ள நினைத்திருந்தேன். ஆனால் என்ன? என் போக்கற்ற நெஞ்சம் அவனைக் காணில் தவறு களுடன் கூடிய அவனை நான் கூடுவேன் என்று கூறும். என்ன செய்வேன்?

பக்கம் உயர்ந்த அகன்ற அல்குலையுடைய கொடி போன்ற பரத்தையர் தம் முலைகள் அழுந்திப் பூசிய சந்தனத்தை உடையவனாய், நன் மக்களின் குணம் இல்லாது வருவானா யின், ஊடலாம் என இருந்தேன். நான் கூறுவதைக் கொள்ளாத இந் நெஞ்சம் அவனைப் பார்க்கின் தவறுகளுடன் கூடிய அந் நிலையிலேயே அவனிடம் யான் கூடுவேன் எனச் சொல்லும்.

தோழி! இப்போது புதிதாய்க் கூடிய அழகு கொண்ட பரத்தையரின் பற்கள் அழுந்துகையால் உண்டான சிவந்த வடுக்களை இவன் காட்டி நாணம் இல்லாது வருவானாயின், ஊடல் கொள்ளலாம் என இருந்தேன். ஆனால் பயனில்லை. இந்தத் தனிமையான மனத்தைத் தனக்கு உரியதல்லாத நெஞ்சமானது அவனைக் காணின் அத் தவறுகளுடனேயே அந் நிலையில் என்னை விட்டு நீங்கி அவனிடத்தே செல்லும்.

இளம்பிறை போன்ற நெற்றியை உடையவளே! நமக்குத் துணையாகாது வஞ்சனை செய்து விட்டு அவனிடத்தில் போகும் நெஞ்சைக் கொண்ட மகளிர்க்குத் தாம் எண்ணியவை

*எல்லாம் முற்றுப்பெறுவது உண்டோ! இல்லை என்றாள் வாயில் மறுத்துப் பின் ஒருவாறு ஏற்ற தலைவி தோழியிடம்.*

## 225. கனவில் பெற்ற செல்வம்

பொது மொழி பிறர்க்கு இன்றி முழுது ஆளும் செல்வர்க்கு
மதி மொழி இடல் மாலை வினைவர் போல், வல்லவர்
செது மொழி சீத்த செவி செறு ஆக,
முது மொழி நீரா, புலன் நா உழவர்
புது மொழி கூட்டுண்ணும் புரிசை சூழ், புனல் ஊர!
'ஊரன் மன் உரன் அல்லன், நமக்கு' என்ன,
உடன் வாளாது
ஓர் ஊர் தொக்கு இருந்த நின் பெண்டிருள் நேராகி
களையாநின் குறிவந்து, எம்கதவம் சேர்ந்து அசைத்த கை
வளையின்வாய் விடல் மாலை மகளிரை நோவேமோ–
'கேள் அலன், நமக்கு அவன் குறுகன்மின்' என, மற்று எம்
தோளோடு பகைபட்டு நினை வாடு நெஞ்சத்தேம்?

'ஊடியார் நலம் தேம்ப, ஒடியெறிந்து அவர்வயின்
மால்தீர்க்கும் அவன் மார்பு' என்று எழுந்தசொல் நோவேமோ–
முகை வாய்த்த முலை பாயக் குழைந்த நின் தார் எள்ள,
வகை வரிச் செப்பினுள் வைகிய கோதையேம்?

சேரியால் சென்று, நீ சேர்ந்த இல் வினாயினன்
தேரொடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ–
ஒலி கொண்ட சும்மையான் மண மனை குறித்து, எம் இல்
'பொலிக' எனப் புகுந்த நின் புலையனைக் கண்டாயாம்?
என ஆங்கு–
நனவினான் வேறாகும் வேளா முயக்கம்–
மனை வரின், பெற்று உவந்து, மற்று எம் தோள் வாட,
'இனையர்' என உணர்ந்தார் என்று ஏக்கற்று, ஆங்கு
கனவினான் எய்திய செல்வத்து அனையதே –
ஐய எமக்கு நின் மார்பு. – *கலி 68*

*இம் மண்ணுலகம் மற்றவர்க்கும் பொதுவானது என்னும் மொழி இன்றி உலகம் முழுவதையும் தானே ஆளும் பேரரசர்க்கு அறிவாகிய சொல்லைச் சொல்வதை இயல்பாகக்*

கொண்டவர் அமைச்சர். அவர்களைப் போல் நூல் வல்ல ஆசிரியரால் பொல்லாத சொற்கள் இடையில் புகாமல் விலக்கிய தம் காதுகள் வயலாக, முன் உள்ள சான்றோர் உரைத்த செய்யுள்கள் தம் சொல்லை வளர்க்கும் நீராய், அறிவுடைய நா என்னும் ஏரால் உழுது உண்ணும் புலவரின் புதிய கவிகளைக் கூடியிருந்து கேட்டு உண்ணும் மதில் மதில் சூழ்ந்த நீரையுடைய மதுரை நகரத்தை உடையவனே!

'நமக்கு மருதநிலத் தலைவன் ஆதரவானவன் அல்லன்' என்று முதலில் சொல்லி, பின்பு ஒருவர் சொன்னதை ஒருவர் சொல்லாது ஓரூரில் குடியேற்றும் அளவுக்குத் திரண்டிருந்த நின் சேரிப் பரத்தையர் போல் நாங்களும் ஆகி, நமக்கு அவன் உறவல்லன், அவனை முயங்க வேண்டா என்று சொல்லி, தழுவக் கருதிய எம் தோளுடனே மாறுபட்டுப் பின்பு தழுவக் கருதிய எம் நினைவு கெடும் நெஞ்சம் கொண்ட நாங்கள் உன் பெண்டிர்க்கு ஒப்பாகி, 'ஊரன் ஊரனல்லன்' என்ற சொல்லைக் களைந்து உன்னைக் காணக் குறியிடத்தே வந்து அங்கு உன்னைக் காணாததால் எம்மிடம் நீ வந்தாய் எனக் கருதி எம் இல்லத்துக் கதவை அடைந்து தட்டின கை வளையலால் தம் வருகையைத் தெரிவிக்கும் பரத்தையரை நாம் நொந்து கொள்வோமா? அதற்கு எங்களுக்கு உரிமை இல்லையே!

தாமரை அரும்பின் இயல்பு கொண்ட முலைகள் தழுவுதலால் தன் தன்மை கெட்ட நின் மாலை எம்மை இகழ்ந்து கூற, பூக்கூடையில் பயன்படாது தங்கிய மாலை போன்ற தன்மையுடைய யாங்கள் இற்பரத்தையர் ஊடின ஊடலைத் தீர்த்துத் தழுவாமல் அவர்களின் நலம் கெடும்படி அவர்களை இடையன் கொன்ற மரம் போல ஆக்கிவிட்டுச் சேரிப் பரத்தையரின் ஊடல் தீர்ப்பவனின் மார்பு என்று ஊரவர் கூறுவர். அவ்வாறு பிறந்த சொல்லை நொந்து கொள்வோமா? அதற்கு எமக்கு உரிமை இல்லையே!

ஆரவாரம் கொண்ட மனையில் எழும் ஆரவாரத்தைக் கேட்டு 'நீ மணம் செய்கின்ற இல்லம், என்று எம் வீட்டிலே 'விளங்குக, விளங்குக' என்று கூறிப் புகுந்தான் புலைத் தொழிலையுடைய பாணன். அவனைக் கண்ட நாங்கள், சேரியில் எல்லாம் சென்று நீ போயிருக்கும் வீட்டை

வினவிய வனாய்த் தேருடன் திரிகின்ற பாகனைக் குறை சொல்வோமா? சொல்லோம் அதற்கு எங்கட்கு உரிமை இல்லையே!

எம் இல்லத்தில் நீ ஒரு காலத்தில் வந்தாய் எனின், உன்னைப் பெற்று மகிழ்ந்து நீ பிரிந்து போனபின் எம் தோள் மெலியும். அதனை உணர்ந்தவர்கள் 'இந்தக் காலத்தில் இவளும் இவரும் இப்படியிருந்தனர்' என்று புறம் சொல்லுத லால் அதனை நான் ஏற்றுக் கொண்டு பழைய நிலையை அடைவதற்கு விரும்பித் தழுவுவதைப் போல் நின் மார்பில் முயங்கினும் உண்மையில் வேறாக இருக்கும். நீ விரும்பாத முயக்கம் எமக்குக் கனவில் கிடைக்கப்பெற்ற செல்வத்தைப் போன்று விளங்கும் என்று பரத்தையிடமிருந்து வந்தவனோடு ஊடிப்பின் கூடுகையில் தலைவி கூறினாள்.

## 226. வீழ்ந்தார் விருப்பற்றக்கால் எம்மையும் உள்ளுவாய்!

போது அவிழ் பனிப் பொய்கை, புதுவது தளைவிட்ட
தாது சூழ் தாமரைத் தனி மலர்ப் புறம் சேர்பு—
காதல் கொள் வதுவை நாள், கலிங்கத்துள் ஒடுங்கிய
மாதர் கொள் மான் நோக்கின் மடந்தை தன் துணையாக,
ஓதுடை அந்தணன் எரி வலம் செய்வான் போல்,
ஆய் தூவி அன்னம் தன் அணி நடைப் பெடையோடு
மேதகத் திரிதரூஉம் மிகு புனல் நல் ஊர!

தெள் அரிச் சிலம்பு ஆர்ப்ப, தெருவின்கண் தாக்கி, நின்
உள்ளம் கொண்டு, ஒழிந்தாளைக்
குறை கூறிக் கொள நின்றாய்
துணிந்தது பிறிதாக, 'துணிவிலள் இவள்' என,
பணிந்தாய் போல் வந்து, ஈண்டுப் பயனில மொழிவாயோ?

பட்டுழி அறியாது, பாகனைத் தேரொடு
விட்டு, அவள் வரல் நோக்கி, விருந்தும்
ஏற்றுக்கொள்ள நின்றாய்
நெஞ்சத்த பிறவாக, 'நிறையிலள் இவள்' என,
வஞ்சத்தான் வந்து, ஈங்கு வலி அலைத்தீவாயோ?

இணர் ததை தண் காவின், இயன்ற நின் குறி வந்தாள்
புணர்வினில் புகன்று, ஆங்கே புனலாடப் பண்ணியாய்
தருக்கிய பிறவாக, 'தன் இலள் இவள்' என,
செருக்கினால் வந்து, ஈங்குச் சொல் உகுத்தீவாயோ?
என ஆங்கு—
தருக்கேம் பெரும! நின் நல்கல்; விருப்புற்றுத்
தாழ்ந்தாய் போல் வந்து, தகவில செய்யாது,
சூழ்ந்தவை செய்து, மற்று எம்மையும் உள்ளுவாய்—
வீழ்ந்தார் விருப்பு அற்றக்கால். — *கலி 69*

*மேலாடைக்குள் வெட்கத்தால் மறைந்து பார்க்கின்ற காதலையுடைய மங்கையுடன், தன் இம்மை மறுமைக்குத் துணையாக ஆகும் வேதம் ஓதும் அந்தணன் தீயை வலமாக வருவான். அவனைப் போன்று மென்மை இறகையுடைய அன்னப் பறவை தன் பெட்டையுடன் கூடி மலர்கள் மலர்ந்த நீர் நிலையில் உள்ள தாமரையின் புதிதாய்க் கட்டவிழ்ந்த தாதுடைய தனியான மலரின் புறத்தே சேர்ந்து பெருமை விளங்கத் திரியும் புனல் பொருந்திய நல்ல ஊரை உடையவனே!*

*தேர்ந்தெடுத்த பரலையுடைய சிலம்பு ஒலிக்கத் தெருவில் வந்து தாக்கணங்கைப் போல் அடித்து, உன் நெஞ்சை வயப்படுத்திக் கொண்டு பின்பு கைவிட்டவள் பரத்தை. அவளை உன் வருத்தத்தைச் சொல்லி அழைத்துக் கொள்ள எண்ணி வந்த செயல் வேறொன்றாயிருக்க, இவள் அறிய மாட்டாள் என்று எண்ணி இங்குப் பணிந்தவன் போல் காட்டிப் பயன் இல்லாதவற்றைக் கூறுகின்றாய். அஃது உன்னை வருத்தாதோ? என்றாள் காமக்கிழத்தி.*

*பரத்தையரின் நெஞ்சம் வன்மையுடையது என்று அறியாது, பாகனைத் தேரோடும் அவளிடம் போகவிட்டு, அவள் உன்னை விருந்தாக ஏற்க வருவாள் என எண்ணிய நீ, அவள் வாராதால், உன் நெஞ்சத்தில் உள்ளவை வேறா யிருக்க, 'இவள் நிறை என்ற குணமுடையவள் அல்லள்' என்று எண்ணிப் பொய் வன்மையால் இங்கு வந்து உன் ஊரான் மையால் என்னை வருத்துவாயோ? அஃது உன்னை வருத் தாதோ? எனக் காமக்கிழத்தி உரைத்தாள்.*

மலர்க்கொத்துகள் நெருங்கிய சோலையில் நீ செய்த குறியிடத்தில் வந்தவளைப் புணர்ச்சியில் நலம் பாராட்டி அப்போதே உடன் புனலாடும்படி பண்ணினாய், நீ! நின் நெஞ்சில் நிகழ்பவை வேறாக இருக்க, 'இவள் தனக்கென ஒரு நெஞ்சு உடையவள் அல்லள்!' என்று அவளைப் பற்றிக் கூறி உள்ளத்தின் செருக்காலே இவ்விடத்தே வந்து நின்றனை. பரத்தையர்க்குக் கூறம் பயனுடைய இத்தகைய சொற்களைப் பாழாக என்னிடத்தில் கூறி வீணாக்கலாமோ? அது நின்னை வருத்தாதோ? எனக் காமக்கிழத்தி உரைத்தாள்.

பெரும! உன் அளியினால் நாங்கள் மனச் செருக்குக் கொள்ள மாட்டோம்! எம்மிடத்து விரும்பிக் குறைந்தாய் போல் வந்து நின்று தகுதியில்லாதவற்றைச் செய்ய வேண்டா. நி விரும்பியவரிடத்து நுகரக் கருதியவற்றை நுகர்ந்து முடித்து விருப்பம் இல்லாத போது என்னையும் நினைப்பாய் என்று ஊடல் நீங்கும் காமக்கிழத்தி உரைத்தாள்.

## 227. பாணன் வருகையே எமக்கு வருத்தம்

மணி நிற மலர்ப் பொய்கை, மகிழ்ந்து ஆடும் அன்னம் தன்
அணி மிகு சேவலை அகல் அடை மறைத்தென,
கதுமென, காணாது, கலங்கி, அம் மடப் பெடை
மதி நிழல் நீருள் கண்டு, அது என உவந்து ஓடி,
துன்னத் தன் எதிர் வரூஉம் துணை கண்டு, மிக நாணி,
பல் மலரிடைப் புகூஉம் பழனம் சேர் ஊர! கேள்:

நலம் நீப்பத் துறந்து எம்மை, நல்காய் நீ விடுதலின்,
பல நாளும் படாத கண், பாயல் கொண்டு இயைபவால்;
துணை மலர்க் கோதையார் வைகலும் பாராட்ட,
மண மனைத் ததும்பும் நின் மண முழ வந்து எடுப்புமே.

அகல நீ துறத்தலின் அழுது ஓவா உண்கண் எம்
புதல்வனை மெய் தீண்ட, பொருந்துதல் இயைபவால்;
நினக்கு ஒத்த நல்லாரை நெடு நகர்த் தந்து நின்
தமர் பாடும் துணங்கையுள் அரவம் வந்து எடுப்புமே.

வாராய் நீ துறத்தலின், வருந்திய எமக்கு, ஆங்கே
நீர் இதழ் புலராக் கண் இமை கூம்ப இயைபவால்;

நேர் இழை நல்லாரை நெடு நகர்த் தந்து நின்
தேர் பூண்ட நெடு நல் மான் தெள் மணி வந்து எடுப்புமே.
என ஆங்கு–
மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலை போல்,
எல்லாம் துயிலோ எடுப்புக – நின் பெண்டிர்
இல்லின் எழீஇய யாழ் தழீஇ, கல்லா வாய்ப்
பாணன் புகுதராக்கால்! – *கலி 70*

*பல மணிகளைப் போன்ற நிறங்களையுடைய மலர்களை யுடைய நீர் நிலை. அதில் தன் ஆண் அன்னத்துடன் விளை யாடும் பெண் அன்னம். அது அழகு மிக்க ஆண் அன்னத்தை அகன்ற தாமரை இலை ஒன்று மறைக்க அதனைக் காணாமல் விரைந்து கலங்கியது. அது மதியின் நிழலை நீருள் கண்டு அதைக் தனது சேவல் என எண்ணியது. அப்போது அதனைச் சேர்வதற்கு எதிரே வரும் ஆண் அன்னத்தைக் கண்டு மிகவும் நாணம் கொண்டது. பல மலர்களின் செறிவுக்குள் புகுந்து ஒளிந்து கொள்ளும். இத்தகைய பழன நிலம் சூழ்ந்த ஊரனே! நான் கூறுவதைக் கேட்பாயாக!*

*எம் நலம் கெடும்படி எம்மை விட்டு நீங்கிப் பின்பு ஒரு காலத்தும் வாராமல் கைவிட்டனை. அதனால் பல நாள்களும் உறங்காத கண்கள் வருத்தம் மிகுதியால் இருக்க இயலாது ஒரு நாள்படுக்கையையும் இடமாய்க் கொள்கை யால் இமை மூடுதலும் கூடும். ஆனால் அதை, இணைந்த மலரால் ஆன மாலையினுடைய கலைகள் எல்லாம் முழுவ தும் கற்று முதிர்ந்த பரத்தையர் நன்றென்று கொண்டாடு மாறு நாள்தோறும் மணம் செய்யும் மனைகளில் இருந்து முழங்கும் என் மணத்தை எங்கட்கு உணர்த்தும் முழவினது ஓசை வந்து போக்குகின்றது. இதுவே எங்கள் குறை.*

*நீ எம்மை நீங்குதலால் உறங்காமல் உள்ளன எம் கண்கள். எம் உடல் மகனைத் தீண்டுவதால் அவை உறங்கலும் கூடும். அதனை நின் இளமைப் பருவத்துக்கு ஏற்ற பரத்தையர் களை அவர்க்கென்று அமைக்கப்பட்ட பெரிய இல்லத்தில் கொணர்ந்து நின் சுற்றமான பரத்தையர் இருந்து பாடும் துணங்கைக் கூத்தில் எழுந்து வரும் ஆரவாரம் போக்கும். அதுவே எங்கள் குறை.*

நீ இங்கு வரவில்லை. ஆதலால் யாம் உறக்கம் இழந்தோம். அதனால் வருந்திய எமக்கு நீர் விழும் இதழ் போல் நீர் சிந்துதலை ஒழியாத கண்கள் படுக்கையில் இமை பொருந்துதலும் கூடும். அதனை ஒத்த இழைகளையுடைய பரத்தையரைத் தமக்கு அமைக்கப்பட்ட இல்லத்தில் கொண்டு வருகையால் பிறந்த உன் தேரிலே பூண்ட குதிரையில் கட்டிய தெளிந்த மணியோசை வந்து போக்கும்; அதுவே எங்கள் குறை.

நான்கு படைகளில் குறைவுபட்ட மதிலுக்குள் இருப்பவனின் செவியில் மதிலை முற்றியிருப்பவனின் பள்ளியெழுச்சி முரசினைப் போல் மேலே கூறப்பட்டவை எல்லாம் எமது உறக்கத்தைப் போக்குக. பரத்தியரின் இல்லத்தில் மீட்டிய யாழைத் தழுவிக் கொண்டு தூதாகத் திரிவது அன்றிப் பாட்டினை நன்கு கல்லாத வாயையுடைய பாணன் நம் வீட்டில் வாராதவிடத்து, அவனது வருகையே எமக்கு வருத்தம் என்று நெருங்கிச் சொன்னாள் தோழி, தலைவனிடம்.

## 228. காமக் கிழத்தி பேசுகிறாள்

விரிகதிர் மண்டிலம் வியல் விசும்பு ஊர்தர,
புரி தலை தளை அவிழ்ந்த பூ அங்கண் புணர்ந்து ஆடி,
வரி வண்டு வாய் சூழும் வளம் கெடு பொய்கையுள்—
துனி சிறந்து இழிதரும் கண்ணின் நீர் அறல் வார,
இனிது அமர் காதலன் இறைஞ்சித் தன் அடி சேர்பு,
நனி விரைந்து அளித்தலின், நகுபவள் முகம் போல—
பனி ஒரு திறம் வார, பாசடைத் தாமரைத்
தனி மலர் தளை விடூஉம் தண் துறை நல் ஊர!

'ஒரு நீ பிறர் இல்லை, அவன் பெண்டிர்' என உரைத்து,
தேரொடு தேற்றிய பாகன் வந்தீயான்கொல்—
ஓர் இல் தான் கொணர்ந்து உய்த்தார்
புலவியுள் பொறித்த புண்
பாரித்துப் புணர்ந்த நின் பரத்தைமை காணிய?

'மடுத்த அவன் புகுவழி மறையேன்' என்று, யாழொடும்
எடுத்துச் சூள் பல உற்ற பாணன் வந்தீயான்கொல்—
அடுத்துத் தன் பொய் உண்டார்ப்

புணர்ந்த நின் எருத்தின்கண்
எடுத்துக்கொள்வது போலும் தொடி வடுக் காணிய?
'தணந்தனை' எனக் கேட்டு, தவறு ஓராது, எமக்கு நின்
குணங்களைப் பாராட்டும் தோழன் வந்தீயான்கொல்—
கணங்குழை நல்லவர் கதுப்பு அறல் அணைத் துஞ்சி
அணங்கு போல் கமழும் நின் அலர் மார்பு காணிய?
என்று, நின்
தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்
யார்? — நீ வரு நாள் போல் அமைகுவம் யாம்; புக்கீமோ!
மாரிக்கு அவாவுற்றுப் பீள் வாடும் நெல்லிற்கு, ஆங்கு,
ஆராத் துவலை அளித்தது போலும், நீ
ஓர் யாட்டு ஒரு கால் வரவு. — *கலி 71*

*மேலே விரியும் கதிர் கொண்ட இளவளஞாயிறு அகன்ற வானத்தில் பரவ, விடியற் காலத்தில் இதழ்கள் முறுக்குண்ட தலைகள், அம் முறுக்கு நெகிழ்ந்த மலர். அதில் அழகிய தேனை வண்டுகள் எல்லாம் ஒன்றாய்க் கூடித் குடித்து அதனாலும் அமையாமல் மேலும் குடித்தற்கு அங்குச் சூழ்ந்து திரியும் செல்வம் மிக்க பொய்கை. அதில் வருத்தம் மிகுத லால் நீர்ப்பெருக்கு மாறாது விழுகின்ற கண்ணீர் காமமான தீயால் வற்றி அற்று அற்று விழுதலையுடையதாக ஒழுக, அந்த வருத்தத்தைக் கண்டு இனிதாக அமர்ந்த கணவன் தன் அடிகளில் விழுந்து இறைஞ்சி விரைந்து அருள்செய்த லால், சிறிதே மகிழ்ச்சி அடைபவளின் முகம் போல், பசுமை யான இலைக்குள் நின்ற தாமரையினது தனியான மலர் தனக்கு வருத்தத்தைச் செய்யவும், பனி ஒரு பகுதியில் வடிந்து கொண்டிருக்க, மிகவும் அழகின்றி மலர் மலரும் குளிர்ந்த துறையை உடைய நல்ல ஊரனே!*

*'அவனுடைய பெண்டிர் உன்னை ஒழியப் பிறர் இல்லை', அதை ஆராய்ந்து பார், என்று சொல்லித் தனக்குத் தெய்வமாகிய தேரைத் தொட்டு சூள் சொன்ன பாகன், அவன் தான் கொண்டு வந்த பரத்தையர் எல்லாரும் இருத் தற்கு அமைக்கப்பட்ட இல்லத்தில் விடப்பட்ட பரத்தையர் புலவியால் ஏற்பட்ட வடுக்கள் நாணம் இல்லாமையால் இவை இருக்க வேண்டும் என்று பரப்பி வைத்தலால் அவை*

மறையாமல் கிடந்த நின் பரத்தமைமையைக் காண்பதற்கு இங்கு வரமாட்டானோ?

அப் பரத்தையர் உடன்பாடில்லாமல் தானே போகு மிடத்து உன்னை மறவேன் என்று சொல்லி யாழாகிய தெய்வத்தோடு பிற தெய்வங்களையும் கூட்டிப் பல் சூள் கூறுபவன் பாணன். அவன்,'இவன் செய்தி பொய்' என்று அறிந்தும், மருண்டு அப் பொய்கையைப் பல முறையும் நுகர்ந்தவர்களைக் கூடிய உன் கழுத்தில் அள்ளிக் கொள்வது போன்று மறையாமற் கிடக்கின்ற வளையல் ஏற்பட்ட தழும்பைக் காண்பதற்கு வாரானோ!

உன் தீமைகளை உணர்ந்துள்ள எமக்கு, நீ எங்களைப் பிரிந்தாய் என்று பிறர் சொல்லக் கேட்டிருந்து, நீ பிழைகளை உணராமல் உன் நற்குணங்கள் உள்ளன எனக் கொண்டாடு பவன் நின் தோழன். அவன் திரண்ட காதணியை அணிந்த மகளிரின் புணர்ச்சியால் குலைந்து விழுந்த கூந்தலாகிய அணையிலே உறங்குகையில் தெய்வம் போல் மணக்கும் நின் அலர்ந்த மார்பைக் காண்பதற்கு வாரானோ?

இவ்வாறு நின் அன்பு நீங்காத முயக்கத்தை என்றும் பெறும் பரத்தையரை வெறுப்பவர் யார்? நீ ஓர் ஆண்டுக்கு ஒரு முறை வரும் வரவு, எமக்கு, மழைக்கு ஆசைப்பட்டுத் தோன்றின நெற்கதிர்க்கு அப் 'பருவத்தில் பெய்யாமல் சிறு துவலையைப் பெய்தமைபோல் மிக்க வருத்தத்தை தரும். எனவே, நீ வரும் நாளைப் போல் யாங்கள் ஆற்றியிருப்போம். நீ வருந்தாது அந்தப் பரத்தையர் மனைக்கே செல்வாயாக! என்று பரத்தையர் உறவால் தலைவனிடம் ஊடிக் கூடிய தலைவி கூறினாள்.

## 229. இந் நோய் உழத்தல் இழிந்ததோ

இணைபட நிவந்த நீல மென் சேக்கையுள்,
துணை புணர் அன்னத்தின் தூவி மேல் அணை அசைஇ,
சேடு இயல் வள்ளத்துப் பெய்த பால் சில காட்டி,
ஊடும் மென் சிறு கிளி உணர்ப்பவள் முகம் போல,
புது நீர புதல், ஒற்றப் புணர் திரைப் பிதிர் மல்க,
மதி நோக்கி அலர் வீத்த ஆம்பல் வால் மலர் நண்ணி,

கடி கயத் தாமரைக் கமழ் முகை, கரை மாவின்
வடி தீண்ட, வாய் விடுஉம் வயல் அணி நல் ஊர!
கண்ணி, நீ கடி கொண்டார்க் கனைதொறும், யான் அழ,
பண்ணினால் களிப்பிக்கும் பாணன் காட்டு என்றானோ—
'பேணான்' என்று உடன்றவர் உதிர் செய்த வடுவினான்,
மேல்நாள், நின் தோள் சேர்ந்தார் நகைசேர்ந்த இதழினை?
நாடி நின் தூது ஆடி, துறை செல்லாள், ஊரவர்
ஆடைகொண்டு ஒலிக்கும், நின்புலைத்தி காட்டு என்றாளோ—
கூடியார் புனல் ஆடப் புணை ஆய மார்பினில்
ஊடியார் எறிதர, ஒளி விட்ட அரக்கினை?

வெறித்து நின் புகழ்களை வேண்டார் இல் எடுத்து ஏத்தும்
அறிவுடை அந்தணன் அவளைக் காட்டு என்றானோ—
களி பட்டார் கமழ் கோதை கயம்பட்ட உருவின்மேல்
குறி பெற்றார் குரற் கூந்தற் கோடு உளர்ந்த துகளினை?
என ஆங்கு
செறிவுற்றேம், எம்மை நீ செறிய; அறிவுற்று,
அழிந்து உகு நெஞ்சத்தேம்; அல்லல் உழப்ப;
கழிந்தவை உள்ளாது, கண்ட இடத்தே,
அழிந்து நிற் பேணிக் கொளலின் இழிந்ததோ—
இந் நோய் உழத்தல் எமக்கு? — *கலி 72*

*இரட்டையாய்ச் சேர்ந்து உயர்ந்த நீலப்பட்டால் ஆன மெல்லிய படுக்கை. அது தன் துணையுடன் கூடிய அன்னப் பறவையின் தூவியால் மெல்லிய அணை. அதில் அமர்ந்து ஒருத்தி வெள்ளிக் கிண்ணத்தில் வார்க்கப்பட்ட பாலைச் சிறிது காட்டி அக் கிளியை உண்பிக்க அது அதை உண்ணாது போக, அஃது உண்பதற்குரிய சொற்களைச் சொல்லி உண்ணச் செய்து முத்தம் கொடுப்பவள். நீர்நிலையில் உள்ள புதிய நீரில் உள்ள பசுமையான புதர் மீது இடை விடாது வரும் அலைகள் மோதுதலால் அதன் சிறு துளிகள் இடையிலே உள்ள தாமரை அரும்பு மீது வீசும் வண்டு நுகர அந்த அரும்பு மலராமல், கரையில் உள்ள மா மரத்தின் பிஞ்சு, மதியை நோக்கி மலரும் இயல்புடைய ஆம்பலின் வெண்மையான மலரை முதலில் தீண்டிப், பின் அத் தாமரை அரும்பைத்*

தீண்டிட, அது மலரும். அது பாலைக் கிளிக்கு ஊட்டுப வளின் முகம்போல் விளங்கும். இத்தகைய வயல் பொருந்திய நல்ல ஊரனே!

நம்மைப் போற்றவில்லை என்று சினங்கொண்ட பரத்தை யர், தம்மைப் போற்றுதற்காக நகத்தால் செய்த வடுக் காரணமாக அவர்க்குப் பின் உள்ள நாளிலே உன் தோளைச் சேர்ந்த பரத்தையருடைய பற்கள் அழுந்திய உதட்டை, நீ காவலைப் பூண்ட பரத்தையரைப் புணருந்தோறும் யாம் அழும்படி உன்னைப் பண்ணால் மகிழச் செய்யும் பாணன் எனக்குக் காட்டு என்று சொன்னானா?

உன்னைக் கூடிய பரத்தை மகளிர், நீராடுவதற்குத் தெப்பமான உன் மார்பிலே அப் புனலாட்டைப் பெறாமல் ஊடிய மகளிர் சாதிலிங்கம் இருந்த சிமிழோடு அதனை எறிய, அதனால் விளக்கம் உடைய சாதிலிங்கத்தை, உன்னைக் கூடற்குரிய பரத்தையரைத் தேடித் தூதாய்த் திரிந்து, நீர்த் துறைக்குச் செல்லாது, ஊரில் உள்ளவரின் ஆடைகளைச் சேர்த் துக் கொண்டு, அவற்றை வெளுக்காமல் திரியும் நின்னுடைய வண்ணாத்தி எனக்குக் காட்டுவாயாக எனக் கூறினாளா?

புணர்ச்சியால் மகிழ்ச்சி அடைபவரது மாலை முயக்கத் தால் மென்மை அடைவதற்குக் காரணமான விடிவின் மேல் அதன் பின்பு நின் குறியிடம் பெற்றவரின் மயிரைப் பெற்ற முடியை நீ வகிர்ந்து அழகுபடுத்தி முடிப்பதனால் விழுந்து கிடந்த பூந்துகளை உன் புகழைக் கேட்க வேண்டாத எங்கள் இல்லத்தில், ஒரு பயனில்லாமல் புகழ்ந்து பேசும் இயல்புடைய அந்தணன் அவளைக் காணும்படி செய் என்று கூறினானா?

முன்னம் நீ எம்மை முயங்கியதால் யாமும் உன்னை முயங்கினோம். இக் காலத்தில் நீ செய்யும் குறைகளை அறிந்து அதனால் அழிந்து கெடும் மனம் உடையவர் ஆனோம். அதன் மேல் வருத்தத்தில் தங்கும்படியாய் நீ செய்துவிட்ட இக் குறைகளைக் குறையென்று நினைக்காமல் உன்னைக் கண்ட அளவில் நெஞ்சழிந்து உன்னைப் பேணிக் கொள்வதால் இக் காமநோயிலே தங்குதல் எமக்குத் தாழ்ந்த ஒரு செயலோ? இஃது இழிந்தன்று என்று ஊடலை உதறிச் சொன்னாள் இல்லக்கிழத்தி.

## 230. பொய்க்கு கைகொடோம்

அகன் துறை அணி பெற, புதலொடு தாழ்ந்த
பகன்றைப் பூ உற நீண்ட பாசடைத் தாமரை,
கண் பொர ஒளி விட்ட வெள்ளிய வள்ளத்தான்
தண் கமழ் நறுந் தேறல் உண்பவள் முகம் போல,
வண் பிணி தளை விடூஉம் வயல் அணி நல் ஊர!

'நோதக்காய்' என நின்னை நொந்தீவார் இல்வழி,
'தீது இலேன் யான்' எனத் தேற்றிய வருதிமன்—
ஞெகிழ் தொடி இளையவர் இடை முலைத் தாது சோர்ந்து,
இதழ் வனப்பு இழந்த நின் கண்ணி வந்து உரையாக்கால்?

கனற்றி நீ செய்வது கடிந்தீவார் இல்வழி,
'மனத்தில் தீது இலன்' என மயக்கிய வருதிமன்—
அலமரல் உண்கண்ணார் ஆய் கோதை குழைத்த நின்
மலர் மார்பின் மறுப்பட்ட சாந்தம் வந்து உரையாக்கால்?

என்னை நீ செய்யினும், உரைத்தீவார் இல்வழி,
முன் அடிப் பணிந்து, எம்மை உணர்த்திய வருதிமன்—
நிரை தொடி நல்லவர் துணங்கையுள் தலைக் கொள்ள,
கரையிடைக் கிழிந்த நின் காழகம் வந்து உரையாக்கால்?
என ஆங்கு
மண்டு நீர் ஆரா மலி கடல் போலும் நின்
தண்டாப் பரத்தை தலைக்கொள்ள, நாளும்
புலத் தகைப் பெண்டிரைத் தேற்றி; மற்று யாம்எனின்
தோலாமோ, நின் பொய் மருண்டு — *கலி 73*

*அகலமான நீர் அருந்தும் துறை. அஃது அழகுடைய தாகும்படி சிறு புதருடன் பொருந்தித் தாழ்ந்து கிடக்கும் பகன்றையின் பூவைச் சேரும்படி வளர்ந்த பசிய இலையை யுடைய தாமரை அரும்பு. அது கண்குத்திக் கூசும்படி செய்யு மாறு ஒளிவிட்ட வெள்ளிக் கிண்ணத்தால் குளிர்ந்த கள்ளை உண்பவள் முகம் போல் தளை அவிழும். இத்தகைய வயல் உடைய நல்ல ஊரனே!*

*நீ நீங்கிச் செல்வதால் கழலும் தொடியுடைய பரத்தை யரின் முலையிடையில் தாதுகள் உதிர்ந்து இதழ்கள் அழ*

கிழந்த நின் மாலை உனக்கு உட்பகையாய் உன் பரத்தமையை எமக்குச் சொல்லும். அங்ஙனம் சொல்லாதபோது, நீ நாங்கள் வெறுக்கத்தக்க பரத்தமை உடையாய் என்று ஒரு காலத்து நின்னை வெறுப்பவர் இல்லாத இடத்து நான் தீதிலேன் என்று தேற்றுவதற்கு எம்மிடம் வருவாயாக. அதனாற் பெற்றதென்?

தம் வயப்படுபவரைத் தேடிச் சுழலும் கண்களை உடைய பரத்தையரின் அழகிய மாலைகள் புணர்ச்சியால் குழைவித்த நின் பரந்த மார்பில் பூசிய இயல்பு அழிந்த சந்தனம் உனக்கு உட்பகையாய் அமைந்து நின் பரத்தமையை எமக்கு உரைக்கும். அங்ஙனம் உரைக்காத போது, நெஞ்சைச் சுடச் செய்து நீ மேற் கொண்ட பரத்தமையை வெறுப்பார் இல்லாத இடத்தே 'நான் பரத்தமையான தீமையுடையேன் அல்லேன்' என்று எம் மனத்தில் ஊடல் உணர்த்துவதற்கு வருவாயாக. அதனால் பெற்றதென்?

வரிசையான வளையையுடைய பரத்தையர் ஆடுகின்ற துணங்கைக் கூத்தில் நீ சென்று தலைக்கை கொடுத்தல் தொழிலை நின்னிடம் கொள்வதால் அவரது சிலம்பு சிக்கிக் கரையில் கிழிந்த உன்னுடைய நீல ஆடை உனக்கு உட் பகையாய் அமைந்து, உன் பரத்தமையை எமக்கு எடுத்துக் கூறாது போது நீ எப்படிப் பெரிய குறைகளைச் செய்தாலும் இக் குற்றங்களைச் செய்கின்றாய் எனச் சொல்பவர் இல்லாத இடத்து அடியில் விழுந்த பணிந்து எம்மை ஊடல் உணர்த்து வதற்கு வருவாயாக. அதனால் பெற்றது என்?

ஆற்றினின்று மிகுந்து போய் விழுகின்ற நீரால் நிறையாத பெருங்கடல் போல் நின் அமையாத பரத்தமை மேலிடலால், நாள்தோறும் உன்னோடு புலவிகொள்ளும் தகுதியையுடைய பெண்டிரைத் தெளிவிப்பாய். பின்பு நாங்களோ உன் பொய்யை மெய்யாக எண்ணி உனக்குத் தோல்வி அடையா திருப்போம்! தோற்போம் அன்றோ!' என்று எம் தங்கை யர்க்குச் சொல்வாயாக! எனப் பொய் கூறும் தலைவனிடம் தலைவி ஊடிக் கூடினாள்.

## 231. பித்துடையது நின் தேர்!

பொய்கைப் பூப் புதிது உண்ட வரி வண்டு கழிப் பூத்த
நெய்தல் தாது அமர்ந்து ஆடி, பாசடைச் சேப்பினுள்,
செய்து இயற்றியது போல வயல் பூத்த தாமரை,
மை தபு, கிளர் கொட்டை மாண் பதிப் படர்தரூஉம்
கொய் குழை அகை காஞ்சித் துறை அணி நல் ஊர!

அன்பு இலன், அறன் இலன், எனப்படான்' என ஏத்தி,
நின் புகழ் பல பாடும் பாணனும் ஏமுற்றான்.

நஞ்சுஉயிர் செகுத்தலும் அறிந்து உண்டாங்கு, அளி இன்மை
கண்டும், நின் மொழி தேறும் பெண்டிரும் ஏமுற்றார்.

முன்பகல் தலைக்கூடி, நன்பகல் அவள் நீத்து,
பின்பகல் பிறர்த் தேரும் நெஞ்சமும் ஏமுற்றாய்.
என ஆங்கு
'கிண்மணி மணித் தாரோடு ஒலித்து ஆர்ப்ப, ஒண் தொடிப்
பேர் அமர்க் கண்ணார்க்கும் படு வலை இது' என,
ஊரவர் உடன் நகத் திரிதரும்
தேர் ஏமுற்றன்று, நின்னினும் பெரிதே. *– கலி 74*

*வரிகளையுடைய வண்டு பொய்கையில் மலர்ந்துள்ள பூவின் தேனை உண்டது. பின் கழியில் மலர்ந்த நெய்தல் மலரின் தேனை உள்ளம் பொருந்தி உண்டது. வயலில் பசிய இலைகளையுடைய சேப்பங்கிழக்குச் செடியினிடையே கையால் செய்து வைத்தாற் போன்று பூத்த கருகிய இதழ் களை உடைய தாமரைப் பூவினது கொட்டையான பதி யிடத்தில் அவ் வண்டு மீண்டுவரும். இத்தகைய இயல்புடைய மகளிர் கொய்யும் தழை தளிர்க்கின்ற காஞ்சி மரத்தை யுடைய துறையையுடைய நல்ல ஊரனே!*

*அவன் அன்பில்லாதவன் என்றும் அறம் உடையவன் அல்லன் என்றும் உன்னால் சொல்லப்படாதவன் என்று இப்படி நின்னைப் புகழ்ந்துன் புகழ் பலவற்றையும் பாடிக் காட்டுகின்ற பாணனும் பித்து உடையவன் ஆனான்.*

*நஞ்சானது தன்னை உண்டவரின் உயிரைப் போக்கும் என அறிந்திருந்தும் அதனை உண்டதைப் போன்று உன்*

மனக் கருத்து அருள் இன்றி வருத்துவதைக் கண்டிருந்தும் உன் பொய்ம் மொழியை மெய்ம்மொழியாய்க் கருதும் பரத்தையரும் பித்துக் கொண்டவர் ஆவார்.

முன்பகல் எல்லாம் ஒருத்தியிடத்தே கூடியிருந்து உச்சிக் காலம் எல்லாம் அவளைக் கைவிட்டுப் பலரிடத்துப் போய் மாலையில் கூடுவதற்கு வேறு சிலரை நாடும் உன் நெஞ்சமும் பித்து உடையது.

சதங்கை, தண்டை சிறுமணிகள் கோத்த மாலையுடன் ஒலியெழுந்து ஆரவாரிப்ப, தொடியையும் பெரிய கண்ணையும் உடைய பரத்தையர்க்கும் அவர்கள் அகப்படுத்துவதற்குக் காரணமான வலை இது தேர்வென்று கூறி, ஊரவர் எல்லாரும் ஒரு சேரச் சிரிக்கும்படி திரியும் நின் தேரும் உன்னைவிடப் பெரியதாய்ப் பித்தேறியது. ஆனால் யான் பித்துடையவள் அல்லள் என்று ஊடினாள் தலைவி.

## 232. ஊடல் நீங்கியதற்குக் காரணம்

'நீர் ஆர் செறுவில் நெய்தலொடு நீடிய
நேர் இதழ் ஆம்பல் நிரை இதழ் கொண்மார்,
சீர் ஆர் சேயிழை ஒலிப்ப, ஓடும்
ஓரை மகளிர் ஓதை வெரீஇ எழுந்து,
ஆரல் ஆர்கை அம் சிறைத் தொழுதி
உயர்ந்த பொங்கர் உயர் மரம் ஏறி,
அமர்க் கண் மகளிர் அலப்பிய அந் நோய்
தமர்க்கு உரைப்பன போல், பல் குரல் பயிற்றும்
உயர்ந்த போரின் ஒலி நல் ஊரன்
புதுவோர்ப் புணர்தல் வெய்யன் ஆயின்,
வதுவை நாளால் வைகலும், அஃது யான்
நோவேன், தோழி! நோவாய், நீ' என
எற் பார்த்து உறுவோய்! கேள், இனித் தெற்றெனா:

'எல்லினை வருதி; எவன் குறித்தனை?' எனச்
சொல்லாதிருப்பேனாயினி, ஒல்லெனா,
விரிஉளைக் கலி மான் தேரொடு வந்த
விருந்து எதிர்கோடலின், மறப்பல், என்றும்.

'வாடிய பூவொடு வாரால், எம் மனை' என
ஊடியிருப்பேனாயின், நீடாது,
அச்சு ஆறாக உணரிய வருபவன்
பொய்ச் சூள் அஞ்சிப் புலவேன் ஆகுவல்.

பகல் ஆண்டு அல்கினை, பரத்த! என்று யான்
இகலியிருப்பேனாயின், தான் தன்
முதல்வன் பெரும் பெயர் முறையுளிப் பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த் துயில் துஞ்சும்.
ஆங்க –
விருந்து எதிர் கொள்ளவும், பொய்ச் சூள் அஞ்சவும்,
அரும் பெறல் புதல்வனை முயங்கக் காணவும்,
ஆங்கு அவிந்து ஒழியும், என் புலவி தாங்காது,
அவ்அவ் இடத்தான் அவைஅவை காண–
பூங் கண் மகளிர் புனை நலம் சிதைக்கும்
மாய மகிழ்நன் பரத்தைமை
நோவென், தோழி! கடன் நமக்கு எனவே. – *கலி 75*

*நீர் நிறைந்த கழனியில் வளர்ந்த ஒத்த இதழையுடைய நெய்தல் மலருடன் ஆம்பலின் மலர்களைப் பறிப்பதற்காகச் சிலம்பு முதலியவை ஒலிக்க ஓடுவர் விளையாட்டு மகளிர். அவர்களின்அணி செய்யும் ஆரவாரத்துக்கு அஞ்சி எழுந்து ஆரல் மீனை உண்ணும் அழகிய சிறகையுடைய பறவைக் கூட்டம் உயர்ந்த மரத்தின் கொம்பில் போய் அமரும். அங்கே இருந்து போரிடும் கண்களையுடைய மகளிர் தம்மை வருத்திய அந்தத் துன்பத்தை அம் மகளிரின் சுற்றத்தவர்க்கு உரைப்பவை போல் பல குரலால் பல முறையும் சொல்லும் இத்தகைய இயல்புடைய உயர்ந்த போர்களால் உண்டாகிய நல்ல ஆரவாரத்தையுடைய ஊரை உடையவன். அவன் புதிய பரத்தையரை மணம் செய்தலை எக் காலமும் விரும்புவானா யின், அதற்கு ஏற்றபடி நாள்களும் மணத்துக்குரிய நாள் களாக இருப்பின், தோழி, அந்த ஒழுக்கத்திற்கு நான் வருந்துவேன். நீ அதற்கு ஒரு காலமும் வருந்தாய் எனக் கூறி என்னை நோக்கி, 'வருத்தம் அடைபவளே, இனி அவன் செய்தியை உன் மனம் தெளியுமாறு கூறுவேன்; கேட்பாயாக!*

மணம் செய்து கொண்ட பின்பு அவ் விளக்கமான தோற்றத்துடன் வருகின்றாய். எங்களை எத் தகையர் என எண்ணினாய் என்று புலந்து சொல்லி மேலும் ஒரு சொல் சொல்லாமல் ஊடி இருப்பேனானால், அது நீங்கப் பரந்த கழுத்தின் மயிரையும் மனச் செருக்கையும் உடைய குதிரைகள் பூட்டப்பட்ட தேரிலே ஏற்றிக் கொண்டு வந்த விருந்தினரை வரவேற்று எதிர்கொள்வதால் எந்நாளும் புலவியை மறப்பேன்.

பரத்தையுடன் கூடிய முயக்கத்தால் வாடிய மலருடனே எம் வீட்டுக்கு வராதே எனச் சொல்லி, நான் ஊடல் கொண்டிருப்பேனாயின், அவன் பொய்ச் சூளுக்கு நாம் அஞ்சும் அச்சமே ஊடலை உணர்த்தும் வழியாகக் கொண்டு ஊடலை உணர்த்த வருவான். அவன் கூறும் அப் பொய்யாகிய சூளுக்கு அஞ்சி ஊடாமல் இருப்பேன்.

பரத்தமை உடையவனே, பகற் பொழுதெல்லாம் பரத்தையர் இல்லத்தில் தங்கினாய் என்று கூறி யான் அவனுடன் மாறுபட்டிருந்தால், அவன் தன் தந்தையின் பெயரைப் பெறும் முறையால் பெற்ற மகனைத் தழுவிக் கொண்டு பொய்யாக உறக்கம் கொண்டவன் போல் கிடந்து வருந்துவான்.

தோழியே, மலர் போன்ற கண்ணையுடைய மகளிர் கை செய்த நலத்தை கெடுக்கும் பொய்யில் வல்ல தலைவனின் பரத்தமையால், மனம் செய்து கொண்டு, மனையில் எல்லாம் அம் மங்கையர் ஊடலால் செய்த வடுக்களைக் காண முறைமையாயிற்றே என்று எண்ணி யான் வருந்தியிருப்பேன். நான் இவ்வாறாகவும், விருந்தினரை எதிர் கொள்வதாலும் அவன் பொய்யான சூளால் நமக்கு வருத்தம் உண்டாகும் என்று அஞ்சுவதாலும் பெறுவதற்குரிய அரிய மகனைத் தழுவிக் கொண்டு அவன் உறங்குவதைக் காண்பதாலும் என் நெஞ்சம் புலவியை முழுக்கத் தாங்காது. அவனிடத்து அது கெட்டுப் போகும். இதுவே யான் அடையும் துன்பம் என்று வேற்று மொழி கூறிய தோழிக்கு தலைவி ஊடற் காரணம் உரைத்தாள்.

## 233. நாம் இனி செயற்பாலது?

'புனைஇழை நோக்கியும், புனல் ஆடப் புறம் சூழ்ந்தும்,
அணி வரி தைஇயும், நம் இல் வந்து வணங்கியும்,
நினையுபு வருந்தும் இந் நெடுந்தகை திறத்து, இவ் ஊர்
இனையள் என்று எடுத்து ஓதற்கு அனையையோ, நீ' என
வினவுதியாயின், விளங்கிழாய்! கேள், இனி:

'செவ்விரல் சிவப்பு ஊரக் சேண்சென்றாய்' என்று, அவன்
பௌவ நீர்ச் சாய்க் கொழுதிப் பாவை தந்தனைத்தற்கோ—
'கௌவை நோற் உற்றவர் காணாது கடுத்த சொல்
ஒவ்வா' என்று உணராய், நீ ஒரு நிலையே உரைத்ததை?

ஒடுங்கி, யாம் புகல் ஒல்லேம் பெயர்தர, அவன் கண்டு,
நெடுங் கய மலர் வாங்கி, நெறித்துத் தந்தனைத்தற்கோ—
விடுந்தவர் விரகு இன்றி எடுத்த சொல் பொய்யாகக்
கடிந்ததும் இலையாய், நீ கழறிய வந்ததை.

'வரி தேற்றாய், நீ' என, வணங்கு இறை அவன் பற்றி,
தெரி வேய்த் தோள் கரும்பு எழுதித்
தொய்யில் செய்தனைத்தற்கோ—

புரிபு நம் ஆயத்தார் பொய்யாக எடுத்த சொல்
உரிது என உணராய், நீ உலமந்தாய் போன்றதை?
என ஆங்கு
அரிது இனி, ஆயிழாய்! அது தேற்றல்; புரிபு ஒருங்கு,
அன்று நம் வதுவையுள் நமர் செய்வது இன்று, ஈங்கே,
தான் நயந்து இருந்தது இவ்வூர் ஆயின், எவன்கொலோ—
நாம் செயற்பாலது, இனி? — *கலி 76*

*நன்கு செய்யப்பட்ட அணிகளைக் கிடக்கும் முறையில் கிடக்கும்படி திருத்தியும், நான் நீரில் ஆட நமக்கு ஒரு துன்பம் வாராமல் வெளியில் சூழ்ந்தும் திரிந்தும், அழகிய தொய்யில் எழுதியும், நான் இயற்றிய சிற்றிலில் வந்து ஏவல் தொழில் செய்தும், நம் கூட்டத்தை நினைந்து வருந்துபவன் தலைவன். இந்தப் பெரிய தகுதியுடையவனிடம் இவள் கூட்டத்தை உடையவள் என்று இந்த ஊரில் உள்ளவர் பல முறையும்*

கூறுவர். அங்ஙனம் கூறுவதற்கு நீ அத் தகைய கூட்டத்தை அத் தலைவனுடன் உடையாயோ என்று நீ கேட்பாயாயின், விளங்கும் அணியை தோழியே, நான் சொல்வதைக் கேட்பாயாக:

அலர் தூற்றுவதையே நோயாய்க் கொண்டிருப்பவர் தீய மகளிர். அவர் ஆராய்ச்சி செய்யாது 'இது தகாது எனக் கூறிய சொல் இவளுக்குப் பொருந்தாது' என்று உணராமல், நீயும் அவர்கள் கூறியதையே கூறியது ஏன்? சிவந்த விரல் மேலும் சிவப்பு அடைய நேரும்பொழுது நின்று பறிக்கின் றாய் என்று கூறி எனக்கு இரங்கி, அவன் கடல்நீர் வந்து ஏறிய கழியில் உள்ள தண்டான் கோரையைப் பறித்துக் கிழித்துப் பாவை யாக்கித் தந்தான் என்ற அந்தச் சிறிய உதவிக்காகவா?

தீயவர் என்று எல்லாராலும் கைவிடப்பட்ட மகளிர் அங்ஙனம் கூறுதல் தீயது என்று உணர்கின்ற திறம் இல்லாது, பல முறையும் கூறிய சொல் பொய்யாகக் கெடும்படி தவிர்வதின்றி, என்னை நீ சினத்தற்கு வந்தது ஏன்? நீர் நிலை யில் யான் புகாமல் மீள, அவன் அதைக் கண்டு பெரிய நீர் நிலையின் மலரைப் பறித்துப் புற இதழை ஒடித்துத் தந்த அந்தச் சிறிய உதவிக்காகவா?

காவலை மேற்கொண்டு காக்கும் நம் தோழியர் காவல் பொய்யாய்ப் போகுமாறு இவ் ஊரவர் பலகாலும் கூறியதை நீ பொய் என்று உணராதவளாய் இவளுக்கு (எனக்கு) உரியது என்று கலக்கம் அடைந்தவரைப் போல் இருந்தது ஏன்? 'நீ தொய்யில் எழுத அறியாய்' என்று சொல்லி வளை வான முன்கையை அவன் பிடித்து மூங்கில் போன்ற தோளில் கரும்பை எழுதிப் பின் அத் தொய்யில் குழம்பால் மேலும் எழுதுவதற்கு உரியவற்றை எழுதின அச் சிறிய உதவிக்காகவா?

ஆயிழாய், நெஞ்சில் நிகழ்ந்த இக் காரியம் இனித் தெளியச் செய்வது அரிது. இனி நம் வதுவையில் நம் சுற்றத்தவர் ஒன்றுகூட விரும்பிச் செய்யும் செயலை இன்று இவ் இடத்தே இவ் ஊர் விரும்பி இருந்ததாயின் அதற்கு நாம் செய்யக் கூடியது ஏது? என்று தலைவி தோழிக்குக் கூறினாள்.

## 234. தோயுலம் எனல் முடியுமோ!

இணை இரண்டு இயைந்து ஒத்த முகை நாப்பண்,
பிறிது யாதும்
துணை இன்றித் தளை விட்ட, தாமரைத் தனி மலர்;
திருமுகம் இறைஞ்சினள், வீழ்பவற்கு இனைபவள்
அரி மதர் மழைக் கண் நீர் அலர்முலைமேல் தெறிப்பபோல்,
தகை மலர்ப் பழனத்த புள் ஒற்ற, ஒசிந்து ஒல்கி,
மிக நனி சேர்ந்த அம் முகைமிசை அம்மலர்
அக இதழ்த் தண் பனி உறைத்தரும் ஊர! கேள்:

தண் தளிர்த் தகை பூத்த தாது எழில் நலம் செலக்
கொண்டு, நீ மாறிய கவின் பெறல் வேண்டேன்மன்—
உண்டாதல் சாலா என் உயிர் சாதல் உணர்ந்து, 'நின்
பெண்டு' எனப் பிறர் கூறும் பழி மாறப் பெறுகற்பின்?

பொன் எனப் பசந்த, கண் போது எழில் நலம் செல;
தொல் நலம் இழந்த கண் துயில் பெறல் வேண்டேன்மன்
நின் அணங்கு உற்றவர் நீ செய்யும் கொடுமைகள்
என்னுழை வந்து, நொந்து உரையாமை பெறுகற்பின்?

மாசு அற மண் உற்ற மணி ஏசும் இருங் கூந்தல்
வீசேர்ந்து வண்டு ஆர்க்கும் கவின்பெறல் வேண்டேன்மன்
நோய் சேர்ந்த திறம் பண்ணி, நின் பாணன், எம் மனை
நீ சேர்ந்த இல் வினாய் வாராமை பெறுகற்பின்?

ஆங்க—
'கடைஇய நின் மார்பு தோயலம்' என்னும்
இடையும், நிறையும் எளிதோ – நிற் காணின்,
கடவுபு, கைத்தங்கா, நெஞ்சு என்னும் தம்மோடு
உடன் வாழ் பகை உடையார்க்கு? *– கலி 77*

*தனியான தாமரை மலர் இரண்டு சேர்ந்து விளங்கும் முகைகளுக்கு நடுவே வேறொரு பூ சிறிதும் சேர்தல் இயலாது மலர்ந்தது தான் விரும்பியவனுக்கு அழகை யுடைய முகம் கவிழ்ந்து அழுகின்றவளின் கண்ணின் நீர், முலைகள் மேல் விழுவனபோல், அத் தாமரை மலர்கள் அழகையுடைய வயலில் உள்ள பறவைகள் வந்து தாக்கச் சாய்ந்து வளைந்து*

மிகவும் இணைந்த அந்த முகைகளின் மேலே தம் உள்ளிதழ் நீரைத் துளிக்கும். இத்தகைய இயல்புடைய ஊரனே, கேட்பாயாக:

'உண்டு' எனக் கூற இயலாத என் உயிர் அவ்வளவில் நில்லாது இறப்பை உணர்ந்தும் நின் மனைவி என்று மற்றவர் உரைக்கும் பழி நீங்கப் பெறின், குளிர்ந்த தளிரில் விழுந்து அழகு பொலிவு பெற்ற தாதினைப் போல் எழிலையுடைய மாமை நிறமும் சுணங்கும் என்னிடமிருந்த நீங்குமாறு பெற்றுக் கொண்டு பின்பு ஒருகாலும் தாராமல் விட்ட அழகைத் திரும்பவும் பெற விரும்பேன். அதனால் என்ன? நின் மனைவி என்ற பெயர் போகாது ஆயிற்றே!

கண்கள் மலரின் அழகையுடைய வனப்பு போகும்படியாகப் பொன்னைப்போல் பசலை கொண்டன உன்னால் வருத்தம் அடைந்த பரத்தையர் செய்யும் கொடுமைகளை என்னிடம் வந்து வெறுத்துக் கூறாமையை நான் பெற்றால், இயற்கை நலத்தையும் இழந்த அக் கண் உறக்கம் பெறுவதை விரும்பேன் ஆயினும் என்?

அவ்வாறு என்னை இகழ்ந்து கூறுதலைக் கைவிட மாட்டாரே!

உன் பாணன் வருத்தம் உண்டாக்கும் தன்மையுடைய பண்ணை இசைத்தபடி எம் மனையில் வந்து நீ போயிருக்கும் பரத்தையர் இல்லத் தைப்பற்றி என்னைக் கேட்ட வண்ணம் வாராதிருத்தலை யான் பெற்றேனானால், தூய்மை செய்யப் பெற்ற நீல மணியை நீ நிகராகமாட்டாய் என்று இகழும் கரிய கூந்தல் பூவணிந்து வண்டுகள் ஆரவாரிக்கும் அழகைப் பெற்றிட நான் விரும்ப மாட்டேன்; அதனால் என்ன? அவன் அங்ஙனம் வினவி வருதலைக் கைவிட மாட்டானே!

உன்னைக் கண்டால் என்னை உன்னிடத்தே செலுத்தித் தானும் உன்னிடத்தே தங்கி வருந்தும் நெஞ்சு என்று சொல்லப்படும் உடன் வாழும் உட்பகையை உடையவர்க்கு, முன்பு எம்மை உன்மேல் வீழ்வித்த உன்மார்பைக் கூட மாட்டேன் என்று எண்ணும் 'நிறை' என்ற குணத்தை அடைவது எளியதோ! அஃது அரிதாகும் எனத் தலைவி, தலைவனிடம் சொல்லி ஊடல் நீங்கினாள்.

## 235. ஊடல் தீர்த்தவள் உரை

பல் மலர்ப் பழனத்த பாசடைத் தாமரை
இன் மலர் இமிர்பு ஊதும் துணை பணர் இருந் தும்பி,
உண்துறை உடைந்த பூப் புனல் சாய்ப்ப, புலந்து, ஊடி—
பண்புடை நல் நாட்டுப் பகை தலை வந்தென,
அது கைவிட்டு அகன்று ஓரீஇ, காக்கிற்பொன் குடை நீழற்
பதி படர்ந்து, இறைகொள்ளும் குடி போல — பிறிதும் ஒரு
பொய்கை தேர்ந்து அலமரும் பொழுதினான், மொய் தப
இறை பகை தணிப்ப அக் குடி பதிப் பெயர்ந்தாங்கு,
நிறை புனல் நீங்க வந்து, அத் தும்பி அம் மலர்ப்
பறை தவிர்பு அசைவிடூஉம் பாய் புனல் நல் ஊர!

'நீங்குங்கால் நிறம் சாய்ந்து, புணருங்கால் புகழ் பூத்து,
நாம்கொண்ட குறிப்பு, இவள்நலம்' என்னும் தமையோதான்
எரி இதழ் சோர்ந்து உக ஏதிலார்ப் புணர்ந்தமை
கரி கூறும் கண்ணியை, ஈங்கு எம் இல் வருவதை?
'சுடர்நோக்கி மலர்ந்து, ஆங்கே படின் கூம்பும்மலர்போல், என்
தொடர் நீப்பின், தொகும், இவள் நலம்' என்னும் தகையோ தான்—
அலர் நாணிக் கரந்த நோய் கைம்மிக, பிறர் கூந்தல்
மலர் நாறும் மார்பினை, ஈங்கு எம் இல் வருவதை?

பெயின்நந்தி, வறப்பின்சாம், புலத்திற்குப் பெயல்போல், யான்
செலின்நந்தி செறின்சாம்பும், இவள்' என்னும் தகையோதான்
முடி உற்ற கோதை போல் யாம் வாட, ஏதிலார்
தொடி உற்ற வடுக்காட்டி, ஈங்கு எம் இல் வருவதை?
ஆங்க—
ஐய அமைந்தன்று; அனைத்தாகப் புக்கீமோ,
வெய்யாரும் வீழ்வாரும் வேறாக; கையின்
முகை மலர்ந்தன்ன முயக்கில் தகை இன்றே,
தண் பனி வைகல் எமக்கு? — *கலி 78*

*பல மலர்கள் உள்ள மருத நிலத்தில் உள்ள பசுமையான தாமரையினது கண்ணுக்கு இனிய மலரை ஆரவாரித்துச் சென்று மொய்க்கும் துணையுடன் கூடியது வண்டு. பலரும் நீரை உண்ணும் துறையில் பூவைப் பெருகி வரும் நீர் சாய்க்க*

அதனால் அப் பூவில் இருத்தலை அவ் வண்டு வெறுத்து அந் நீருடன் ஊடியது. நல்ல குணங்களை உடைய பகை ஒரு நாட்டுக்கு வந்ததாக அந் நாட்டை விட்டுக் குடிமக்கள் நீங்கிச் செல்வர். அங்குத் தன் நாட்டைக் காப்பவனின் குடைநிழல் ஊர்களை எண்ணியபடி தங்குவர். அவர்களைப்போல் அவ் வண்டு வேறு ஒரு பொய்கையைத் தனது இருப்பிடமாய்க் கொண்டு பழைய பொய்கையை எண்ணிச் சுழலும் காலம். அப்போது அந்த மன்னன் தன்னை எதிர்த்து வந்த பகையின் வலிமை கெடும்படி பகையை அழிக்க, அதனால் அக் குடி மக்கள் திரும்பத் தம் ஊரிடத்தே மீண்டு வருவர். அது போல், பெருகி வந்த அந்த நீர் வற்றியதால் மீண்டும் திரும்பி வந்து அந்த வண்டு அந்தத் தாமரை மலரில் பறத்தலை விட்டு இளைப்பாறும். இத்தகைய பரந்த புனலைக் கொண்ட நல்ல ஊரனே -

தீயைப்போல் நிறம் உடைய இதழ்கள் வாடி உதிரப் பரத்தையரைப் புணர்ந்ததற்குச் சான்றாய் எமக்கும் மாலையை உடையவனாய் எம் வீட்டில் யாம் இருக்கின்ற இடத்தே வருதல் இவளது நலம் நாம் பிரியும் காலத்தில் நிறம் கெட்டுப், புணரும் காலத்துப் பரத்தையர் புகழும் பொலிவு பெற்று நாம் மனத்தில் கொண்ட கருத்தாய் இருக்கும் என்று எண்ணி இருக்கும் தன்மையோதான்!

மற்றவர் சொல்லும் அலருக்கு நாணி மறைத்த காம நோய் ஒழுக்கத்து எல்லையைக் கடக்க, பிறர்-பரத்தையர் - கூந்தலில் மணம் நாறும் மார்பையுடையவனாய் எம் வீட்டில் யான் இருக்கும் இடத்தில் வருவது, இவள் பெண்மை நலம் கதிரவனைக் கண்டு அலர்ந்த தாமரைப்பூ அந்தக் கதிரவன் மறையும் அளவில் குவிந்தாற்போல் என் தொடர்பு நீங்கின் வறிதாகிவிடும் என்னும் தன்மையோதான்!

முடியில் பொருந்துகின்ற மலர் மாலையைப்போன்று யான் வாட, நீ உம் பரத்தையர் தொடியால் தோற்றுவிக்கப் பட்ட வடுவைக் காட்டி இங்கு எம் வீட்டில் யாம் இருக் கின்ற இடத்துக்கு வரும் தன்மை, இவள், மழை பெய்தால் வளம் பெற்று, பெய்யாது போனால் உலரும் நிலத்துக்கு, அம் மழை பெய்து விளைவித்தும் பெய்யாது கெடுத்தும் போமாறு

போல், யான் சென்றேனாயின் செருக்கிச் செல்லாமல் வருத்தின் கெடும் என்று நீ நினைத்திருக்கும் தன்மையோ!

உம் பரத்தையர் தன்மையால் பலரும் வியக்கத்தக்கவை உமக்குப் பொருந்தின உம்மை விரும்புபவரும் நீவிர் விரும்பு பவரும் ஆகிய பரத்தையரும் உமக்கு வேறுபடும் படியாய் இங்கு நில்லாமல் அப் பரத்தையர் மனைக்கே செல்வீராக தன் இயல்பால் மலராது கையால் வலிய மலர்த்துவதால் அரும்பு அலர்ந்தது போன்று இனிமையற்ற முயக்கத்தில் எமக்குக் குளிர்ந்த பனிக்காலம் அப்படிக் கொடியதா யிருக்க நீவிர் இல்லாமல் தங்குதல் நல்ல தன்மையில்லையோ அது தன்மையுடையதோ என்று உடல் நீங்கும் தலைவி சொன்னாள்

## 236. போ பரத்தையரிடமே

புள் இமிழ் அகல் வயல் ஒலி செந்நெல் இடைப் பூத்த
முள் அரைத் தாமரை முழு முதல் சாய்த்து, அதன்
வள் இதழ் உற நீடி வயங்கிய ஒரு கதிர்
அவை புகழ் அரங்கின்மேல் ஆடுவாள் அணி நுதல்
வகை பெறச் செரீஇய வயந்தகம் போல், தோன்றும்
தகை பெறு கழனி அம் தண் துறை ஊர! கேள்:

அணியொடு வந்து ஈங்கு எம் புதல்வனைக் கொள்ளாதி;
மணி புரை செவ் வாய் நின் மார்பு அகலம் நனைப்பதால்;
'தோய்ந்தாரை அறிகுவேன், யான்' என, கமழும் நின்
சாந்தினால் குறி கொண்டாள் சாய்குவள் அல்லளோ?

புல்லல் எம் புதல்வனை; அகல் நின் மார்பில்
பல் காழ் முத்து அணி ஆரம் பற்றினன் பரிவானால்;
மாண் இழை மட நல்லார் முயக்கத்தை நின் மார்பில்
பூணினால் குறி கொண்டாள் புலக்குவாள் அல்லளோ?

கண்டே எம் புதல்வனைக் கொள்ளாதி; நின் சென்னி
வண்டு இமிர் வகை இணர் வாங்கினன் பரிவானால்;
'நண்ணியார்க் காட்டுவது இது' என, கமழும் நின்
கண்ணியால் குறி கொண்டாள் காய்குவள் அல்லளோ?
என ஆங்கு

பூங் கண் புதல்வனைப் பொய் பல பாராட்டி,
நீங்காய் இகவாய் நெடுங் கடை நில்லாதி;
ஆங்கே அவர் வயின் சென்றீ – அணி சிதைப்பான்–
ஈங்கு என் புதல்வனைத் தந்து. – *கலி 79*

*பறவைகள் ஒலிக்கின்ற அகன்ற வயல் அதில் ஒலிக்கும் செந்நெல். அதனிடையே மலர்ந்த முட்களையுடைய தாமரை செந்நெல் முழு வடிவத்தையும் சாய்க்கையால் அதன் வள மான இதழைப் பொருந்தும்படி வளர்ந்து பூவில் கிடந்து விளங்கும் ஒரு கதிர் அஃது அவையில் உள்ளவர் புகழும் அரங்கத்தில் ஆடுபவளின் தலைக் கோலத்தினின்று நெற்றி யில் தாழும்படி ஒரு வடமாகச் செருகி வைக்கப்பட்ட 'வயந்தகம்' என்ற அணியைப் போல் தோன்றும். இத்தகைய அழகு மிக்க கழனியுடைய குளிர்ந்த துறையை உடையவனே!*

*நீ பரத்தையரிடத்து அணிந்த அணியுடன் இங்கு வந்து எம் மகனை எடுக்காதே! அவனது மணி போன்ற வாயின் நீர் உன் மார்பின் பரப்பை எல்லாம் நனைப்பதாய் உள்ளது அவ்வாறு அது நனைக்குமானால், யான் நின் மார்பில் சேர்ந்தவரை அறிவேன் என்று சொல்லி மணம் கமழும் நின் சந்தனத்தால் அயலார் தழுவலை மனத்தால் கருதுபவள் பரத்தை வருந்துவாள் அல்லளோ!*

*எம் மகனைத் தழுவாதே, பரத்தையர் கொண்டாடுதலை யுடைய உன் அகன்ற மார்பில் கிடக்கும் பல வடங்களை உடைய முத்து அணிந்த மாலையைக் கையால் பிடித்து அறுப்பவனாய் என் மகன் உள்ளான் அவன் அங்ஙனம் அறுத்தால் சிறந்த அணிகளையும் மடப்பத்தையும் உடைய மகளிர் முயங்கிய முயக்கத்தை உன் மார்பில் கிடக்கும் அணியால் எண்ணுதலை மனத்துக் கொண்டவள் வெறுப்புக் கொள்வாள் அல்லளோ?*

*எம் மகன் தானே நின்னிடம் வரக்கண்டும் அவனை எடுத்துக் கொள்ளாதே! உன் தலையில் வண்டுகள் ஒலிக்கின்ற கூறுபாட்டைக் கொண்ட பூங்கொத்தின் பூக்களை உதிர்ந்து அதனை அறுப்பவனாய் என் மகன் உள்ளான். அங்ஙனம் அவன் அறுத்தால் உன்னைத் தழுவியவர்களை அறிவிப்பது இம் மாலையாகும் என்ற சொல்லி மணம் கமழும் நின்*

*மாலையால் பிறர் முயக்கத்தை அறிந்து கொள்பவள் பரத்தை சினம் கொள்வாள் அல்லளோ?*

*மலர் போலும் கண்ணையுடைய எம் மகனைப் பல பொய்களை சொல்லிப் பாராட்டி அவனை விட்டுப் போகா மல் பரத்தையர் குறிக்கொண்ட நிலைமையைக் கடவாமல் எம் வீட்டின் வாயிலில் நில்லாதே. நின்றால் அவன் அணியை அழிப்பவன் ஒருவனாய் உள்ளான் ஆதலால் அம் மகனை இங்கே தந்து விட்டு அந்தப் பரத்தையர் சேரியில் உள்ள அப் பரத்தையரிடமே செல்வாயாக! என்று ஊடி தலைவி சினத்துடன் கூறினாள்.*

## 237. இனியதும் இன்னாததும்

நயம் தலை மாறுவார் மாறுக; மாறா,
கயந் தலை மின்னும் கதிர் விடு முக் காழ்,
பயந்த எம் கண் ஆர யான் காண நல்கி–
திகழ் ஒளி முத்து அங்கு அரும்பாகத் தைஇப்
பவழம் புனைந்த பருதி சுமப்ப,
கவழம் அறியா நின் கை புனை வேழம்
புரி புனை பூங் கயிற்றின் பைபய வாங்கி,
அரி புனை புட்டிலின் ஆங்கண் ஈர்த்து, அங்கே
வருக! எம் பாக மகன்!

கிளர் மணி ஆர்ப்ப ஆர்ப்பச் சாஅய்ச் சாஅய்ச் செல்லும்
தளர் நடை காண்டல் இனிது; மற்று, இன்னாதே
'உளம்' என்னா நுந்தைமாட்டு எவ்வம் உழப்பார்
வளை நெகிழ்பு யான் காணுங்கால்.

ஐய! காமரு நோக்கினை, அத்தத்தா என்னும் நின்
தே மொழி கேட்டல் இனிது; மற்று, இன்னாதே
உய்வு இன்றி நுந்தை நலன் உணச் சாஅய்ச் சாஅய்மார்
எவ்வ நோய் யாம் காணுங்கால்.

ஐய! 'திங்கட் குழவி, வருக!' என, யான் நின்னை
அம்புலி காட்டல் இனிது; இன்னாதே
நல்காது நுந்தை புறம் மாறப்பட்டவர்
அல்குல் வரி யாம் காணுங்கால்.

ஐய! எம் காதில் கனங் குழை வாங்கி, பெயர்தொறும்
போது இல் வறுங் கூந்தல், கொள்வதை, நின்னை யாம்
ஏதிலார் கண் சாய நுந்தை வியல் மார்பில்
தாது தேர் வண்டின் கிளை பட, தைஇய
கோதை பரிபு ஆட; காண்கும். – *கலி 80*

*பாகனாகிய மகனே, நின்னிடம் அன்பு நீங்குவார் நீங்குக. உன்னைப் பெற்ற எம் கண் நிறைய அன்பு நீங்காத யான் உன் வரவைக் காணும்படி அருளி, மென்மையான தலையில் கிடந்து மின்னும் ஒளிவீசும் மூன்று வடங்களை உடையவனே, விளிம்பில் முத்தை அரும்பாக அழுத்திப் பவழத்தால் செய்த வட்டப் பலகை அமைந்து நிற்க நின்ற, கவள உணவை உண்ண அறியாத, கையால் செய்யப்பட்ட யானையை, நின் காலில் கட்டிய செச்சை என்ற அணி ஒலிக்க, வளைத்து முப்புரியாய் முறுக்கின கயிற்றால் மெல்ல மெல்ல இழுத்து இங்கு வருவாயாக.*

*விளங்கும் மணிகள் ஆரவாரிப்ப அசைந்து அசைந்து நடக்கும் தளர்ந்த நின் நடையைப் பார்த்து மகிழ்ந்திருத்தல் எமக்கு இனியது ஆகும். அதுபோக உன் தந்தையிடத்து எங்கள் உள்ளம் என்று சொல்லி வளை கழன்று விழ நின்று வருத்தத்தில் தங்கும் மகளிரை யான் காணுமிடத்து அத் தோற்றம் இன்னாது.*

*ஐய, விருப்பம் தரும் அழகை உடையவனாய் 'அத்தா அத்தா' என்று நீ கூறும் இனிய சொல்லைக் கேட்டு மகிழ் வுடன் இருத்தல் எமக்கு இனிதாகும். அது கிடக்க, உம் தந்தை, மகளிர் அழகு கெடுதற்கு அவர் நலத்தை உண்பதால் தளர்ந்த துன்பத்தைத் தரும் நோயை யாம் காணுமிடத்து அஃது இன்னாது.*

*ஐய! 'திங்களாகிய குழந்தையே! நீ இவனுடன் விளை யாட வருவாயாக!' என்று கூறி, அத் திங்களுக்கு உன்னைக் காட்டி மகிழ்வது எமக்கு இனிது. அதுபோக, உம் தந்தை அருளாமல் தமக்கு மனம் மாறுபடும் அருளைக் கை விட்ட மகளிரின் அல்குலில் உண்டாகும் பசப்பைக் காணுதல் இன்னாது.*

ஐய! எம் காதில் உள்ள பொன்னால் செய்யப்பட்ட மகரக் குழை என்ற அணியை எடுத்துச் சென்று போய் எம்மிடத்தில் மீண்டும் வருந்தோறும் எம் பூ இல்லாத வெறும் கூந்தலில் உன்னை எடுத்து வைத்துக் கொள்வது உம் தந்தை மார்பில் பூந்தாதை உண்ணும் வண்டுக் கூட்டம் மொய்க்கும்படி கட்டிய பூ மாலையை அறுத்து விளையாடுவதற்காக. நீ அவ்வாறு விளையாடினால் யாமும் எமக்குப் பகையானவரிடத்து அவன் வைத்த அன்பு குறையக் காண்போம் என்றாள் தலைவனின் கூடா ஒழுக்கத்தை வெறுத்து மகனிடம் தலைவி.

## 238. புதல்வனை நோக்கி தாய் கூறல்

மை அற விளங்கிய மணி மருள் அவ் வாய் தன்
மெய் பெறா மழலையின் விளங்கு பூண் நனைத்தர,
பொலம் பிறையுள் தாழ்ந்த புனை வினை உருள் கலன்,
நலம் பெறு கமழ் சென்னி நகையொடு துயல்வர,
உரு எஞ்சாது இடை காட்டும் உடை கழல் அம் துகில்
அரி பொலி கிண்கிணி ஆர்ப்பு ஒவா அடி தட்ப,
பாலோடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்
கால் வல் தேர் கையின் இயக்கி நடை பயிற்றா,
ஆல் அமர் செல்வன் அணி சால் பெரு விறல்
போல, வரும் என் உயிர்!

பெரும! விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்,
பெருந் தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்ற,
திருந்துபு நீ கற்ற சொற்கள் யாம் கேட்ப,
மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம் அயின்றற்றா,
பெருந்தகாய்! கூறு சில.

எல்லிழாய்! சேய் நின்று நாம் கொணர்ந்த
பாணன் சிதைந்து, ஆங்கே
வாய் ஓடி, 'ஏனாதிப்பாடியம்' என்றற்றா,
'நோய் நாம் தணிக்கும் மருந்த' எனப் பாராட்ட,
ஓவாது அடுத்து அடுத்து, 'அத்தத்தா' என்பான் மாண
வேய் மென் தோள் வேய்த்திறம் சேர்த்தலும், மற்று இவன்
வாயுள்ளின் போகான்அரோ.

உள்ளி உழையே ஒருங்கு படை விடக்
கள்ளர் படர்தந்தது போல, தாம் எம்மை
எள்ளுமார் வந்தாரே ஈங்கு.

ஏதப்பாடு எண்ணி, புரிசை வியல் உள்ளோர்
கள்வரைக் காணாது,'கண்டேம்' என்பார் போல,
சேய் நின்று செய்யாத சொல்லிச் சினவல் நின்
ஆணை கடக்கிற்பார் யார்?

அதிர்வு இல் படிறு எருக்கி, வந்து என் மகன்மேல்,
முதிர் பூண் முலை பொருத ஏதிலாள் முச்சி
உதிர் துகள் உக்க நின் ஆடை ஒலிப்ப,
எதிர் வளி நின்றாய், நீ செல்.

இனி, 'எல்லா யாம் தீதிலேம்' என்று தெளிப்பவும், கைந்நீவி
யாதொன்றும் எம்கண் மறுத்தரவு இல்லாயின்,
மேதக்க எந்தை பெயரனை யாம் கொள்வேம்,
தாவா விருப்பொடு கன்று யாத்துழிச் செல்லும்
ஆ போல் படர் தக, நாம். *– கலி 81*

*குற்றம் இல்லாது விளங்கும் மணி போன்ற அழகு பொருந்திய வாய் தனது எழுத்து வடிவம் கொள்ளாத மழலைச்சொல் சொல்வதால் பிறந்த நீரால், விளங்கும் அணியை நனைக்கவும், நன்மை பொருந்திய தலையில் கிடந்த பொன்னால் செய்த பிறையுள் சேர்த்த முத்து மாலையுடன் நெற்றியில் தொங்கும் உருண்ட 'சுட்டி' விளக்கத்துடனே அசையவும், நிறத்தை ஒழியாமல் தோற்றுவிக்கும் உடுத்த லின்று கழன்ற அழகான ஆடை, தண்டை ஒலிக்கும் ஒலி மாறாத அடியைத் தடுக்கவும், பாலினால் விம்மிய முலையை மறந்து முற்றத்தில் உருளையுடைய தேரைக் கையால் செலுத்தி நடத்தலைக் கற்று ஆலின் கீழ் அமர்ந்த இறைவனின் மகன் முருகப் பெருமானைப் போல வரும் என் உயிரே!*

*பெருமையுடையவனே, பெருந்தகைமை பொருந்திய வனே, உன் மழலைச் சொல்லைக் கேட்டு இனிமை மாறா திருக்கும் மனத்துக்கு அமுதத்தை உண்டது போல் இன்னும் இனிதாக. விருந்தினர் வருவதால் செயல் ஒழியாத எம்மையும் நினைக்காது தாயர் பெருந் தெருவில் உன்னைக் கொண்*

டாடிக் கற்பிக்கக் கற்பிக்க நீ அவர்களிடம் திருத்தமாய்க் கற்ற சொற்களை யாம் கேட்கும்படி கூறு வாயாக. இது மகனை நோக்கித் தலைவி கூறியது. அடுத்தது தோழியை நோக்கிச் சொன்னது. ஒளியுடைய அணிமணி அணிந்தவளே!

நம்மிடம் பழக்கமுடைய பாணன் 'நீ இப்போது எங்குள்ளாய்?' என்று வினவப் பரத்தையர் சொல்லில் மனம் பொருந்தி நமக்கு அயலவனாய் நின்று, வாயால் கூறும் சொல் சிதைந்து, 'ஏனாதிப் பாடியத்தேம்' என்று கூறிய தன்மை போல், நமது நோயைத் தணித்தற்குக் காரணமான மருந்து என்று நாம் பாராட்ட, மாறாமல் 'அத்தா, அத்தா' என்று அடுத்து அடுத்துக் கூறுபவனை அவனது தவற்றைக் கருதாது நம் மூங்கில் போன்ற தோளிலே ஏற்றிக் கொண்ட பின்பும் இவனது வாயினின்று போகாமல் உள்ளான்! இதற்குக் காரணம் என்ன? தலைவி தன் மகனைப் பார்த்து நீ கற்றவற்றுள் ஒன்றைக் கூறு என்று வினவினாள். அவள் கேட்ட அப்போது தலைவன் தலைவிக்குப் பின்புறமாய் வந்தான். தன் வருகையைத் தலைவிக்குத் தெரிவிக்க வேண்டா எனச் சைகை செய்தான் தோழியர்க்கு. அதனால் அவன் வருகையை அறியாத தலைவி, தோழியை நோக்கி நாம் இவன் கற்றதைச் சொல் என்றால் இவன் தந்தையையே சொல்லி வருத்துகிறான் என்றாள் தந்தையைப் பார்த்துவிட்டதால் மகன் 'அத்தா, அத்தா' என்று அழைத்தான்.

அவ்வாறு வினவிய தலைவி, தோழியின் குறிப்பாலும், மகன் 'அத்தா அத்தா' என்று அழைத்ததாலும், தலைவன் வந்துவிட்டான் என்பதை உணர்ந்து, 'பகைவரை எண்ணி அவரிடத்தே படைக்கலங்களைச் சேரவிடுதற்குக் கள்வர் வருதல் போன்று, இங்கு எம்மை இகழ்வதற்காகவே வந்தார். நம் மீது அன்பு கொண்டு வந்தவர் அல்லர்' எனத் தலைவன் கேட்பத் தோழியை நோக்கிச் சொன்னாள்.

அதைக் கேட்ட தலைவன் மதிலையுடைய ஊரில் காவலர் கள்வரைக் கண்ணால் காணாதிருக்கவும், அவரால் வரும் குற்றத்தை உணர்ந்து இங்குக் கள்வரைக் கண்டோம் என்று கூறுபவரைப் போன்று முன் நில்லாது ஒரு பக்கமாகச் சென்று நின்று, யான் செய்யாத குற்றங்களைக் கூறிச் சினம் கொள்ள

வேண்டா. நின் ஆணையின்படி நடக்காது மீறி நடப்பவர் இங்கு யார் இருக்கின்றார்? என்றான் தலைவன்.

அதைக் கேட்ட தலைவி, நடுக்கம் அற்ற வஞ்சனையால் வருத்தி என் மகள் மேல் வேட்கை உண்டாக அதை நினையாமல் வந்தாய். அணியையுடைய முதிர்ந்த முலைகளால் நின் மார்போடு தழுவிய பரத்தை முடியினின்றும் உதிர்ந்த பூந்துகள் சிந்திக் கிடந்த உன் ஆடையில் உள்ளதைப் போக்கவே காற்றின் எதிரே நின்றாய் இவ்வாறு நில்லாதே போ! என்றாள்.

அதைக் கேட்ட தலைவன், "ஏடி! நான் தீங்கற்றவன் என்று சூள் உரைத்தேன் இச் சூளினையும் மீறி எம்மிடத்துச் சிறிதும் சினந்த நிலையினின்று மீட்பு இல்லை என்றால், கன்றைக் கட்டின இடத்தில் கெடாத விருப்புடனே போகும் பசுவைப் போல் நாம் இனி நம்மிடம் வரும்படி மேன்மையுடைய என் தந்தையின் பெயர் கொண்ட இம் மகனை யான் எடுத்துக் கொள்வேன் என்றான்.

## 239. இனி வெளிச் செல்லல் முடிந்தது!

ஞாலம் வறம் தீரப் பெய்ய, குணக்கு ஏர்பு,
காலத்தில் தோன்றிய கொண்மூப் போல், எம் முலை
பாலொடு வீங்கத் தவ நெடிதாயினை
புத்தேளிர் கோட்டம் வலம் செய்து இவனொடு
புக்க வழி எல்லாம் கூறு.

கூறுவேன்; மேயாயே போல வினவி, வழிமுறைக்
காயாமை வேண்டுவல், யான்.

காயேம்
மடக் குறு மாக்களோடு ஓரை அயரும்
அடக்கம் இல் போழ்தின் கண் தந்தை காமுற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்காற்கு, அவளும்
மருப்புப் பூண் கையுறையாக அணிந்து
'பெருமான், நகைமுகம் காட்டு!' என்பாள் கண்ணீர்
சொரி முத்தம் காழ் சோர்வ போன்றன; மற்றும்,
வழிமுறைத் தாயுழைப் புக்காற்கு, அவளும்
மயங்கு நோய் தாக்கி, மகன் எதிர் வந்து

முயங்கினள் முத்தினள் நோக்கி, நினைந்தே,
'நினக்கு யாம் யாரேம் ஆகுதும்' என்று,
வனப்பு உறக் கொள்வன நாடி அணிந்தனள்
ஆங்கே, 'அரி மதர் உண்கண் பசப்ப நோய் செய்யும்
பெருமான் பரத்தைமை ஒவ்வாதி' என்றாள்
அவட்கு இனிதாகி விடுத்தனள் போகித்
தலைக் கொண்டு நம்மொடு காயும் மற்று ஈது ஓர்
புலத் தகைப் புத்தேள் இல் புக்கான் அலைக்கு ஒரு
கோல் தா; நினக்கு அவள் யார் ஆகும்? எல்லா!
வருந்தி யாம் நோய் கூர, நுந்தையை என்றும்
பருந்து எறிந்தற்றாக் கொள்ளும்; கொண்டாங்கே,
தொடியும் உகிரும் படையாக நுந்தை
கடியுடை மார்பின் சிறு கண்ணும் உட்காள்,
வடுவும் குறித்தாங்கே செய்யும், விடு, இனி;
அன்ன பிறவும், பெருமான் அவள்வயின்
துன்னுதல் ஓம்பி, திறவது இல் முன்னி, நீ
ஐயம் இல்லாதவர் இல் ஒழிய, எம் போலக்
கையாறு உடையவர் இல் அல்லால் செல்லல்;
அமைந்தது, இனி நின் தொழில். – ***கலி 82***

*உலகம் வற்கடம் நீங்கும்படி மழை பெய்வதற்குக் கிழக்குத் திக்கில் எழுந்து கூதிர் காலத்தில் தோன்றிய முகில் போன்று, எம் முலை, பாலினால் விம்மும்படி நீ சென்ற காலம் மிகவும் நீண்டது எனக் கூறும்படி ஆயிற்று எனவே, தேவர் கோயில் வந்து பின் இவனுடன் நீ சென்ற இடங் களை எல்லாம் எமக்குச் சொல் என்றாள் தலைவி.*

*அதைக் கேட்ட தோழி, "நான் சொல்வேன் கூறுவதைக் கேட்டுக் கொண்ட பின் சினம் கெள்ளாதிருத்தலை உன்னிடம் வேண்டுவேன்," என்று சொன்னாள்.*

*அதைக் கேட்ட தலைவி "உன்னைச் சினக்க மாட்டேன். நீ கூற வேண்டியவற்றைக் கூறுவாயாக!" என்றாள்*

*அதைக் கேட்ட தோழி, மடப்பத்தை உடைய சிறிய அறி வற்ற மகளிருடன் விளையாட்டுப் பொம்மையைக் கொண்டு விளையாடி, வேண்டியவாறே ஒழுகினான். அங்ஙனம் ஒழுகும் போது, இவனுடைய தந்தை விரும்பிய முதல் பரத்தையாகிய*

தாயிடத்துச் சென்றான். அங்ஙனம் சென்றவனுக்கு அவளும் எருது இலச்சினையை கைக்காணிக்கையாய் இட்டாள். இட்டுப் 'பெரியோய்! நின் சிரிப்புடைய முகத்தை நான் முத்தமிடுதற்குக் காட்டுவாயாக' என்றாள். அவளுடைய கண்ணீர் துளிகளோ முத்து வடங்கள் அறுந்து முத்துகள் கழன்று விழுவதைப் போன்று விளங்கின.

பின்பு அவளுக்கு அடுத்து வந்த தாயிடம் அவன் சென்றான். அங்ஙனம் சென்றவனுக்கு அவளும் மனம் மயங்கு தற்குக் காரணமான காமநோயைப் பொறுத்துக் கொண்டு எதிர் வந்து தன் மகனைத் தழுவிக் கொண்டாள். முத்தம் தந்தாள். இவனை அவள் பார்த்துத் தலைவன் தன்னைக் கைவிட்ட தன்மையை நினைந்து 'உனக்கு யாங்கள் தாயாகும் முறைமை! எம்மை அவன் நீங்கினபின் யாங்கள் இனி எம் முறை ஆவோம்?' என்று கூறினாள். இவனுக்கு அழகு மிகும்படி இவனது வடிவு தாங்கும்படி பிள்ளைகளுக்குப் பூட்டக்கூடிய அணிகளை அணிந்தாள். அப்படி அணிகின்ற பொழுதே, மகளிரின் கண்கள் பசலை கொள்ளும்படி அவர் களுக்குத் துன்பத்தைத் தரும் நின் தந்தையின் பரத்தமைக் குணம் ஒன்றையும் நீ கொள்ளாதே!" என்றாள். அவ்வாறு உரைத்தவளுக்கு இனிதாகச் சில மறுமொழிகளை மகன் கூறினான். பின் நம் போன்ற தலைமைத் தன்மை கொண்ட நம்முடன் சினம் கொண்டிருக்கும் புதியவளின் இல்லத்துக்குப் போனான்". என்று தோழியுரைத்தாள்

அதைக் கேட்ட தலைவி, "ஏடா! நான் வருந்தி நோய் மிகுதிப்பட உன் தந்தையை எந்நாளும் தான் நினைத்த ஒன்றைப் பருந்து எடுத்துக் கொண்டாற்போல் நினைக் கொண்டு போவாள். கைக் கொண்ட அப்போதே தொடியும் நகமும் அவை போன்ற பிறவும் தனக்குப் படைக்கலமாய்க் கொண்டு உன் தந்தையின் மார்பிலும் பிற இடங்களிலும் தான் எண்ணிய வண்ணமே குறிகளை ஏற்படுத்துவாள். எனவே, அவள் உனக்கு என்ன உறவு கொண்டவள்? இவனை நான் அடிப்பதற்கு ஒரு கொம்பைத் தருவாய்" என்றாள்.

அதற்கு அஞ்சி அவன் அழுதான். அதைக் கண்ட தலைவி, "இனி அழுகையை விடு" என்றாள். நின் தந்தையின்

*பரத்தையிடத்து நீ சேர்தலை விடுத்து, நீ செல்வதற்குத் தக்க இல்லிலும், 'அவன் நீங்குவானோ நீங்கானோ என்று ஐயம் கொள்ளாமல் உறுதியாய் நீங்கமாட்டான் எனத் துணிந்த பரத்தையர் இல்லத்திலும் செல்ல வேண்டா. எம்மைப் போல் செயலற்றவர் இல்லத்தில் செல்வதே அல்லாது வேறோர் இல்லத்தில் நீ செல்லாதே. இனி, நீ வெளியே போகும் தொழில் முடிந்தது" எனச் சொன்னாள். மகனை கோயிற்கு அனுப்பிய தலைவி வழியில் பரத்தியர் அவனுக்கு அணி செய்ய அதனைப் பக்கம் இருந்த தலைவன் கேட்பத் தலைவி கூறினாள்.*

## 240. வெந்த புண்ணில் வேல்!

பெருந் திரு நிலைஇய வீங்கு சோற்று அகல் மனை,
பொருத்து நோன் கதவு ஒற்றிப் புலம்பி யாம் உலமர,
இளையவர் தழூஉ ஆடும் எக்கர் வாய் வியன் தெருவின்
விளையாடிக்கொண்டு வரற்கு எனச் சென்றாய்,
உளைவு இலை; ஊட்டலென் தீம் பால்
பெருகும் அளவெல்லாம்
நீட்டித்த காரணம் என்?

கேட்டீ –
பெருமடற் பெண்ணைப் பிணர்த்தோட்டுப் பைங் குரும்பைக்
குட வாய்க் கொடிப் பின்னல் வாங்கி, தளரும்
பெரு மணித் திண் தேர்க் குறுமக்கள் நாப்பண்,
அகல் நகர் மீள்தருவானாக, புரி ஞெகிழ்பு
நீல நிரைப் போது உறு காற்கு உலைவன போல்,
சாலகத்து ஒல்கிய கண்ணர், உயர் சீர்த்தி
ஆல் அமர் செல்வன் அணி சால் மகன் விழாக்
கால்கோள்' என்று ஊக்கி, கதுமென நோக்கி,
திருத்துஅடி நூபுரம் ஆர்ப்ப இயலி, விருப்பினால்,
'கண்ணும், நுதலும், கவுளும், கவவியார்க்கு
ஒண்மை எதிரிய அம் கையும், தண் எனச்
செய்வன சிறப்பின் சிறப்புச் செய்து, இவ் இரா
எம்மொடு சேர்ந்து சென்றீவாயால் செம்மால்!

நலம் புதிது உண்டு உள்ளா நாணிலி செய்த
புலம்பு எலாம் தீர்க்குவேம் மன்' என்று இரங்குபு,
வேற்று ஆனாத் தாயர் எதிர்கொள்ள, மாற்றாத
கள்வனால் தங்கியது அல்லால், கதியாதி,
ஒள்ளிழாய் யான் தீது இலேன்.

எள்ளலான், அம் மென் பணைத் தோள்
நுமர் வேய்ந்த கண்ணியோடு
எம் இல் வருதியோ? எல்லா நீ தன் மெய்க்கண்
அம் தீம் சொல் நல்லார் அணிந்த கலம் காட்டி,
முந்தை இருந்து மகன் செய்த நோய்த்தலை
வெந்த புண் வேல் எறிந்தற்றால், வடுவொடு
தந்தையும் வந்து நிலை. *– கலி 83*

*பெருஞ் செல்வம் நிலைபெற்ற மிக்க சோற்றை உடைய பெரிய இல்லத்தின் இரட்டையாய் வந்து கூடும் கதவைத் தொட்டு, நின்று, பிள்ளையை அனுப்பி விட்டுத் தனித்து யாம் வருந்தினோம். வருந்த, பிள்ளைகள் எல்லாம் ஒன்று கூடி விளையாடும் இடுமணல் பொருந்திய அகன்ற தெருவிலே பிள்ளையை விளையாடவிட்டு அழைத்துக் கொண்டு வரச் சென்றனை நீ. இனிய பாலை யான் இம் மகனுக்கு ஊட்டாமல் அப் பால் மிகுதியாகச் சுரக்கும் அளவெல்லாம் பிள்ளை பால் உண்ணாதிருந்ததற்கு உன் மனத்தில் வருந்தாது காலம் நீட்டிய காரணம் யாது? என்று வினவினாள் தலைவி, தோழியை.*

*அதன் காரணத்தைக் கேட்பாயாக: பெரிய மடலையுடைய குடம் போல் திரண்ட இடத்தைக் கொண்ட சொர சொரப்பையுடைய பசுமையான குரும்பைக் கொடியால் கட்டிப் பின்னிய பின்னலை இழுத்து அதனால் இளைக்கும் சிறு பிள்ளைகளுக்கு நடுவே பெரிய மணி அழுத்திய தேரிலிருந்து அகன்ற மனையை நோக்கிச் செல்லலானான். வரிசையாய்க் குவளை மலர்கள் மலர்ந்து காற்றில் அசைவன போல் சாளரங்களில் ஒதுங்கிப் பார்த்த கண்களை உடையவர், பரந்த மிக்க புகழையுடைய ஆலமரத்தின் கீழ் வீற்றிருந்த இறைவனின் மகனான முருகப் பெருமானின் திருநாளுக்குக் கால்கோள்*

கொள்கின்ற நாள் என்று எண்ணினர். விரைந்து வந்து பார்த்தனர். இவன் ஆதலை அறிந்து அடியில் சிலம்பு ஒலிக்க அணுகி, உன் கண்ணாலும் நெற்றியாலும் கன்னத்தாலும் உன்னைத் தழுவிய தாயர்க்கு விளக்கத்தைத் தருதலை ஏற்றுக் கொண்டுள்ள அழகிய கையாலும், உன் தந்தைக்கு நீ செய்யும் சிறப்புகள்போல் எமக்கும் சிறப்புகள் செய்து இந்த இரவுக் காலத்தில் எம்முடன் தங்கிப் போக வேண்டும். தலைவா! இதனால் எங்கள் நலத்தின் புதுமையை அனுபவித்துப் பின்பு எங்களை நினைத்துப் பார்க்காத நாணம் இல்லாதவன் செய்த தனிமையையெல்லாம் பெரிதும் போக்குவோம் என்று கூறினர். இவனிடம் ஏற்பட்ட விருப்பத்தால் அமையாத வேற்றுத் தாயர் எதிர்கொள்ள, அதனை மறுக்காத இக் கள்வனாலே அங்குக் காலம் தாழ்க்க நேர்ந்தது. அதுவன்றி யான் வேறோர் தீது உடையவள் அல்லேன். ஒளி பொருந்திய அணியை உடையவளே! என் மீது சினம் கொள்ளாதே!" என்றாள் தோழி.

தலைவி அதைக் கேட்டு மகனை நோக்கி, "ஏடா! அழகுடைய மெத்தென்ற மூங்கில் போன்ற தோளையுடைய உன் தாயர் சூட்டிய மாலையுடன் எம் இல்லத்தில் நீ வருவாயோ, வாராயோ, என்று வெறுத்துச் சொன்னாள். அப் போது அங்குத் தலைவன் வந்தான். அதை அவள் கண்டாள். கண்டு மகன் முன் செய்த கொடுமைக்கு மேலே, எம்மை மனத்தால் இதழ்ந்திருத்தலால் தம் மெய்யில் கிடந்த அழகிய இனிய சொல்லை உடைய நல்ல மகளிர் அணிந்த கலங்களில் வடுவைக் காட்டி மற்ற வடுக்களுடன் தந்தையும் வந்து நிற்பது வெந்த ஒரு புண்ணில் வேல் எறிந்த தன்மையாய் உள்ளது என்று அவனொடு புலந்து பக்கம் இருந்த தலைவன் கேட்பத் தலைவி சொன்னாள்.

## 241. யானே தவறுடையேன்!

உறு வளி தூக்கும் உயர் சினை மாவின்
நறு வடி ஆர் இற்றவை போல் அழிய,
கரந்து யான் அரக்கவும், கை நில்லா வீங்கிச்
சுரந்த என் மென் முலைப் பால் பழுதாக – நீ

நல் வாயில் போத்தந்த பொழுதினான், 'எல்லா!
கடவுட் கடி நகர்தோறும் இவனை
வலம் கொளீஇ வா' என, சென்றாய் விலங்கினை—
ஈரம் இலாத இவன் தந்தை பெண்டிருள்
யார் இல் தவிர்ந்தனை? கூறு.

நீருள் அடை மறை ஆய் இதழ்ப் போதுபோல் கொண்ட
குடைநிழல் தோன்றும் நின் செம்மலைக் காணூஉ,
'இவன் மன்ற யான் நோவ உள்ளம் கொண்டு உள்ளா
மகன் அல்லான் பெற்ற மகன்' என்று அகல்நகர்
வாயில் வரை இறந்து போத்தந்து, தாயர்
தெருவில் தவிர்ப்பத் தவிர்ந்தனன், மற்று, அவர்
தம்தம் கலங்களுள் 'கையுறை' என்று இவற்கு,
ஒத்தவை ஆராய்ந்து அணிந்தார், 'பிறன் பெண்டிர்
ஈத்தவை கொள்வானாம், இஃது ஒத்தன்; சீத்தை,
செறு தக்கான் மன்ற பெரிது'.

சிறு பட்டி; ஏதிலார் கை, எம்மை எள்ளுபு நீ தொட்ட,
மோதிரம் யாஙோ யாம் காண்கு

அவற்றுள் நறா இதழ் கண்டன்ன செவ் விரற்கு ஏற்பச்
சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்
குறி அறிந்தேன்; 'காமன் கொடி எழுதி, என்றும்
செறியாப் பரத்தை இவன் தந்தை மார்பில்
பொறி ஒற்றிக்கொண்டு ஆள்வல்' என்பது தன்னை
அறீஇய செய்த வினை.

அன்னையோ? இஃது ஒன்று.
முந்தைய கண்டும், எழுகல்லாத என் முன்னர்,
வெந்த புண் வேல் எறிந்தற்றா, இஃது ஒன்று
தந்தை இறைத் தொடி மற்று இவன் தன் கைக்கண்
தந்தார், யார், எல்லாஅ! இது?

'இஃதுஒன்று என்ஒத்துக் காண்க, பிறரும் இவற்கு என்னும்
தன் நலம் பாடுவி, தந்தாளா, நின்னை
'இது தொடுக' என்றவர் யார்?

அஞ்சாதி; நீயும் தவறில்லை; நின் கை இரு தந்த
பூ எழில் உண்கணவளும் தவறிலள்;
வேனிற் புனல் அன்ன நுந்தையை நோவார் யார்?
மேல் நின்றும் எள்ளி, இது இவன் கைத் தந்தாள்—
தான் யாரோ? என்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடையேன்! — *கலி 84*

"ஏடி! நீ நல்ல நம் இல்லத்து வாயிலினின்று சென்ற போதில் தெய்வங்களை உடைய கோயில்கள் தோறும் இவனை வலம் செய்வித்து வா என நான் உரைத்தேன். நீயும் சென்றாய். சென்ற நீ, நான் சொன்ன சொற்படி நடக்க வில்லை. மா மரத்தின் உயர்ந்த கொம்புகளின்று மிக்க காற்றால் அசைக்கப் பட்ட மாம் பிஞ்சுகள் காம்பு முறியும். அவைபோல், பால் மிகுதிப்பட்டதால் அதை மறைத்து நான் உள்ளங்கையால் அமுக்கித் தேய்க்க, அந்தக் கையின் அளவிலே நில்லாது விம்மிச் சுரந்த என் மெல்லிய முலையின் பால், குழந்தை உண்ணாமல், பாழாகப் போகுமாறு இவன் தந்தையரின் பரத்தையருள் எவர் வீட்டில் தங்கினாய்? கூறு," என்றாள் தலைவி.

"நீரில் இலையின் கீழ் மறைந்து நின்ற அழகிய இதழை உடைய தாமரை மலரைப் போன்று, கையில் எடுத்த பச்சைக் குடையின் கீழ் தோன்றும் நின் பிள்ளையைக் கண்டனர் பரத்தையர்.

'யான் வருந்தும்படி என் மனத்தைக் கைக்கொண்டு பின்பு என்னை நினைத்துப் பார்க்காத நல்ல மகனல்லாத வன் தலைவன் பெற்ற மகன் இவனே' என்று எண்ணினர். அகன்ற மனையின் வாயிலை விட்டு வெளியில் வந்தனர் தெருவில். இவனைத் தடுத்தாள். இவன் சுவரிடத்தே தங்கி னான். அதனால் பின்பு அவர்கள் தங்கள் தங்களுடைய அணிகளில் இவனது வடிவிற்கு ஏற்றவற்றைத் தேர்ந்து அணிவித்தனர்". இவ்வாறு அப் பணிப் பெண் கூறினாள் அதைக் கேட்டாள் தலைவி. "தனக்கு அயலவனாயுள்ள தந்தையின் பரத்தையர் கொடுத்தவற்றை இவன் ஒருவன் பெற்றுக்கொள்வானாம்! இனி இவன் கைவிடப்படுபவன். உறுதியாய் இவன் சினக்கத் தக்கவனே" என்று தன் நெஞ்சுடன் கூறினாள்

காவல் இல்லாது வேண்டியவண்ணமே நடப்பவனே, நீ எம்மை இகழ்ந்தனைப் பரத்தையர் உனக்கு அணிவித்த கணையாழிகள் யாவை? நான் பார்க்கிறேன்.

அக் கணையாழிகள் நறவம் பூவைக் கண்டாற் போன்ற சிவந்த விரலுக்குப் பொருத்தமான ஆண்சுறா மீன் வடிவம் பொருந்திய ஆழியணை இட்டவளின் எண்ணத்தை அறி வேன். காமன் கொடியான மீனை ஆழியில் பதித்தாற் போன்று வேறொன்றில் அழுத்தி அதை எந் நாளும் அடங் காத பரத்தை குணமுடைய இவன் தந்தையின் மார்பில் பொறியாய் ஏற்றி அடிமையாகக் கொண்டு, அங்கு வருவேன் என்று சொல்கின்ற சொல்லினை எனக்கு அறிவிப்பதற்குச் செய்த ஒரு செயலே எனப் புலந்து அம் மகனுக்குச் சொன்னாள்.

நீயும் அத்தன்மை உடையவனோ? மகனான நீயும் என்னை இகழ்வாயோ? என்று மகனைப் பார்த்துச் சொன்னாள்

இத்தகைய இவ் இகழ்ச்சியும் நாமே செய்து கொண்டது எனத் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

பின்பு, "என் முன்னால் காணப்படும் இவ் அணிகளைக் கண்டு தலையெடுக்க மாட்டாத என் முன்பு வெந்த புண்ணில் வேல் எறிந்தாற் போல் இஃதொன்று, இவனுடைய தந்தை யின் முன்கைத் தொடி இதனை இவனது கையில் இட்டவர் யார் சொல்?" என்றாள் தலைவி.

அம் மகன் விடை சொல்லவில்லை. "ஏடா! இத் தொடி என்னை ஒழித்தவர்களும் இத் தலைவனுக்கு என்னை ஒழித்த வனப்பை வழிபடும் தன்மையைக் காண்பார்களாக என்று கூறும் தன் அழகை மிகுதிப்படுத்திப் புகழ்ந்தது கொள்பவள் தந்தது. இத்தகைய இகழ்ச்சியும் யாம் செய்து கொண்ட ஒன்று என நெஞ்சோடு கூறிக் கொண்டாள். கூறிக் கொண்டு மகனை நோக்கி, "உன்னை இத் தொடியை அணிந்து கொள்க என்று சொன்னவர் யார்தான்!" என்றாள்.

அவன் அஞ்சினான். அதைக் கண்டு அஞ்சாதே! இதை அணிந்து கொண்டு வந்த நீயும் தவறு உடையவன் இல்லை. உன் கையிலே இந்தத் தொடியை அணிவித்த மலரின் அழகு பொருந்திய மை பூசிய கண்ணையுடைய பரத்தையும் தவறு

*உடையவள் அல்லள். வேனிற் காலத்துப் புதிய நீரைப் போல் எல்லார்க்கும் பயன்படும் உன் தந்தையை நொந்து கொள்பவர் இல்லை நமக்கு மேலாய்த் தன்னலம் பாடிப் பின் நம்மை இகழ்ந்து இத் தொடியை இவனுடைய கையில் இட்டவள் யாரோ அன்றோ தவறுடையேன்? எனத் தன்னுள் அழிந்து சொன்னாள் தலைவன் தலைவி கேட்ப.*

## 242. பாலூட்டிய திறம்

காலவை, கடு பொன் வளைஇய ஈர் அமை சுற்றொடு
பொடி அழற் புறம் தந்த செய்வுறு கிண்கிணி.

உடுத்தவை, கைவினைப் பொலிந்த
காசு அமை பொலங் காழ்; மேல்
மை இல் செந் துகிர்க் கோவை; அவற்றின் மேல்
தைஇய, பூந் துகில், ஐது கழல் ஒரு திரை.

கையதை, அலவன் கண் பெற அடங்கச் சுற்றிய
பல உறு கண்ணுள் சில கோல் அவிர் தொடி.

பூண்டவை, எறியா வாளும் எற்றா மழுவும்
செறியக் கட்டி, ஈர் இடைத் தாழ்ந்த,
பெய் புல மூதாய்ப் புகர் நிறத் துகிரின்
மை அற விளங்கிய ஆன் ஏற்று அவிர் பூண்.

சூடின இருங் கடல் முத்தமும், பல் மணி, பிறவும், ஆங்கு
ஒருங்கு உடன் கோத்த உருள் அமை முக் காழ்; மேல்
கரும்பு ஆர் கண்ணிற்குச் சூழ் நூலாக,
அரும்பு அவிழ் நீலத்து ஆய் இதழ் நாண,
சுரும்பு ஆற்றுப்படுத்த மணி மருள் மாலை.

ஆங்க அவ்வும் பிறவும் அணிக்கு அணியாக, நின்
செலவு உறு திண் தேர்க் கொடுஞ் சினைக் கைப்பற்றிப்
பைபயத் தூங்கும் நின் மெல் விரற் சீறடி
நோதலும் உண்டு, ஈங்கு என் கை வந்தீ,
செம்மால்! நின் பால் உண்ணிய.

பொய் போர்த்துப் பாண் தலை இட்ட பல வல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கி, தான் வேண்டியார்

நெஞ்சம் பிணித்தல் தொழிலாத் திரிதரும்
நுந்தைபால் உண்டி, சில.

நுந்தை வாய் மாயச் சூள் தேறி மயங்கு நோய் கைமிக,
பூ எழில் உண்கண் பனி பரப்ப, கண் படா
ஞாயர்பால் உண்டி, சில.

அன்னையோ! யாம் எம் மகனைப் பாராட்ட, கதுமெனத்
தாம் வந்தார், தம் பாலவரோடு; தம்மை
வருக என்றார், யார்கொலோ, ஈங்கு?
என்பால் அல் பாராட்டு உவந்தோய்! குடி; உண்டீத்தை; என்
பாராட்டைப்பாலோ சில.

செருக் குறித்தாரை உவகைக் கூத்தாடும்
வரிசைப் பெரும் பாட்டொடு எல்லாம் பருகீத்தை -
தண்டுவென்—ஞாயர் மாட்டைப் பால். — *கலி 85*

*மகனே! உன் காலில் உள்ளவை, ஓர் அணிகலன் பொன்னால் வளைத்த இரண்டாய் அமைந்த 'காற்சரி' என்ற அணியுடன் பண்ணுதலைத் தான் உறும் பொடிமூடும் தழலால் நிறம் உண்டாக்கப்பட்ட தண்டையாகும்.*

*உன் இடையில் உடுத்தவை, கைத்தொழிலால் பொலிவு கொண்ட மணிகள் இடையிடை அமைந்த பொன்மணிகளை யுடைய வடம், அதன் மீது அழுக்கற்ற சிவந்த பவள வடம் அவற்றின் மீது உடுத்தின அழகாய்க் கழலும் திரைத்த ஓர் பூந்துகில்*

*நின் கையில் நண்டின் கண்ணின் இயல்பு பொருந்தப் பல அரும்புத் தொழில் சூழ்ந்த சில திரட்சித் தொழில் விளங்கும் இரண்டாய்ச் சேரும் தொடி.*

*நீ அணிந்தவை, வெட்டா வாள், வெட்டாத மழு ஆகியவை நெருங்கக் கட்டிய இரண்டு பக்கங்களிலும் தங்கிய மழைக்காலத்துத் தம்பலப் பூச்சியின் புள்ளியைப் பெற்ற பவளத்தால் செய்த அழுக்கு இல்லாமல் விளங்கும் காளை வடிவுடைய அணி.*

*சூடப்பட்டவை, கரிய கடலில் விளைந்த முத்தும் அதனுடனே பல மணிகள் சேரக் கோத்த உருட்சி அமைந்த மூன்று வடம் அதன் மேலே கிடக்கும் நூலினால் சூழ்ந்த*

வண்டுகள் பொருந்தும் கண்ணிக்குப் பொருந்தும்படியாய் இடையில் கிடக்க அரும்புகள் மலர்ந்த சில நீலத்தினது இதழ் நாணும்படியாக நீல மணியால் பண்ணிய வண்டுகளை ஒட்டிய கண்டவர் வியப்படையும் மாலை.

யான் சொன்னவையும் பிறவும் நின் அழகிற்கு மேல் ஓர் அழகாய்ப் பொருந்தும். மென்மையான விரலையுடைய சிறு அடிகள் நடந்து திரிந்ததால் நோகவும் செய்யும். அதைக் கைவிட்டு நீ உருட்டும் திண்மையான தேரின் வளைந்த தாமரை மொட்டைக் கையால் பிடித்து மெத்தென அசைந்த படி என்னிடம் இங்கு வருவாயாக உனக்கு என்று நான் வைத்த பாலை உண்பதற்கு

தலைமீது மேற்கொண்ட இயல்பால், வஞ்சனையை மறைத்து வயப்படுத்தும் செயல் பலவும் வல்ல பாணனைத் தூண்டிலாக அனுப்பிப் பரத்தையரை அகப்படுத்திக் கொண்டு, தான் விரும்பின பரத்தையரின் மனம் தன் வய மாக்கு தலைத் தனக்குத் தொழிலாகக் கொண்டு திரியும் உன் தந்தையின் சில பகுதியை - பாலை உண்பாய்.

உன் தந்தை வாயினின்று வெளிப்படும் சூளுறவை மெய் எனத் தெளிந்து பூவின் அழகையுடைய உண்கண் நீர் பரவும் படியாக மயங்கும் நோய் எல்லை மீறலால் அக் கண்கள் துயிலாத உன் தாய்ப் பங்கான சில பகுதியை உண்பாயாக!

வாராத தலைவர் வந்ததை எண்ணி யாம் எம் மகனைப் பாராட்டப் பாணன் முதலியவருடனே தாம் விரைவாய் வந் தார். அம்மா! அவரை இங்கு வருக எனக் கூறியவர் யார்தான்?

என் குடியின் பாராட்டுக் கேட்டு மகிழ்ந்தவனே! எனது பால் பங்கை உண்பாயாக! அப்புறம் உள்ளது சிறிது தான் என்றாள் தலைவி.

அவன் உண்ணாமல் போதலால் சினம் கொள்ளக் கருதிய தாய் தன் பிள்ளையாட்டால் மன மகிழ்ச்சி செய்த அவனை நோக்கி, சினம் கொள்ளக் கருதியவர்களை மகிழ்ச்சி யாகிய கூத்தாட்டுவிக்கும் உன் வேட்கையால் இனி நான் பாரரட்டும் பெரிய பாட்டுகளுடன் உன் தாயார்க்குரிய பகுதி யான பாலைக்குடி. இதையெல்லாம் உன்னை ஊட்டல் செய் வேன் என்று பாலைக் கூறிட்டு மகனுக்கு ஊட்டினாள் தலைவி.

## 243. அன்பிலி பெற்ற மகன்

மை படு சென்னி மழ களிற்று ஓடை போல்,
கை புனை முக்காழ் கயந் தலைத் தாழ,
பொலம் செய் மழுவொடு வாள் அணி கொண்ட
நலம் கிளர் ஒண் பூண் நனைத்தரும் அவ் வாய்
கலந்து கண் நோக்கு ஆர, காண்பு இன் துகிர்மேல்
பொலம் புனை செம்பாகம் போர் கொண்டு இமைப்ப,
கடி அரணம் பாயா நின் கை புனை வேழம்,
தொடியோர் மணலின் உழக்கி, அடி ஆர்ந்த
தேரை வாய்க் கிண்கிணி ஆர்ப்ப, இயலும் என்
போர் யானை வந்தீக, ஈங்கு!

செம்மால்! வனப்பு எலாம் நுந்தைய்யை ஒப்பினும், நுந்தை
நிலைப் பாலுள் ஒத்த குறி என் வாய்க் கேட்டு ஒத்தி;
கன்றிய தெவ்வர்க் கடந்து களம் கொள்ளும்
வென்றிமாட்டு ஒத்தி, பெரும! – மற்று ஒவ்வாதி,
'ஒன்றினேம் யாம்' என்று உணர்ந்தாரை, நுத்தை போல்
மென் தோள் நெகிழ விடல்.

பால் கொளல் இன்றி, பகல் போல், முறைக்கு ஒல்காக்
கோல் செம்மை ஒத்தி பெரும! மற்று ஒவ்வாதி
கால் பொரு பூவின் கவின் வாட, நுந்தை போல்
சால்பு ஆய்ந்தார் சாய விடல்.

வீதல் அறியா விழுப் பொருள் நச்சியார்க்கு
ஈதல்மாட்டு ஒத்தி, பெரும! மற்று ஒவ்வாதி
மாதர் மென் நோக்கின் மகளிரை, நுந்தைபோல்
நோய் கூர நோக்காய் விடல்.
ஆங்க –
திறன் அல்ல யாம் கழற, யாரை நகும், இம்
மகன் அல்லான் பெற்ற மகன்?
மறை நின்று, தான் மன்ற வந்தீத்தனர்.
ஆயிழாய்! தாவாத எற்குத் தவறுஉண்டோ? காவாது ஈங்கு
ஈத்தை, இவனை யாம் கோடற்கு' சீத்தை; யாம்
கன்றி அதனைக் கடியவும், கை நீவி

குன்ற இறு வரைக் கோண்மா இவர்ந்தாங்கு,
தந்தை வியல் மார்பில் பாய்ந்தான் – அறன் இல்லா
அன்பிலி பெற்ற மகன். – *கலி 86*

*நெற்றிப் பட்டத்தை உடைய இளைய ஆண் யானையின் கருமையுடைய தலையில் தொங்கும் மூன்று வடம் போல், கையால் செய்யப்பட்ட மூன்றுவடம் மென்மையுடைய தலையில் தொங்கவும் பொன்னால் ஆன மழு வாள் ஆகிய வற்றையுடைய ஒளி பொருந்திய அணியை நனைக்கின்ற அழகிய வாயைக் கண்கலந்த நினை வேட்கை நுகரக் காட்சிக்கு இனிய பவழப் பலகை மேலே செம்பாதி வடிவு வேறோர் யானையை மிகவும் குத்துகின்ற போர்ச் செயலை யுடைய பொன்னால் செய், காவலையுடைய அரணங்களைக் குத்தாத கையால் செய்யப்பட்ட நினது (பொம்மை) யானை யுடனே - நின் அடியில் நிறைந்த தேரையின் வாய் போன்ற வாயையுடைய கிண்கிணி ஒலிக்க, தொடியையுடைய மகளிர் செய் சிறிய வீட்டை அழித்து நடக்கும் என் போர்த் தொழிலையுடைய களிறே மகனே, இங்கு வருக!*

*தலைமைப் பெரும, நீ உன் தந்தையின் அழகை, ஒத்துள்ளாய். உன் தந்தையின் ஒழுக்க நிலைகளுள் உனக்கு ஒப்பாய் உள்ளவற்றை நான் கூறக் கேட்பாயாக: அவற்றுள் மாறுபாடுடைய பகைவரை வென்று களத்தைக் கொள்ளும் வெற்றிக் குணத்தில் தந்தையைப் போன்றவன் ஆவாய். மற்றுள்ள குணங்களில் யாம் இவனொடு ஒரு மனமாயினோம் என்று எண்ணிய மகளிரை, உன் தந்தை வருத்தி மெலிய விடுவர் அது போன்று நீயும் அவர்களின் தோள் மெலியும்படி விடுத்தலான பரத்தமையை மேற்கொள்ளாதே*

*பெரும, நுகத்தில் உள்ள பகலாணியைப் போல் ஒரு பக்கத்தைக் கொள்ளாது முறைமை செய்தற்கு - நீதி செலுத்த தற்குச் - சாயாத கோல் செம்மையாய் நிகழ்த்துவதில் நின் தந்தையை ஒத்தவனாய் உள்ளாய். மற்றுள்ள குணங்களில் தன் அமைதிக் குணத்தால் இவன் நம்மைத் தப்பான் என்று எண்ணிய மகளிரைக் காற்று மோதும் மலரைப் போல் அழகு கெடும்படி உன் தந்தை வாட விடுவதைப் போல் வருந்த விடுதலாகிய பரத்தமையைப் போல் ஒழுகாதே*

பெரும, தன்னைச் சார்ந்தவர் கெடுதலன்றித் தானே கெடுதல் அறியாத சிறந்த பொருளை விரும்பியவர்க்குக் கொடுக்கும் செயலில் தந்தையைப் போன்றவன் ஆவாய். மற்றக் குணங்களில் காதலையுடைய மென்மையான பார் வையை யுடைய உன் தந்தை வருத்தம் மிக நோக்காது விட்டு விடுதல் போல் நீயும் அவர்கள் நோய்மிக்கு வருந்தும் படி விடுதலான பரத்தமையைக் கொள்ளாதே!

பின்பக்கம் வந்து நின்ற தலைவனைக் கண்டு மகன் சிரித்தான் அவனை நோக்கி, நன்கு மதிக்கப்படும் மகனல்லா தவன் பெற்ற மகன் நல்ல குணங்களாய் இல்லாதவற்றை நீ கைக் கொள்ளாதே!" என்று கூறி "நான் சினக்க, இவன் யாரை நோக்கிச் சிரிக்கின்றான்?" என்று தலைவி எண்ணினாள்; பின் திரும்பிப் பின்பக்கம் நின்ற தலைவனைப் பார்த்தாள். பார்த்து, வராத தலைவன் பின்னே வந்து மறைவாய் நின்று பின்னர் நாம் தெளியும்படி முன் பக்கம் வந்தான் என்றாள்.

அதைக் கேட்ட தலைவன் இங்ஙனம் கொடுமை கூறு வாயாயின், அழகிய அணியையுடையவளே, உனக்குச் செய்யும் வருத்தம் ஒன்றும் இல்லாத என்னிடம் ஒரு தவறு உண்டோ? இவனை உன்னிடம் வைத்துக்கொள்ளாது நான் எடுத்துக் கொள்வதற்கு என்னிடம் தருவாயாக, என்றான். அதைக் கேட்ட மகன் தந்தை மேலே வீழ்ந்தான். அவனைத் தலைவி பார்த்துக் கைவிடப்பட்ட அன்பில்லாதவன் பெற்ற பிள்ளை நான் அவன்மீது விழுந்து வெறுத்து விலக்கவும், நம்மைக் கடந்து, மலையின் அடிப் பகுதியில் அரிமா பாய்ந் தாற் போல் அற மற்ற தந்தையின் மார்பில் பாய்ந்தான் அது கண்டு தலைவி ஊடல் தீர்ந்தாள்.

### 244. ஊடல் தீர்த்தாள் நெஞ்சுடன் கூறி

ஒருஉ நீ; எம் கூந்தல் கொள்ளல் யாம் நின்னை
வெரூஉதும், காணுங்கடை.

தெரியிழாய்! செய் தவறு இல்வழி, யாங்குச் சினவுவாய்
மெய் பிரிந்து, அன்னவர்மாட்டு?

ஏடா! நினக்குத் தவறு உண்டோ? நீ வீடு பெற்றாய்
இமைப்பின் இதழ் மறைபு ஆங்கே கெடுதி

நிலைப் பால் அறியினும், நின் நொந்து நின்னைப்
புலப்பார் உடையர், தவறு.
அணைத் தோளாய்! தீயாரைப் போல, திறன் இன்று உடற்றுதி
காயும் தவறு இலேன் யான்.

மான் நோக்கி! நீ அழ நீத்தவன் ஆனாது
நாணிலன் ஆயின் நலிதந்து அவன்வயின்
ஊடுதல் என்னோ, இனி.

இனி யாதும் மீக்கூற்றம் யாம் இலம் என்னும்
தகையது காண்டைப்பாய், நெஞ்சே! பனி ஆனாப்
பாடு இல் கண் பாயல் கொள. *– கலி 87*

"யாம் உன்னைக் காணும்போது அஞ்சுவோம். எனவே எம் கூந்தலைத் தொட வேண்டா. நீ விலகிப் போ" என்ற சொன்னாள் தலைவி.

அதைக் கேட்ட தலைவன், "ஆராய்ந்தெடுத்த அணியை உடையாய், நான் தவறு செய்யவில்லை. அங்ஙனமாக நீ எவ்வாறு சினம் கொள்வாய்!" என்றாள்.

"உன் கண்ணை மறைத்த இமைக்குள் மறைந்த பொழுதே தோன்றாமல் போகின்றாய். ஆதலால் நீ கைவிடப் பெற்றாய். அதனை அறிந்திருப்பினும் அறியாதவரைப் போல் உன்னை நொந்து உன்னைப் புலக்கின்றவர் தவறு உடையவர்; உனக்கு ஒரு தவறு உண்டோ!" என்றாள் தலைவி.

அதைக் கேட்ட தலைவன், 'அணை போலும் தோளை உடையவளே! தீய மக்களை வருத்துவது போல் ஒரு தீமை இல்லாதிருக்கவும் சினம் கொள்கின்றாய். நான் சினப்பதற்குக் காரணமான ஒரு தவறு உடையவன் அல்லேன், என்றான்

அதைக் கேட்ட தோழி, "மான் போன்ற பார்வையை உடையவளே, நீ அழும்படி உன்னைக் கைவிட்டவன் பரத்தமையில் அமையாமல் நாணம் இல்லாதிருப்பானால், மேலும் நலிதலைத் தந்து ஊடும் தன்மை என்ன பயன் தருமோ" என்றாள்.

அதைக் கேட்ட தலைவி, "நெஞ்சே! நீர் விழுதல் குறை யாத உறக்கம் கொள்ளாத கண் உறங்கும்படியாக, நான் இனிச் சொல் உடையோம் அல்லோம் என்று இவள் சொல்

*லும் தன்மையுடைய கூற்றைக் காரியம் என்று நினைத்துப் பார்ப்பாய்" என்று மனத்துடன் கூறி ஊடல் நீங்கினாள்.*

## 245. பொய்யுரையால் ஊடல் நீங்குதல்

ஒரூஉ; கொடி இயல் நல்லார் குரல் நாற்றத்து உற்ற
முடி உதிர் பூந் தாது மொய்ம்பின ஆக,
தொடிய, எமக்கு நீ யாரை? பெரியார்க்கு
அடியரோ ஆற்றாதவர்.

கடியர் தமக்க யார் சொல்லத் தக்கார் மாற்று?
வினைக்கெட்டு, வாய்அல்லா வெண்மை உரையாது கூறுஎன்
மாயம், மருள்வாரகத்து.

ஆயிழாய்! நின்கண் பெறின்அல்லால், நின்உயிர் வாழ்கல்லா
என்கண் எவனோ, தவறு?

இஃது ஒத்தன்! புள்ளிக் கள்வன்
புனல் சேர் பொதுக்கம் போல்
வள் உகிர் போழ்ந்தனவும், வாள் எயிறு உற்றனவும்,
ஒள் இதழ் சோர்ந்த நின் கண்ணியும், நல்லார்
சிரறுபு சீறச் சிவந்த நின் மார்பும்,
தவறாதல் சாலாவோ கூறு.
அதுதக்கது; வேற்றுமை என்கண்ணோ ஓராதி, தீது இன்மை
தேற்றக் காண்டீயாய்; தெளிக்கு.

இனித் தேற்றேம் யாம்.
தேர் மயங்கி வந்த தெரி கோதை அம் நல்லார்
தார் மயங்கி வந்த தவறு அஞ்சி, போர் மயங்கி,
நீ உறும் பொய்ச் சூள் அணங்கு ஆகின், மற்று இனி
யார் மேல் விளியுமோ கூறு. *– கலி 88*

*கொடியின் தன்மையுடைய பரத்தையரின் புழுகு முதலிய வற்றில் பொருந்திய மயிர் முடியினின்றும் உதிர்ந்த பூந்துகள் நின் தோள்களிலே கிடக்க, எம்மை நீ தீண்டுவதற்கு யார்? எம்மைவிட்டு நீ நீங்குவாயாக. பிரிவை ஆற்றமாட்டாதவர் பிரிந்து செல்ல வல்ல பெரியவர்க்கு அடிமையோ? அல்லர்.*

*தலைவன் தலைவி உரைத்ததைக் கேட்டுக் "கொடுங் குணம் உடையவர்க்கு மாற்றம் சொல்லத் தக்கவர் யார்?" என்றான்.*

அதைக் கேட்டுத் தலைவன், "நீ போகும் தொழிலைக் கைவிட்டு இங்கு நின்று உண்மையல்லாத பேதைமைச் சொற்களைச் சொல்ல வேண்டா. உன் பொய்களை மெய் என்று மயங்குபவரிடத்தில் சொல் என்று கூறினாள்.

அதைக் கேட்டத் தலைவன், "ஆராய்ந்து எடுத்த அணியை அணிந்தவளே? உன் கண்ணில் அருள் பார்வை யைப் பெற்றாலன்றி இனி உயிர் வாழ மாட்டாத என்னிடம் உள்ள குறைதான் எது?" என்று வினவினான்.

அதைச் செவியேற்ற தலைவி, இவன் ஒருத்தன் எனத் தன் நெஞ்சுடன் கூறினாள். பின் புள்ளியையுடைய நண்டுகளின் நடையால் உண்டான வடு, நீர் அருகே சேர்ந்து கிடந்தாற் போன்று, பெரிய நகத்தால் பிளந்த வடுக்களும், ஒளியுடைய பற்கள் அழுந்திய வடுக்களும், ஒண்மையான இதழ்கள் வாடிய நின் மாலையும், பரத்தையர் உன்னுடன் வேறுபட்டுச் சினந்து அடிக்கச் சிவந்த மார்பும் குறைகளாய் அமை யாவோ? அமையா என்றால் சொல்" என்றாள்.

"நீ சொல்லும் உடல் வேறுபாடு என்னிடம் உண்டாக அதனை எண்ணிப் பாராதே! அங்ஙனம் எண்ணாதிருத்தல் உனக்குத் தக்கது. அதற்குக் காரணம் என்னவென்றால் அத் தீது என்னிடம் நான் உனக்குத் தெளிவிக்க நீ காணலாம். யான் இனித் தெளிவிப்பேன்" என்றான் தலைவன்.

இந்தக் கற்புக் காலத்தில் நீ சூள் கூறுவதைக் கொண்டு யாம் எம் மனத்தில் தெளிவோம். அதற்குக் காரணம் கேட்பாய்:

தேரில் ஏறிவரும் சிறப்பில் மயங்கி உன் தீங்கை எண்ணிப் பாராமல் வந்த மாலையை உடைய பரத்தையரின் மாலை உன் மாலையாய் எண்ணி அணிந்து வந்தாய் இந்தப் பிழைக்கு அஞ்சி யாம் ஊடிப் பொருத போரில் கலங்கி இக் கற்புக் காலத்தில் நீ கூறும் மிகப் பொய்யான சூள் வருத்தத்தை செய்யுமானால், பின் அது எங்கள் மேல் அல்லாது யார் மேல் வரும். அவ்வாறு வாராமல் களவுக் காலத்துச் சூள் போல் கெடுமோ நீ கூறுவாய்?" என ஊடல் நீங்கிச் சொன்னாள் தலைவி.

## 246. ஊடலில் தோற்றுப் பயன் காண்போம்

யார் இவன்? எம் கூந்தல் கொள்வான்? இதுவும் ஓர்
ஊராண்மைக்கு ஒத்த படிறு உடைத்து; எம் மனை
வாரல்; நீ வந்தாங்கே மாறு.

என் இவை, ஓர் உயிர்ப் புள்ளின் இரு தலையுள் ஒன்று
போர் எதிர்ந்தற்றாப் புலவல்? நீ கூறின், என்
ஆர் உயிர் நிற்கும் ஆறு யாது?

ஏஎ! தெறிந்தேம் யாம்; காயாதி—எல்லாம் வல்—எல்லா!
பெருங் காட்டுக் கொற்றிக்குப் பேய் தொடித்தாங்கு,
வருந்தல் நின் வஞ்சம் உரைத்து.

மருந்து இன்று—மன்னவன் சீறின், தவறுஉண்டோ நீ நயந்த
இன்னகை! தீதோ இலேன்.

மாண மறந்து உள்ளா நாணிலிக்கு இப் போர்
புறம் சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே! உறழ்ந்து இவனைப்
பொய்ப்ப விடேஎம் என நெருங்கின், தப்பினேன்
என்று அடி சேர்தலும் உண்டு. — *கலி 89*

*'இவன் யார்? என் கூந்தலைத் தொடுவதற்கு இவன் என்ன தொடர்பு உடையவன்? எனத் தலைவி தன் நெஞ்சுக்குள் சொன்னாள். பின்பு "என் கூந்தலைப் பிடிக்கின்ற இதுவும், நீ சிறிதும் பாதுகாவாது பாதுகாப்பவரைப் போல் எண்ணிக் கொண்டு ஊராளும் தன்மைக்குப் பொருந்திய கொடுமையை உடையது. இதை எண்ணிப் பார். இனி எம் மனைக்கு வராதே. வந்ததைப் போலவே மீண்டு போ!" என்று கூறினாள்.*

*அதைக் கேட்ட தலைவன் உடலும் உயிரும் ஒன்றாய்த் தலை இரண்டாய் உள்ள பறவையின் அந்த இரண்டு தலைகளுள் ஒன்று மற்ற தலையுடன் போர் செய்தலை மேற்கொண்ட தன்மை போல் கொடுமைகளைக் கூறிப் புலந்து பேசாதே. நீ இவ்வாறு பேசினால் என் உயிர் எங்ஙனம் நிற்கும்? வழி யாது? அதனைக் கூறுவாய்! என்றான்.*

*ஏஎ. பின், "எல்லாம் உணர்ந்திருக்கும் பெரிய காட்டில் உள்ள கொற்றவைக்கு அவள் அறியாத சில உண்டாக,*

அவற்றைப் பேய் அவளுக்குச் சொன்னதைப் போன்று உன் பொய்களை எல்லாம் எனக்குச் சொல்லி என்னை வருத்தாதே. யான் முன்னமே நின் வஞ்சனைகளை அறிந்துள்ளேன்" என்று சொன்னாள்.

அதைக் கேட்ட தலைவன், என்னைப் பேய் என்று கூறி வெறுக்காதே, என்மீது தவறுகளைக் கூறுதற்கு அலையாதே!" என்று கூறினான். பின்பும், "இனிய புன்னகைய உடையாய்! நீ என்மீது ஏற்றிச் சொல்ல விரும்பிய தீதை நான் உடையவன் அல்லேன். மன்னன் சினம் கொள்பவன் மீது ஒரு தவறு உண்டோ? தவறு இல்லையாயினும் சினம் கொள்வான் அல்லனோ? அங்ஙனம் மன்னன் சினம் கொண்டால் அதற்கு ஒரு கழுவாய் இல்லை" என்றான்.

அதைக் கேட்ட தலைவி, "நெஞ்சே, இவனைப் பொய் சொல்ல விடேன் என்று மாறுபட்டுச் சினம் கொண்டால், தப்பினேன் என்று என் அடிகளில் விழுந்து வணங்கினாலும் வணங்குவான். ஆதலால் நம்மை மறந்து நாம் ஒருகாலமும் மாட்சிமைப்பட்டிருத்தலை நினையாத இவனுக்கு இந்த ஊடல் போரில் தோற்று அதன் பயனைக் காண்போம் என்று உடல் நீங்கப் பெற்றாள் தலைவி.

## 247. குறை கூறாதே

கண்டேன் நின் மாயம் களவு ஆதல், பொய்ந் நகா,
மண்டாத சொல்லித் தொடாஅல்; தொடீஇய நின்
பெண்டிர் உளர்மன்னோ, ஈங்கு.

ஒண்தொடி! நீ கண்டது எவனோ தவறு?

கண்டது நோயும் வடுவும் கரந்து, மகிழ் செருக்கி,
பாடு பெயல் நின்ற பானாள் இரவில்—
தொடி பொலி தோளும், முலையும் கதுப்பும்
வடிவு ஆர் குழையும், இழையும் பொறையா
ஒடிவது போலும் நுசுப்போடு, அடி தளரா
ஆராக் கவவின் ஒருத்தி வந்து – அல்கல் தன்
சீர் ஆர் ஞெகிழம் சிலம்ப, சிவந்து நின்
போர் ஆர் கதவம் மிதித்தது அமையுமோ?

ஆய்இழை ஆர்க்கும் ஒலி கேளா, அவ் எதிர்
தாழாது எழுந்து நீ சென்றது அமையுமோ
மாறாள் சினைஇ, அவள் ஆங்கே, நின் மார்பில்
நாறு இணர்ப் பைந் தார் பரிந்தது அமையுமோ?
'தேறு நீ; தீயென் அலேன்' என்று மற்று அவள்
சீறடி தோயா இறுத்தது அமையுமோ?
கூறு இனி; காயேமோ, யாம்?

தேறின், பிறவும் தவறு இலேன் யான்;
அல்கல் கனவுக்கொல் நீ கண்டது.

'கனை பெயல் தண் துளி வீசும் பொழுதில் குறி வந்தாட்
கண்ட கனவு' என, 'காணாது, மாறு உற்று—
பண்டைய அல்ல, நின் பொய்ச் சூள், நினக்கு; எல்லா!
நின்றாய்; நின் புக்கில் பல.'

மென் தோளாய்! நல்கு, நின் நல் எழில்; உண்கு.

ஏடா! குறை உற்று நீ எம் உரையல்!—நின் தீமை
பொறை ஆற்றேம் என்றல் பெறுதுமோ, யாழ
நிறை ஆற்றா நெஞ்சு உடையேம்? — *கலி 90*

*தலைவி, "உன் பரத்தமை இக் காலத்துக் களவொழுக்கம் ஆதலைக் கண்டேன் எனவே, பொய்யாகவே சிரித்து நான் விரும்பாதவற்றைச் சொல்லி என்னைத் தொடாதே. நீ என்னைத் தொடுவதற்கு உனக்கு இங்குப் பெண்டிராய் உள்ளவர் இருக்கின்றாரோ? இல்லையே!" என்று தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.*

*அதைக் கேட்ட தலைவன், "ஒளி பொருந்திய வளையலை உடையவளே, நீ என்னிடம் உள்ள தவறாகக் கண்டது எது? என்று வினவினான்.*

*யான் கண்ட தவறு. ஒருத்தி தான் அடைந்த காம நோயையும், அதனால் எழுந்த அலரையும், மற்றவர் அறியாமல் மறைத்து மகிழ்ச்சி இல்லாது இருக்கவும், மழை பெய்யும் ஒருநாள் பாதியாகிய இரவுப்போதில், தொடி பொலிவுடைய தோளும், முலையும் கூந்தலும் மகர வடிவான குழையணியும் மற்ற அணிகளும் தனக்குச் சுமையாய் முறி*

கின்ற வஞ்சிக்கொடி போன்ற இடையைத் தாங்கிக் கொண்டு அமைதி உண்டாகாத உணர்ச்சியால் அடி தளர்ந்து, வந்து சிலம்பு ஒலிக்கச் சினந்து பலகை பொருந்திய நின் கதவைப் பாய்ந்தாள். அது தவறு இல்லையா?

ஆராய்ந்த அணிகலன் உடையவள் ஆரவாரிக்கும் ஆர வாரத்தைக் கேட்டு அந்த ஆரவாரத்துக்கு எதிரே நீ காலம் நீட்டியாமல் எழுந்து சென்றது. அது தவறு ஆதற்குப் பொருந் துமோ? அவள் சினந்து அவ் இடத்திலேயே நின் மார்பில் கிடந்த மணக்கும் இதழையுடைய மாலையை அறுத்தாள்; அது தவறு இல்லையா? பின்பு அவளுடைய சிறிய அடியைச் சேர்ந்து நான் தீமை உடையவனல்லேன். நீ அறிவாய் எனச் சொல்லி அவளிடத்தே தங்கினை. அது தவறு ஆகாதா? இப் போது கூறு, நான் நின்னைச் சினக்க மாட்டேனா?

அதைக் கேட்ட தலைவன், "யான் தெளிவிக்கத் தெளிவு கொண்டாயாயின் இங்கு நான் நீ கூறக் கேட்ட தவற்றை யான் உடையவன் அல்லேன். இரவுக்காலத்து நீ கண்டது தான் கனவு போல இருந்தது" என்று சொன்னான்.

அதைக் கேட்ட தலைவி, "செறிந்த மழையான குளிர்ந்த துளியைப் பெய்கின்ற இரவுக் காலத்தில் ஒருவன் செய்த குறியிடத்தே வந்தவள் ஒருத்தியை நீ கண்டதனால் உனக்கு உண்டான கனவு இதுவாகும்" என்று சொல்லி, நீ செய்ததை நினையாமல் மறுத்துக் கூறி நிற்கின்றாய். அங்ஙனம் நின்று, பின் நீ உரைத்த பொய்யான சூள் உறவையும் உண்மையாக யாம் கண்டமையால், அது உனக்கு முன் போல் பயன் தரும் தன்மையைக் கொண்டது அன்று. ஆதலால் உனக்குச் சென்று புகக்கூடிய இல்லங்கள் பல உள்ளன. அங்குச் செல் வாயாக!" என்று சொன்னாள்.

அதைக் கேட்ட தலைவன், "மென்மையான தோளை யுடையவளே, இனி யான் செய்த குறையைக் கைவிட்டு உன் அழகை எனக்குத் தருவாய். அதை நான் நுகர்வேன்," எனச் சொன்னான்.

"எம் வயத்ததாக நிறுத்த மாட்டாத நெஞ்சையுடைய யாம் உன் தீமையைப் பொறுக்க மாட்டோம் என்று எண்ணுவதைப் பெறுவோமா? பெறேம். ஆதலால், நீ இச்

*செயலில் ஈடுபட்டு எமக்குச் சில குறை கூறாதே!" என்று சொல்லி ஊடல் நீங்கினாள் தலைவி.*

## 248. வேண்டாத செயல்

அரி நீர் அவிழ் நீலம், அல்லி, அனிச்சம்
புரி நெகிழ் முல்லை, நறவொடு அமைந்த
தெரி மலர்க் கண்ணியும் தாரும் நயந்தார்
பொரு முரண் சீறச் சிதைந்து நெருநையின்
இன்று நன்று, என்னை அணி.

அணை மென் தோளாய்! செய்யாத
சொல்லிச் சினவுவது ஈங்குஎவன்,
ஐயத்தால் என்னைக் கதியாதி; தீது இன்மை
தெய்வத்தான் கண்டீ தெளிக்கு.

மற்றது, அறிவல், யான் நின் சூள் அனைத்தாக நல்லார்
செறி தொடி உற்ற வடுவும் குறி பொய்த்தார்
கூர் உகிர் சாடிய மார்பும், குழைந்த நின்
தாரும், ததர் பட்ட சாந்தமும், சேரி
அரி மதர் உண் கண்ணார் ஆராக் கவவின்,
பரிசு அழிந்து யாழ நின் மேனி கண்டு, யானும்
செரு ஒழிந்தேன்; சென்றீ, இனி.

தெரியிழாய்! தேற்றாய் சிவந்தனை
காண்பாய், நீ – தீது இன்மை
ஆற்றின் நிறுப்பல் பணிந்து.

அன்னதேல், ஆற்றல் காண்:
வேறுபட்டாங்கே கலுழ்தி; அகப்படின்.
மாறுபட்டாங்கே மயங்குதி; யாது ஒன்றும்
கூறி உணர்த்தலும் வேண்டாது; மற்று நீ
மாணா செயினும் மறுத்து, ஆங்கே நின்வயின்
காணின் நெகிழும் என் நெஞ்சு ஆயின், என் உற்றாய்
பேணாய் நீ பெட்பச் செயல். *– கலி 91*

*நறவம் பூவுடன் அழகிய நீரில் மலர்ந்த நீலப்பூ. அனிச்சம் பூ, முறுக்கு நெகிழ்ந்த முல்லைப் பூ, ஆகியவை பொருந்திய*

மார்பின் மாலையும் நறுமண மலரால் செய்த கண்ணியும், விரும்பிய பரத்தையர் ஊடுகின்றதால் சினந்து பற்ற நிறம் கெட்டு என் தலைவனின் அலங்காரம் நேற்று இருந்ததை விட இன்று நன்றாக உள்ளது என்று காமக்கிழத்தி யுரைத்தாள்.

அதைக் கேட்ட தலைவன், "அணைபோலும் மென்மை யான தோளை உடையவளே, இவன் பிரிந்து சென்றால் பரத்தை யரிடமல்லாது போக மாட்டான் என்று மனத்தில் எண்ணிக் கொண்டு அந்த ஐயத்தால் நான் செய்யாத செயல்களைச் சொல்லி இங்குச் சினம் கொள்ளக் காரணமான என் குறைதான் யாது? என்னிடம் தீதில்லை. இதனைத் தெய்வத்தால் நான் தெளி விப்பேன். காண்பாய். இனி என்னைச் சினக்காதே!" என்றான்.

அதைக் கேட்ட தலைவி "யான் நீங்கிய பின்பு நீ செய்த செயலை அறிவேன். உனது சூள் பொய் என்பதையும் அறிவேன். புதிய பரத்தையரது தொடி அழுந்திய வடுவையும், அவர் உன்னைத் தழுவுதலால் குழைந்த நின் மாலையையும், உன் குறியால் பொய்க்கப்பட்ட பரத்தையர் சினந்து கூர்மை யான நகத்தால் தாம் விரும்பியபடி வடுச் செய்த மார்பை யும், சேரியிலிருந்த செவ்வரியையும் செருக்கையுடைய மையுண்ட கண்களையுடைய மங்கையரின் நிறைவு பெறாத முயக்கத்தால் பூசிய தன்மை கெட்டுச் சிதறிய சந்தனத்தையும் பெற்ற உன் வடிவைக் கண்டேன். அதனால் இதற்குரிய நானும் உன்னுடன் ஊடுதலை விட்டுவிட்டேன். இனி அப் பரத்தையரிடம் போவாயாக!" என்றாள்.

அதைக் கேட்ட தலைவன், "தெரிந்தெடுத்த அணியை அணிந்தவளே! நான் நின்னைத் தெளிவித்ததைக் கொண்டு தெளியாமல் சினந்தாய். நான் தீமையற்றவன் என்பதை உன்னைத் தாழ்ந்து நெறிப்படி நின் நெஞ்சத்தில் நிறுத்து வேன்! காண்பாய்!" என்று சொன்னான்.

அதைக் கேட்ட தலைவி, "இவனது கருத்து தீதின்மை என்பதை நெஞ்சத்திடத்தில் நிறுத்துவதே ஆனால், இவன் வலிமையைக் காண்பாயாக" என்று நெஞ்சடன் கூறினாள். பின் அவனை நோக்கி, "நான் உன்னுடன் வேறுபட்ட அப் போதே நெஞ்சம் கலங்குவாய்! யான் வேறுபடாமல் நின் கையில் அகப்படுவேனாயின், அக் கலக்கத்தை மாறுபட்ட

*பொழுதே என்னை இகழ்ந்த பரத்தையரிடம் செல்வதற்கு மனம் மயங்குவாய். எனவே எத்தகைய சொல்லையும் சொல்லி என் ஊடலைப் போக்க முயல்வது வேண்டாத செயல். இக் குறையொழிய நீ வேறு குற்றங்களைச் செய்தாலும் அவற்றைத் தள்ளி, உன்னைக் கண்டால் அப்போதே என் மனம் உன்னிடத்தே நெகிழ்ந்து வருமாயின் என் நெஞ்சின் தன்மையை உட்கொள்ளாது, நீ நான் விரும்பும்படி என்னைத் தெளிவிக்கும் செயல்களை என்ன காரியத்துக்காகச் செய்தாய்?" என்று தலைவி ஊடல் நீங்கினாள்.*

## 249. அழகுக் கனவு

புன வளர் பூங் கொடி அன்னாய்! கழியக்
கனவு எனப்பட்டது ஓர் காரிகை நீர்த்தே
முயங்கிய நல்லார் முலை இடை மூழ்கி
மயங்கி, மற்று ஆண்டு ஆண்டுச் சேறலும் செல்லாது
உயங்கி இருந்தார்க்கு உயர்ந்த பொருளும்;
அரிதின் அறம் செய்யா, ஆன்றோர், உலகும்
உரிதின் ஒருதலை எய்தலும் வீழ்வார்ப்
பிரிதலும் ஆங்கே புணர்தலும் தம்மில்
தருதல் தகையாதால் மற்று.

நனவினால் போலும், நறுநுதால்! அல்கல்
கனவினால் சென்றேன் – கலி கெழு கூடல்
வரை உறழ் நீள் மதில் வாய் சூழ்ந்த வையைக்
கரை அணி காவினகத்து.
உரை, இனி, தண்டாத் தீம் சாயல் நெடுந்தகாய்! அவ்வழிக்
கண்டது எவன் மற்று நீ?

கண்டது – உடன் அமர் ஆயமொடு அவ் விசும்பு ஆயும்
மட நடை மா இனம், அந்தி அமையத்து,
இடன் விட்டு இயங்கா இமையத்து ஒரு பால்
இறை கொண்டு இருந்தன்ன – நல்லாரைக் கண்டேன்,
துறை கொண்டு உயர் மணல் மேல் ஒன்றி நிறைவதை.

ஓர்த்தது இசைக்கும் பறை போல், நின் நெஞ்சத்து
வேட்டதே கண்டாய், கனா.

'கேட்டை விரையல் நீ; மற்று வெகுள்வாய்!' 'உரை' ஆண்டு
இதுவாகும், இன் நகை நல்லாய்! பொதுவாக
தாம் கொடி அன்ன தகையார் எழுந்தது ஓர்
பூங் கொடி வாங்கி, இணர் கொய்ய, ஆங்கே
சினை அலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனை அரண் போல உடைந்தன்று, அக் காவில்
துனை வரி வண்டின் இனம்.

மற்று ஆங்கே நேர் இணர் மூசிய
வண்டு எல்லாம் அவ்வழிக்
காரிகை நல்லார் நலம் கவர்ந்தது
உண்ப போல் ஓராங்கு மூச,
அவருள்
ஒருத்தி, செயல் அமை கோதை நகை;
ஒருத்தி, இயல் ஆர் செருவில் தொடியொடு தட்ப;
ஒருத்தி, தெரி முத்தம், சேர்ந்த திலகம்;
ஒருத்தி, அரி மாண் அவிர் குழை ஆய் காது வாங்க,
ஒருத்தி, வரி ஆர் அகல் அல்குல் காழகம்;
ஒருத்தி, அரி ஆர் ஞெகிழத்து அணி சுறாத் தட்ப;
ஒருத்தி புலவியால் புல்லாதிருந்தாள், அலவுற்று
வண்டினம் ஆர்ப்ப, இடை விட்டுக் காதலன்
தண் தார் அகலம் புகும்.

ஒருத்தி, அடி தாழ் கலிங்கம் தழீஇ, ஒரு கை
முடி தாழ் இருங் கூந்தல் பற்றி, பூ வேய்ந்த
கடி கயம் பாயும், அலந்து.

ஒருத்தி, கணம்கொண்டு அவைமூச, கை ஆற்றாள், பூண்ட
மணம் கமழ் கோதை பரிபு கொண்டு, ஓச்சி
வணங்கு காழ் வங்கம் புகும்.

ஒருத்தி, இறந்த களியான் இதழ் மறைந்த கண்ணள்,
பறந்தவை மூசக் கடிவாள், கடியும்
இடம் தேற்றாள் சோர்ந்தனள், கை.

ஆங்க, கடி காவில் கால் ஒற்ற, ஒல்கி ஒசியாக்
கொடி கொடி தம்மில் பிணங்கியவை போல்,

தெரிஇழை ஆர்ப்ப மயங்கி இரிவுற்றார், வண்டிற்கு
வண்டலவர்; கண்டேன், யான்'.

நின்னை நின் பெண்டிர் புலந்தனவும், நீ அவர்
முன் அடி ஒல்கி உணர்த்தினவும், பல் மாண்
கனவின் தலையிட்டு உரையல்; சினைஇ யான்
செய்வது இல் என்பதோ? கூறு.

பொய்கூறேன் அன்ன வகையால் யான்கண்ட கனவு தான்
நன் வாயாக் காண்டை–நறுநுதால்!' பல் மாணும்

கூடிப் புணர்ந்தீர்! பிரியன்மின்; நீடிப்
பிரிந்தீர்! புணர் தம்மின்' என்பன போல
அரும்பு அவிழ் பூஞ் சினைதோறும் இருங் குயில்
ஆனாது அகவும் பொழுதினான், மேவர
நான் மாடக்கூடல் மகளிரும் மைந்தரும்
தேன் இமிர் காவில் புணர்ந்திருந்து ஆடுமார்,
ஆனா விருப்போடு அணி அயர்ப, காமற்கு
வேனில் விருந்து எதிர்கொண்டு. – *கலி 92*

*காவனத்தில் வளர்ந்த மலர்க்கொடி போன்றவளே! பொருள் தேடச் சென்று முயலாமல் வருந்தியிருப்பவர்க்கு அவர்கள் இருந்த இடங்களில் மிக்க பொருளும் தானே செல்லுதலும் அரியதாய் உள்ளதால், உலகம் தமக்கு உரிய தாய் அறத்தைச் செய்யாது இங்ஙனம் இருக்கவும், அறம் செய்வதற்கு அமைந்தவர் அவ் அறத்தைச் செய்தலும் கனவில் இல்லையாயிற்று தாம் முயங்கிய மகளிரின் முலைகளில் அழுந்திய இன்பத்தில் மயங்கி விரும்பும் கணவரை மகளிர் ஊடலால் பிரிதலும் அப்போதே ஊடல் நீங்கிப் புணர்தலும் ஆகிய இன்பத்தைக் கனவில் தருவது தவிராது. இனி மிக்க காதலால் கனாவென்று சொல்லப்பட்டது. அதுதான் ஓர் அழகையுடைய தன்மையாய் இருந்தது என்றான். தலைவன் தான் கண்ட கனவு இன்பத்தைத் தந்தது. அறமும் பொருளும் தரவில்லை என்று உரைக்கின்றான்.*

*நறுமணம் கமழும் நெற்றியை உடையவளே, ஆரவாரம் பொருந்திய மதுரையின் மலைபோல் உயர்ந்த நீண்ட மதிலிடத்தைச் சூழ்ந்த வையை ஆற்றங்கரையை அழகுபடுத்தும்*

பொழிலில் நனவில் சென்றாற்போல் இரவுப் பொழுதில் கனவு கண்டேன்.

அது கேட்ட தலைவி, "அமையாத இனிய மென்மை யுடைய பெருந்தகையே! நீ அங்குக் கண்டது எத்தன்மை கொண்டது? அதைச் சொல்வாய்! என்றாள்.

அதைக் கேட்ட தலைவன் "யான் கண்டதைக் கூறுவேன் கேட்பாயாக: அன்னங்கள் நீங்காத தன்மையுடைய இமய மலையிலே ஒரு பக்கத்தில் அழகிய வானத்தில் இரை கவர்ந்த வந்த இளைப்பால் ஓய்ந்து, பறக்கும் இயல்புகொண்ட அன்னக் கூட்டம் மாலைக் காலத்தில் தங்கி உள்ள தன்மை யாக, துறை தன்னிடம் உடைய மணற்குன்றில் நல்லவர் தம் ஆயத்தாருடன் இருக்கக் கண்டேன்.

அதைக் கேட்ட தலைவி, "பறை கொட்டுபவன் தன் மனத்துள் உணர்ந்த ஓசையைத் தானும் ஒலிக்கும் பறை போல் உன் நெஞ்சத்து விரும்பிய இன்பத்தையே நீ கனவாகக் கண்டாய்." என்றாள்.

அதைக் கேட்ட தலைவன் "நீ விரையாதே! கேட்டால் சினப்பாய்," என்றான். அதைக் கேட்ட தலைவி "மேலே சொல்!" என்றாள். அதனைக் கேட்ட தலைவன், "இனிய புன்னகை உடையோளே, அங்கே பிறந்தது இதுவாக இருக்கும்! அதைக் கேள். கொடி போன்ற அழகை உடையார் அச் சோலையில் எழுந்து நிறைந்த பூங்கொடியை எல்லாருக்கும் பொதுவாய் எண்ணி வளைத்துக் கொத்துகளைப் பறித்தனர். பறிக்க அது, வண்டின் கூட்டம் கொம்புகள் அலர்ந்த வேப்ப மாலை பூண்ட பொதியமலை உடையவன் போரிட்ட பகை நாட்டு அரண் போல் அங்கு உடைந்தது.

அங்ஙனம் உடைந்த கொத்துகளில் மொய்த்த வண்டுகள் எல்லாம் அங்கு நின்ற அழகு மகளிர் நலத்தைக் கைக் கொண்டு நுகர்பவை போன்று ஒன்றாய்க் கூடி மொய்த்தன. அதனால் அவ் வண்டின் போரிலே அவர்களின் ஒருத்தியின் மலர் மாலையும் முத்துமாலையும் வேறொருத்தியினது அசையும் தொடியுடன் தடுத்துக் கொண்டன. ஒருத்தியின் நெற்றியில் திலகத்தைச் சேர்ந்த தலையில் கிடந்த முத்து வடத்தை வேறொருத்தியின் அழகுக் காதில் கிடந்த அழகு

மாட்சி மைப்பட மகரக் குழை என்ற காதணி சிக்கிக் கொண்டது. ஒருத்தியினது தேமலையுடைய அகன்ற அல்குலின் துகிலை வேறொருத்தியின் சிலம்பில் கிடந்த சுறா வடிவுடைய மூட்டுவாய் இடும்புகள் தடுத்தன. ஒருத்தி புலவியால் கணவனைத் தழுவாதிருந்தவள் வண்டினம் மொய்த்து ஆரவாரம் செய்வதால் வருத்தம் அடைந்து அப் புலவியை நடுவில் கைவிட்டுக் கணவன் வணங்குவதால் அவனுடைய குளிர்ந்த மாலை விளங்கும் மார்பில் பொருந்துவாள்.

ஒருத்தி, அடியில் தொங்கிய ஆடையை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, மற்ற கையாலே, முடிக்கப்பட்ட முடி குலைந்த கரிய கூந்தலைப் பிடித்துக் கொண்டு மிக்க மலர்கள் பொருந்திய குளத்தில் பாய்வாள்.

ஒருத்தி திரண்டு வண்டுகள் மொய்க்கையால் கையால் ஓட்டமாட்டாதவளாய் நறுமணம் கமழும் மாலையை அறுத்துக் கொண்டு ஓட்டினாள். அதற்கு அவை போகாமையைப் பார்த்து வளைந்த தண்டுகள் உள் வலியாக உள்ளே கொண்ட ஓடத்தில் பாய்வாள்.

ஒருத்தி, அறிவு நீங்குதற்குக் காரணமான கள்ளின் களிப்பால் இமை மூடுகையால், பார்வை மறைந்த கண்ணைக் கொண்டவளாய்ப் பறந்த வண்டுகள் மொய்க்க ஓட்டுபவள் தான் கொண்ட களிப்பால் அவற்றை ஓட்டும் இடம் அறியாத வளாகக் கை தளரப் பெற்றாள்.

விளையாட்டையுடைய மங்கையர், மிக்க சோலையில் காற்று வீச ஒதுங்கி வளைந்து கொடியும் கொடியும் தம்மில் பிணங்கியவை போல் அணிகள் ஆரவாரிப்பத் தமக்குள் மயங்கி அவ் வண்டுகளுக்குத் தோற்றார். யான் இக் கனவைக் கண்டேன் என்றான்.

அதைக் கேட்ட தலைவி, "உன்னை உன் பெண்டிர் புலந்தவற்றையும், நீ அவரது அடியின் முன் வணங்கிப் புலவி நீங்கப் பெற்றதையும், பல வகையாய்க் கனவின் மேலிட்டுக் கூறுகின்றாய். இங்ஙனம் கூறுதல் நான் சினந்து செய்யும் தீமை ஒன்று இல்லை என்பதை எண்ணியோ, சொல்?" என்றாள்.

அதைக் கேட்ட தலைவன் "நான் பொய் சொல்லேன். நறுமணம் கமழும் நெற்றியை உடையவளே, 'பல மாட்சிமை

*யும் உண்டாகப் புணர்ந்தீர். பிரியாதீர். புணர்ச்சி நீடித்த இடையில் பிரிந்தீர். கூடுதலைத் தாரும்' என்று கூறுவன போல், கரிய குயில்கள் அரும்பு அவிழ்ந்த மலர்களை உடைய கொம்புகள் தோறும் அமர்ந்து இருந்து விடாமல் தம் பெண் பறவையை அழைக்கும் இளவேனிற் பொழுதில் மன்மதனுக்கு விருந்திடுதலைப் பொருந்த எதிர்கொண்டு மதுரை மகளிரும் அவர் கணவரும் வண்டுகள் ஒலிக்கும் சோலையில் சேர்ந்து விளையாட மிக்க விருப்பத்துடன் அணிகளை அணிவார். ஆதலால் பிரிதலும் புணர்தலுமான கூற்றால் நான் கண்ட கனவு உண்மையாகும்படி மனத்தால் எண்ணுவாயாக! என்று தலைவன் குற்றத்திற்கு வருந்தி தலைவியை இறஞ்சினான்.*

## 250. தலைவன் கண்ட கடவுளர்

**வண்டு ஊது சாந்தம் வடுக் கொள நீவிய,
தண்டாத் தீம் சாயற் பரத்தை, வியல் மார்ப!
பண்டு, இன்னைஅல்லைமன்; ஈங்கு எல்லி வந்தீய,
கண்டது எவன்? மற்று உரை.**

**நன்றும் தடைஇய மென் தோளாய்! கேட்டீவாயாயின்
உடன் உறை வாழ்க்கைக்கு உதவி உறையும்
கடவுளர்கண் தங்கினேன்.**

**சோலை மலர் வேய்ந்த மான் பிணை அன்னார் பலர், நீ
கடவுண்மை கொண்டு ஒழுகுவார்.**

**அவருள், எக் கடவுள்? மற்று அக் கடவுளைச் செப்பீமன்**

**'முத்து ஏர் முறுவலாய்! நான் மணம் புக்கக்கால்,
"இப் போழ்து போழ்து" என்று அது வாய்ப்பப் கூறிய
அக் கடவுள், மற்று அக் கடவுள்' 'அது ஒக்கும்.**

**நாள் உள் அழுந்த தலை சாய்த்து நீ கூறும்
மாயமோ; கைப்படுக்கப்பட்டாய் நீ; கண்டாரை
வாயாக யாம் கூற வேட்டீவாய்! கேள், இனி:**

**பெறல் நசை வேட்கையின் நின் குறி வாய்ப்ப,
பறி முறை நேர்ந்த நகாராக, கண்டார்க்கு
இறு முறை செய்யும் உருவொடு நும் இல்
செறி முறை வந்த கடவுளைக் கண்டாயோ?**

நறுந் தண் தகரமும் நானமுத் நாறும்
நெறிந்த குரற் கூந்தற் நாள் அணிக்கு ஒப்ப,
நோக்கின் பிணி கொள்ளும் கண்ணொடு மேல் நாள், நீ
பூப் பலி விட்ட கடவுளைக் கண்டாயோ?

ஈர் அணிக்கு ஏற்ற ஒடியாப் படிவத்துச்
சூர் கொண்ட செவ்வேலாற் பாடி, பல நாளும்
ஆராக் கனை காமம் குன்றத்து நின்னோடு
மாரி இறுத்த கடவுளைக் கண்டாயோ?

கண்ட கடவுளர் தம்முளும், நின்னை
வெறி கொள் வியல் மார்பு வேறாகச் செய்து,
குறி கொளச் செய்தார் யார்? செப்பு; மற்று யாரும்
சிறு வரைத் தங்கின் வெகுள்வர்; செறு தக்காய்!
தேறினேன்; சென்றீ நீ – செல்லா விடுவாயேல்,
நல் தார் அகலத்துக்கு ஓர் சார மேவிய
நெட்டிருங் கூந்தல் கடவுளர் எல்லார்க்கும்
முட்டுப்பாடு ஆகலும் உண்டு. *– கலி 93*

*"இனிய மென்மைமிக்க பரத்தமைக் குணத்தை உடைய, வண்டுகள் மொய்க்கும் சந்தனத்தைக் கை வடுக் கொள்ளும்படி பூசிய அகன்ற மார்பை உடையவனே, முன்னம் நீ இத்தகைய தன்மையை உடையவன் அல்லை! அத் தன்மை போய் விட்டது. இங்கு இரவுக் காலத்தில் வர, நீ வெளியில் போய்க் கண்டது எத்தன்மை உடையது? அதைச் சொல்வாய்!" என்று தலைவனைப் பார்த்து வினவினாள் தலைவி.*

*அதைக் கேட்ட தலைவன் "பெருத்த மென்மையான தோளை உடையவளே, நான் செய்வதைக் கேட்பாயாயின், கேள். நாம் இருவரும் போய்த் துறவறத்திருந்கும் வாழ்க்கைக்கு உதவியாய் இருக்கும் கடவுளரை முனிவரைக் கண்டு அவரிடத்தில் தங்கினேன்" என்றான்.*

*அதைச் செவிமடுத்த தலைவி, "கடவுள் தன்மை உண்மை எனக் கொண்டு நடத்துபவர், சோலையில், மலரைச் சூடிய பெண் மானைப் போன்ற பார்வை கொண்ட பரத்தையர் பலர் உள்ளனர். அவர்களுள் நீ கூறிவந்த கடவுள் எக் கடவுள்? அக் கடவுளைக் கூறுவாய்!" என்றாள்.*

"அந்தக் கடவுள், முத்தைப் போன்ற பற்களை உடைய வளே, நாம் மணத்தைச் செய்ய இப்போது தக்க நேரம் என்று அம் முகுத்தம் பொருந்தச் சொன்ன அந்தக் கடவுள்," என்றான் தலைவன்.

அதைக் கேட்ட தலைவி, "நீ கூறியது எனக்கும் ஒக்கும்," என்று இகழ்ந்து பின் தனக்கு அது பொருந்தாது எனக் கூறினாள்

தலைவி உள்ளே அழுந்தும் நாவுடன் தலையைச் சாய்த்து, "நீ கூறுவது பொய். ஆதலால் நீ எம்மிடம் அகப்பட்டுக் கொண்டாய். நீ கண்ட கடவுள் இன்னார் என்று நாங்கள் சொல்லக் கேட்க விரும்பியவனே, யாங்கள் சொல்லக் கேட்பாயாக!" என்றாள்.

"உன்னைப் பெறும் ஆசையினால் நீ குறித்த குறி இடத் தில் தப்பாமல் வந்த கடவுள்; கண்டவர்க்கு இறந்துபடும் நிலைமையை உண்டாக்கும் வடிவுடன், விழுந்து எழுந்த பற்களை உடையவராய் உம் மனையிடத்தில் சேர்கின்ற முறைமையுடன் வந்த கடவுளரை நீ கண்டாயோ?" என்று தலைவி வினவினாள்.

"பொருளைக் பெற வேண்டும் என்ற ஆசையால் உன் உள்ளத்தில் எண்ணிய எண்ணமெல்லாம் வாய்ப்பப் பறித்துப் போகும் முறைமையைச் சேர்ந்த கடவுள் மன வேட்கையினை அடக்கும் முறைமையை இகழாரராய்த் தன்மைக் கண்டவர் களுக்குத் தீவினை இறும் முறைமையைத் தரும் வடிவுடனே உம் இல்லத்தில் வந்த கடவுளைக் கண்டாயோ!" என்பது வேறொரு பொருள்.

"பார்வையினால் பிணிக்கும் கண் வருத்துவதால் குளிர்ந்த மயிர்ச்சாந்தமும் புழுகும் நாறும் கற்றையான மயிர்க்கு நாட் காலத்து அணியும் அணிக்குப் பொருந்த, நீ முன்னாள் பூவைப் பலியாகப் போக விட்ட கடவுளரைக் காண்டாயோ?" என்றாள்.

"கெடாத விரதத்தால் குதிரை முகமும் மக்கள் உடலும் ஆகிய இரண்டு அழகுக்கும் பொருந்திய சூரபன்மாவைக் கொன்ற சிவந்த வேலையுடைய முருகப் பெருமானைப் புகழ்ந்து, நிறையாத காம வேட்கையினால் திருப்பரங் குன்றி

னிடத்தில் உன்னுடன் மாரிக் காலத்தில் பல நாள்களும் தங்கியிருந்த கடவுளைக் கண்டாயோ!" என்றாள் தலைவி.

"நீ பார்த்த கடவுள்களுள் உன் மனத்தைத் தன்னிடம் கொண்ட அகன்ற மார்பைப் பழைய தன்மை குலைத்து போகும்படிச் செய்து மற்றவர் முயங்காதபடி வடுப்படுத்தி யவர் யார், சொல்? அப் பரத்தையர் சிறிது காலம் நீ இங்கே தங்கினால் அவர்கள் சினம் கொள்வார்கள். எனவே எம்மால் சினக்கப்படுபவனே, உன் பொய்யெல்லாம் உள்ள படி நான் அறிந்து தெளிந்தேன்.

"இனியும் அவர்களிடம் செல்லாது இருப்பாயாயின் நின் மாலை அணிந்த மார்புக்கு முட்டுப்பாடு உண்டாகும் அது வன்றி உன்னை முயங்கிய கரிய கூந்தலையுடைய பரத்தையர் எல்லாருக்கும் முட்டுப்பாடு உண்டாகவும் செய்யும் ஆதலால் அங்கே நீ செல்வாயாக!" என்று தலைவி புலந்து கூறினாள் தலைவி.

## 251. குறளனும் கூனியும் கொண்ட காதல்!

என் நோற்றனைகொல்லோ?–
நீருள் நிழல் போல் நுடங்கிய மென் சாயல்
ஈங்கு உருச் சுருங்கி
இயலுவாய்! நின்னொடு உசாவுவேன்; நின்றீத்தை.

அன்னையோ! காண் தகை இல்லாக்
குறள் நாழிப் போழ்தினான்,

ஆண்டலைக்கு ஈன்ற பறழ் மகனே! நீ எம்மை,
'வேண்டுவல்' என்று விலக்கினை; நின் போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று?

மாண்ட எறித்த படை போல் முடங்கி மடங்கி,
நெறித்துவிட்டன்ன நிறை ஏரா.ல் என்னைப்
பொறுக்கல்லா நோய் செய்தாய்; பொறீஇ நிறுக்கல்லேன்
நி நல்கின் உண்டு, என் உயிர்.

குறிப்புக் காண் – வல்லுப் பலகை எடுத்து நிறுத்தன்ன
கல்லாக் குறள! கடும் பகல் வந்து எம்மை,

'இல்லத்து வா' என, மெய் கொளீஇ, எல்லா! நின்
பெண்டிர் உளர்மன்னோ? கூறு.

நல்லாய்! கேள்: உக்கத்து மேலும் நடு உயர்ந்து வாள் வாய
கொக்கு உரித்தன்ன கொடு மடாய்! நின்னை யான்
புக்கு அகலம் புல்லின், நெஞ்சு ஊன்றும், புறம் புல்லின்
அக்குளுத்து; புல்லலும் ஆற்றேன்; அருளீமோ,
பக்கத்தப் புல்லச் சிறிது.

போ, சீத்தை! மக்கள் முரியே! நீ மாறு, இனி; தொக்க
மரக் கோட்டம் சேர்ந்து எழுந்த பூங்கொடி போல
நிரப்பம் இல் யாக்கை தழீஇயினர் எம்மைப்
புரப்பேம் என்பாரும் பலரால்; பரத்தை என்
பக்கத்துப் புல்லீயாய் என்னுமால்; தொக்க
உழுந்தினும் துவ்வா, குறு வட்டா! நின்னின்
இழிந்ததோ, கூனின் பிறப்பு?" கழித்து ஆங்கே
"யாம் வீழ்தும்" என்று தன் பின் செலவும், உற்றீயாக்
கூனி குழையும் குழைவு காண்'.

'யாமை எடுத்து நிறுத்தற்றால் தோள் இரண்டும் வீசி
யாம் வேண்டேம் என்று விலக்கவும் எம் வீழும்
காமர் நடக்கும் நடை காண்' கவர் கணைச்
சாமனார் தம்முன் செலவு காண்'.

ஓஒ! காண், நம்முள் நகுதல் தொடீஇயர், நம்முள் நாம்
உசாவுவம் கோன் அடி தொட்டேன்.

ஆங்கு ஆக! சாயல் இன் மார்ப! அடங்கினேன், 'ஏஎ!
பேயும் பேயும் துள்ளல் உறும்' எனக்
கோயிலுள் கண்டார் நகாமை வேண்டுவல்;
தண்டாத் தகடு உருவ! வேறாகக் காவின் கீழ்ப்
போதர்; அகடு ஆரப் புல்லி முயங்குவேம்—
துகள் தபு காட்சி அவையத்தார் ஓலை
முகடு காப்பு யாத்துவிட்டாங்கு.

*– கலி 94*

*"கரையில் நின்ற ஒரு பொருளின் நிழல் நீருக்குள் தெரிந்தாற் போன்று மென்மையோடு இங்கு உடலில் கூன் பொருந்தப் பெற்று நடப்பவளே! உன்னுடன் ஒரு காரியத்தை*

உசாவுவேன். அவ்வாறு உசாவுதற்கு நீ என்ன நல் வினையைச் செய்தாய்? இங்கு நிற்பாயாக," என்று கூனியைப் பார்த்துக் குறளன் கூறினான்.

அதைக் கேட்ட கூனி, 'அம்மாவோ!' என இகழ்ந்து தன் மனத்துக்குள் கூறினாள். பின் "கண்ணால் பார்க்கும் தன்மை இல்லாத குறளாய்ப் பிறப்பதற்கு ஏதுவான முகூர்த்தத்தில் ஆந்தைப் பறவைக்குத் தன் பெட்டை ஈன்ற குஞ்சான - மகனே, நீ எம்மை விரும்புவேன் என்று மேலே போகாமல் தடுத்தாய். உன்னைப் போன்ற குறளாக இருப்பவர் என்னைத் தீண்டப் பெறுவார்களோ!" என்றாள்.

அதைக் கேட்ட குறளன் "மாட்சிமைப்பட்ட கலப் பைக்குள் தைக்கும் கொழுவைப் போல் ஓரிடம் கூனாய் அமைந்து ஓரிடம் முன் பக்கமாக வளைந்த வலிய முறித்த விட்டாற் போன்ற நிறைந்த அழகால் என்னைப், பொறுக்காத காம நோயைச் செய்தாய். அதை நான் ஆற்றியிருக்க மாட்டேன். நீ அருளுவாயாயின் என் உயிர் உண்டு. இனி நின் நிலையைச் சொல்வாய்!" என்றான் குறளன்.

அதைக் கேட்ட கூனி, இவன் மனக் கருத்தைப் பாராய் என்று மனத்துள் சொல்லிக் கொண்டாள். பின் "சூதாடும் நெத்தப் பலகையை எடுத்து நிறுத்தியதைப் போன்று மங்கை யரைக் கூடும் முறையைக் கல்லாதவனே, மக்கள் இயக்கம் இல்லாத உச்சிப் பொழுதில் வந்த எம்மைக் கையைப் பிடித்து உன் இல்லத்தே வா என்று சொல்வதற்கு, ஏடா, நின் பெண்டிராய் இருப்பவர் சிலர் இருக்கின்றனரோ? சொல்வாய்!" என்று கூனியுரைத்தாள்.

அதைக் கேட்ட குறளன், "நல்லவளே, தலைக்கு மேலே யும் நடுவில்லையாய் வாள் போன்ற வளைந்த மூட்டுவாயை உடையவளே, உன்னை என் மார்பில் தழுவுவேன். தழுவின் என் நெஞ்சிலே அக் கூன் ஊன்றும். முதுகிலே தழுவு வேனானால் முதுகின் கூனானது கிச்சு கிச்சு மூட்டும். ஆதலால் கூடுதலே அல்லாது முயங்கவும் மாட்டேன். இனிப் பக்கத்தே சிறிது முயங்கும் படியாய் வருவாயாக," என்றான்.

அதைக் கேட்ட கூனி, "சீ! கெட்ட தன்மையை உடைய வனே, எம்மைவிட்டுப் போ" என்றாள்.

அதைக் கேட்டு அவன் அவளை அணுகினான். ஆதலால், "மக்களில் பாதியானவனே, இனி, நீ இந் நிலையைக் கை விடுவாய் என்று அவள் உரைத்தாள். உரைத்தும் பின்பு திரண்ட மரத்தின் வளைவான இடத்தை விட்டு நீங்காமல் பற்றி வளர்ந்த பூங் கொடியைப் போன்று எம் கூனால் வடிவு ஒப்பற்ற உடலை முயங்கி எம்மைப் பாதுகாப்போம் என்று கூறுபவரும் பலராக உள்ளனர். இப் பரத்தையையை உடைய வன் பக்கத்தைத் தழுவுதலைத் தாராய் என்று கூறுவன். இங்ஙனம் இவன் கூற நமக்கு உண்டாகிய குறையாது என்று அவன் கேட்பத் தன் நெஞ்சுக்குள் கூறிக், "குறிய வட்டுப் பலகையைப் போன்றவனே, பலவும் கூடிய உழுத்தம் பணி யாரத்தைவிட, துய்க்கப்பட்டுள்ள கூன் சாதியின் பிறப்பு உன்னை விடத் தாழ்ந்ததோ?" என்றாள் கூனி.

அதைக் கேட்ட குறளன், "யான் உன்னை விரும்புவேன்" என்று சொல்லி அவள் பின் செல்லல் செய்தும், அதற்கு மனம் பொருந்தாத கூனி, "நம் அருகினின்று அவ்விடத்தே போய்க் குழையும், குழைவைக் காணாய் நெஞ்சே!" என்று அவள் கேட்குமாறு சொன்னாள்.

அதைக் கேட்ட கூனி, "ஊர்கின்ற யாமையை எடுத்து நேராக நிறுத்தியதைப் போன்று, நெடியவனாய்த் தோள் இரண்டையும் விலாவுக்குள் வீசி, வரும் உன்னை யாம் விரும்பேம் என்று கூறி விலக்கவும், எம்மை விரும்பி வரும் காமனார் நடக்கும் நடையை மனமே காணாய்," என்றாள். அதைக் கேட்ட குறளன், "ஒருவரை ஒருவர் முயங்குதற்குக் காரணமான அன்பையுடைய சாமனார் தமையனாகிய காமன் நடையைக் காணாய்!" என்று நடந்து காட்டினான்.

அதைக் கேட்ட கூனி, "ஓ! இவன் நடையைப் பார்!" எனக் கூறினாள். அதைக் கேட்ட குறளன்,' நம்முள்ளே நாம் கூடி மகிழ்வதற்கு யான் நின் மெய்யைத் தீண்டுதற்குக் குறியிடம் இன்ன இன்ன இடமாகும் என்று தம்முள் நாம் உசாவக் கடவோம் இனி உன்னை இகழ்ந்து சொல்லேன். அரசன் அடியைத் தொட்டுச் சூள் உரைத்தேன," என்றான்.

அதைக் கேட்ட கூனி, "அப்படியே ஆகுக! மென்மை யால் இனிய மார்பனே, யானும் இகழ்ந்து பேசிவதைக்

கைவிட்டேன். இனிமேல் இக் கோயிலுள் 'ஏர்' என இகழ்ந்து, பேயும் பேயும் துள்ளும் விதத்தை இக் கூனியும் குறளனும் கூறும் என்று சொல்லிச் சிரிக்காதிருத்தலை விரும்புவேன். ஆதலால் அமையாத பொன்தகடு போன்ற உருவத்தை உடையவனே, கோயிலுக்கு அப்பால் உள்ள அறிவையுடைய அவையில் உள்ளார் திரட்சி பொருந்திய ஓலையின் தலையை வெட்டி அதன் தலையில் அரக்கு இலச்சினை இட்டது போல் நிரம்பாத உடலினுள் வாய் முயக்கம் பெற்று நிறையுமாறு இறுக்கமாகத் தழுவிக் கூடக் கடவோம்" என்று கூறினாள்.

## 252. நீ கண்ட காடைப் போர்

நில், ஆங்கு, நில், ஆங்கு; இவர்தரல் – எல்லா! நீ
நாறு இருங் கூந்தலார் இல் செல்வாய், இவ் வழி
ஆறு மயங்கினை போறி! நீ வந்தாங்கே
மாறு, இனி, நின், ஆங்கே, நின் சேவடி சிவப்ப.

செறிந்து ஒளிர் வெண் பல்லாய்! யாம் வேறு இயைந்த
குறம்பூழ்ப் போர் கண்டேன் அனைத்தல்லது, யாதும்
அறிந்ததோ இல்லை, நீ வேறு ஓர்ப்பது.

குறும்பூழ்ப் போர் கண்டமை கேட்டேன், நீ என்றும்,
புதுவன ஈகை வளம் பாடி, காலின்
பிரியாக் கவி கைப் புலையன் தன் யாழின்
இகுத்த செவி சாய்த்து இனி இனிப் பட்டன
ஈகைப் போர் கண்டாயும் போறி, மெய் எண்ணின்,
தபுத்த புலர்வில் புண்.

ஊரவர் கவ்வை உளைந்தீயாய் அல்கல் நின்
தாரின்வாய்க் கொண்டு முயங்கி, பிடி மாண்டு,
போர் வாய்ப்பக் காணினும் போகாது கொண்டு, ஆடும்
பார்வைப் போர் காண்டாயும் போறி; நின் தோள் மேலாம்
ஈரமாய்விட்டன புண்.

கொடிற்றுப் புண் செய்யாது, மெய்ம் முழுதும் கையின்
துடைத்து, நீ வேண்டினும் வெல்லாது கொண்டு, ஆடும்
ஒட்டிய போர் கண்டாயும் போறி; முகம்தானே
கொட்டிக் கொடுக்கும் குறிப்பு.

ஆயின், ஆயிழாய்! அன்னவை யான் ஆங்கு அறியாமை
போற்றிய, நின் மெய் தொடுகு.
'அன்னையோ!' 'மெய்யைப்பொய் என்று மயங்கிய, கைஒன்று
அறிகல்லாப் போறிகாண், நீ.

நல்லாய்! பொய் எல்லாம் ஏற்றி, தவறு தலைப்பெய்து,
கையொடு கண்டாய், பிழைத்தேன், அருள், இனி.

அருளுகம் யாம்; யாரேம், எல்லா! தெருள?
அளித்து, நீ பண்ணிய பூழ் எல்லாம் – இன்னும்
விளித்து நின் பாணனொடு ஆடி அளித்தி–
விடலை நீ நீத்தலின், நோய் பெரிது ஏய்க்கும்;
நடலைபபட்டு, எல்லாம் நின் பூழ். *– கலி 95*

*"தலைவ! நீ மணக்கும் கரிய கூந்தலை உடைய பரத்தையரின் வீட்டுக்குச் செல்பவனாய், இடையில் இங்குப் போகும் வழி தவறி வந்தது போல் உள்ளாய் நீ இங்குப் பரந்து பார்க்காதே! அங்கே நில்! அங்கே நில். இனி உன் பரத்தையர் மனையில் நின் சிவந்த அடியானது மிகச் சிவக்கும் படி வந்தது போலவே திரும்பிப்போ!" என்று தலைவி தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.*

*அதைக் கேட்ட தலைவன், "செறிந்து விளங்கும் வெண்மையான பற்களை உடையவளே! நாம் புதிதாக வந்த காடைப் பறவைப் போரைக் கண்டோம். அதுவன்றி நீ தீங்காக எண்ணும் ஒழுக்கம் சிறிதும் நாம் அறிந்ததும் இல்லை" என்று சொன்னாள்.*

*அதைக் கேட்ட தலைவி, "நீ எந்த நாளும் குறும்பூழ்ப் பறவையின் போரைக் கண்டவிதத்தை நானும் கேட்டேன். அஃது இன்னவிதம் என நான் கூறக் கேள் ஒரு நாள் கொடுத்தாற் போலன்றிப் புதியவரின் கொடையின் பெருமையைப் பாடி உன்னிடத்தினின்று நீங்காதவன் யாழ் வாசித்தலால் கவிழ்ந்த கையை உடையவன் பாணன். தன்னுடைய யாழ் ஓசையால் முன்பு தாழ்த்தப்பட்ட செவிகளை அவன் கூறுவதைக் கேட்பதற்கு அவர் சாய்க்கின்றனர். ஆதலால் இப்போது இக் கூற்றால் புதிதாய் அகப்பட்ட பூழின் புதிய போர்களைக் கண்டவன் போலவும் இருந்தாய். அதனை*

உண்மையாய் எண்ணின் புலராத பசுமையான புண்கள் உன்னைக் கொன்றன. இதனை ஆற்றிய விதம் என்?" என்றாய்.

"ஊரவர் கூறும் அலருக்கு வருந்தாதவனாய்த், தங்குகின்ற நின் மார்பில் உள்ள மாலையில் கையால் அணைத்துக் கொண்டு தழுவி அகப்படுத்துதலால் மாட்சிமைப்பட்டு வேறு சிலரை அகப்படுத்திக் கொண்டு வருவதற்குப் பார்வையால் போக விட்ட மகளிரால் உண்டானது ஊடற்போர். அதைக் கண்டாராகிலும் அதற்கு ஊடிப் போகாமல் உன்னைக் கைக் கொண்டு கலந்துவக்கும் கலவிப் போரைக் கண்டவன் போலவும் இருந்தனை. உன் தோளில் புண்கள் எல்லாம் புலராமல் ஈரமாகவே உள்ளன." என்றாள்.

(இதற்கு வேறு ஒரு பொருள்: ஊரவர் நீ காடைப் பறவையைக் கைக் கொண்டு திரிகின்றாய் எனக் கூறுகின்றனர். அதற்கு நீ வருந்தவில்லை. மார்பில் புள்ளை அணைத்துக் கொண்டு முயங்கித் தசை கரையும் படிகையால் பிடித்தலால் மாட்சிமைப் பட்டு, தனக்கு மாறான புள்ளின் போரைக் காணினும், அதற்கு அஞ்சிப் போகாது போர் செய்தலை மேற்கொண்டு பின்னும் போரைச் செய்யும் பார்வையாகிய புள்ளின் போரைக் கண்டவன் போலவும் உள்ளாய்.)

இவளுக்கு வருத்தம் உண்டாகும் என்று புணர்ச்சிக் காலத்துக் கன்னத்தில் செய்யும் வடுக்களையும் செய்யாமல் உடல் முழுவதையும் கையால் எப்போதும் தடவி, நீ விரும்பினும், நீ அவளை வெல்லாமல் கொண்டு புணரும் ஒட்டுதலை (பந்தயம் வைத்தலை) உடையவளின் கல்விப் போரைக் கண்டவன் போலவும் உள்ளாய். உன் மனக் குறிப்பை நின் முகமே காட்டிக் கொடுக்கும்" என்றாள்.

தான் பரத்தை விரும்பிய நீர் விளையாட்டு முதலியவற்றில் நின்னைப் பந்தயம் வைத்தலை உடையவள்.

(இதன் வேறு பொருள்: காடைப் பறவைக்கு இடுவதற்குச் செவியின் மயிரைப் பறிக்குங் கால் புண்ணாகும்படி பறியாது மெத்தெனப் பறித்து மெய்யை முழுக்கப் பலமுறை துடைத்த, நீ கொண்டாடினும், தான் எதிர்த்த புள்ளை வெல்லாமல் அப் புள்ளினைக் கொண்டு போர் செய்யும் இயக்குபவனாகிய புள்ளின் போரைக் கண்டவன் போலவும் உள்ளாய்.)

*அதைக் கேட்ட தலைவன் அப்படியாயின், ஆயிழையே, நீ கூறும் அத்தகைய குறிகளை நான் அவ் இடங்களில் செய்தறியாமையை உன் நெஞ்சில் போற்றுதற்கு நின் உடலைத் தொட்டுச் சூள் உரைப்பேன் என்றான்.*

*அதைக் கேட்ட தலைவி, 'அம்மையோ!' என்று இகழ்ந்து சொன்னாள்.*

*அதைக் கேட்ட தலைவன், "யான் கூறும் மெய்யைப். பொய் என்று மயங்கிய நீ உலக ஒழுக்கம் ஒன்றும் அறியாய் போல் உள்ளாய்!" என்றான்.*

*"நல்லவளே, நான் செய்த தவறுகளை என் தலையிலே இட்டு என் பொய்களை எல்லாம் தெளிவித்து என் களவைக் கையுடன் பிடித்துக் கொண்டாய். நானும் உனக்குத் தவறிழைத் தேன். இனி எனக்கு அருள்வாய்," என்றான்.*

*அதைக் கேட்ட அவள், "ஏடா, நீ கூறியபடியே அருள் வோம் யாம். அவ்வாறு அருள்வதற்கு யாம் உமக்கு யார்? விடலையே, நின் புள் எல்லாம் நின் முன்பு அளித்துப் பின் கை விடுதலால் நின் நடிப்பில் அகப்பட்டு நோயைப் பெரி தாய்ப் பொருந்தும். அவை வருந்தாதபடி நீ உனக்கு ஆகும் படி, பண்ணிய புள் எல்லாவற்றையும் இன்னும் உன் பாணனால் அழைத்து விட்டு அவற்றின் மனம் தெறியுமாறு அளித்து ஆடுவாயாக!" என்றாள் தலைவி.*

## 253. காமக் குதிரை

**'ஏந்து எழில் மார்ப! எதிர் அல்ல, நின் வாய்ச் சொல்;
பாய்ந்து ஆய்ந்த தானைப் பரிந்து ஆனா மைந்தினை;
சாந்து அழி வேரை; சுவல் தாழ்ந்த கண்ணியை;
யாங்குச் சென்று, ஈங்கு வந்தீத்தந்தாய்?' கேள், இனி:**

**ஏந்தி எதிர் இதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்!
குதிரை வழங்கி வருவல்.'**

**அறிந்தேன் குதிரைதான்;
பால் பிரியா ஐங் கூந்தற் பல் மயிர்க் கொய் சுவல்,
மேல் விரித்த யாத்த சிகழிகைச் செவ் உளை,
நீல மணிக் கடிகை வல்லிகை, யாப்பின் கீழ்
ஞால் இயல் மென் காதின் புல்லிகைச் சாமரை,**

மத்திகைக் கண்ணுறையாகக் கவின் பெற்ற
உத்தி ஒரு காழ், நூல் உத்தரியத் திண் பிடி,
நேர் மணி நேர் முக்காழ்ப் பல்பல கண்டிகை,
தார் மணி பூண்ட தமனிய மேகலை,
நூபுரப் புட்டில், அடியொடு அமைத்து யாத்த
வார் பொலம் கிண்கிணி, ஆர்ப்ப இயற்றி, நீ
காதலித்த ஊர்ந்த நின் காமக் குதிரையை,
ஆய் சுதை மாடத்து அணி நிலா முற்றத்துள்,
ஆதிக் கொளீஇ, அசையினை ஆகுவை,
வாதுவன்; வாழிய நீ!.

சேகா! சுதிர் விரி வைகலில், கை வாரூஉக் கொண்ட
மதுரைப் பெரு முற்றம் போல், நின் மெய்க்கண்
குதிரையோ, வீறியது.

கூர் உகிர் மாண்ட குளம்பினது; நன்றே
கோரமே வாழி! – குதிரை.
வெதிர் உழக்கு நாழியால் சேதிகைக் குத்திக்
குதிரை உடல் அணி போல, நின் மெய்க்கண்
குதிரையோ, கவ்வியது.

சீத்தை பயம் இன்றி ஈங்குக் கடித்தது; நன்றே;
வியமமே – வாழி! – குதிரை.

மிக நன்று இனி அறிந்தேன், இன்று நீ ஊர்ந்த குதிரை;
பெரு மணம் பண்ணி, அறத்தினில் கொண்ட
பருமக் குதிரையோ அன்று; பெரும! நின்
ஏதில் பெரும் பாணன் தூது ஆட, ஆங்கே ஓர்
வாதத்தான் வந்த வளிக் குதிரை; ஆதி
உரு அழிக்கும் அக் குதிரை, ஊரல், நீ ஊரின், பரத்தை
பரியாக வாதுவனாய், என்றும் மற்று அச் சார்த்
திரி குதிரை ஏறிய செல். *– கலி 96*

*"சிறந்த அழகையுடைய மார்பனே! உன் வாய்ச்சொல் உனக்கு எதிர் அன்று. உன் தன்மையைக் கண்டு வினவுகின்றேன். நீ மடி விரிந்து கரையற்றுக் கசங்கிய ஆடையை உடைய அமையாத வலியை உடையாய். சந்தனம் அழிவ*

தற்குக் காரணமான வேர்வையை உடையாய். தோளில் கிடந்து நிறம் மாறிய மாலையை உடையாய் ஆதலால், நீ எங்குச் சென்று இங்கு வந்தாய்," என்று தலைவி தலைவனைப் பார்த்து வினவினாள்.

அதைக் கேட்ட தலைவன், "நான் சொல்வதைக் கேள் உயர்ந்து தனக்கு நிகரான நீலமலரைத் தொடுத்தாற் போன்ற கண்ணை உடையவளே! நான் குதிரை ஏறி குதிரையேற்றம் பயின்று வருகின்றேன்!" என்றான்.

அதைக் கேட்ட தலைவி, "நீ ஏறினது குதிரைதான்! அறிந்தேன். அதைக் கேள். ஐந்து பால் பகுதி நீங்காத ஐந்து வகையை உடைய கூந்தலாகிய பல மயிர்களைப் பல முறையும் கத்தரிகையால் கத்தரிக்கும் பிடரி மயிரையும், மயிர் முடி மீது விரித்து நிறுத்திய துஞ்சாகிய சிவந்த தலை யாட்டத்தையும், நீல மணியைத் தோளில் வைத்துத் தகைத்து இயற்றப்பட்ட கட்டு வடமாகிய கழுத்திற் கட்டும் வல்லிகை யையும், மென்மையான காதிற் கிடக்கும். புல்லிகை என்னும் அணியான கீழே தொங்கும் தன்மையுடைய கன்ன சாமரை யையும் தெய்வ உத்தி என்னும் அணியின் அருகே சேர்த்து ஒரு வடமாய்த் தொங்கும் சுட்டியாகிய குதிரை. கண்ணால் பார்த்து அஞ்சம்படியாய் விட்டு வைத்த அழகு பெற்ற சம்மட்டியையும், நூலால் ஆன முறுக்கேறிய திண்ணிய கடிவாளத்தையும், இனம் ஒத்த மணிகளால் ஆன தன்னில் ஒப்புடைய முக்கண்டன் கட்டுவடமாகிய பலபல நிறத்தை யுடைய கண்டிகையையும், பொன்னால் செய்த மேகலை யாகிய கழுத்தில் கட்டிய கிண்கிணித் தண்டையையும், அடி யில் சமைத்துக் கட்டிய சிலம்பான செச்சையும் ஆரவாரிப்பச் செலுத்தி நீ காதலித்து ஏறின விருப்பத்தை உடைய குதிரையை, குதிரை பழகும் களத்தின் வெளியிலன்றி அழகைப் பெற்ற சாந்து பூசப்பட்ட மாடத்தில் அழகையுடைய நிலா முற்றத்தில் ஆதி எனும் நெடுஞ் செலவை அதற்குக் கொளுத்தி இளைத்தாய். ஆதலால் இனி நல்ல அரசப் பாகன் ஆவாய். நீ வாழ்க," என்றாள்.

"ஞாயிற்றின் கதிர் விரியும் விடியற்காலத்தில் கையில் கொண்ட அலகால் குப்பையை வாருதலை உடைய மதுரை

யின் பெரிய முற்றம் போல் நின் உடலில் கீறியது குதிரையோ, வீரனே?

"அந்தக் குதிரை கூர்மையான நகத்தால் மாட்சிமை யுடைய குளம்பைக் கொண்டது. ஆதலால் மிகவும் கொடி யதே, அதனை ஏறும் நீ தப்பின்றி வாழ்வாயாக!

"மூங்கிலால் ஆன உழக்காலும் நாழியாலும் செதிகை என்ற பெயர் கொண்ட தொழில்களாக வண்ணங்களைத் தோய்த்துக் குத்தின குதிரையுடலின் சேணம் போல நின் உடலில் கவ்வியது குதிரையோ கூறுவாய்?" என்றாள் தலைவி.

"சீ! கெட்டது! தனக்கு ஒரு பயனும் இல்லாது இருக்க வடுப்படுத்துவதற்கு உரியதல்லாத இடத்தே வடுவை உண்டாக்கியது. ஆதலால் இந்தக் குதிரை பெரிதும் வியப்புக்கு உரியதே! இக் குதிரையை ஏறின நீ தீங்கின்றி வாழ்க!

"இன்று நீ ஏறிய குதிரை மிகவும் நல்லது. அதை இப்போது அறிந்து கொண்டேன். அது, அறநூல் கூறிய வழியால் சிறந்த மணம் செய்து கொண்ட மேகலை என்ற அணி அணிந்த காமக்கிழத்தி. யானை குதிரையோ அன்று! பெரும, பாண் தொழிலுக்கு அயலவனாகிய பெரிய பாணன் தூதுவனாய்ப் போக, அங்குப் பரத்தையருடன் உண்டான மாறுபாட்டால் வந்த காற்றுப் போல் ஓடும் குதிரை அதுவே. உன் பழைய வடிவை முன் கூறியபடியே கெடுக்கும். ஆதலால் அக் குதிரை மீது நீ இனி ஏறாதே, அல்லது அப் பரத்தை குதிரையாக நீ அரசப் பாகனாகி எந்நாளும் ஏறின், இங்கு வாராமல் திரி இனியும் இங்குத் தாமதிக்காதே, அக் குதிரையை ஏறுதற்குப் போ," என்று தலைவி வெறுத்துக் கூறினாள்.

## 254. புதிய பரத்தையரிடமே போ!

அன்னை; கடுஞ்சொல் அறியாதாய் போல, நீ
என்னைப் புலப்பது ஒறுக்குவென்மன் யான்—
சிறுகாலை இற் கடை வந்து, குறி செய்த
அவ் வழி என்றும் யான் காணேன் திரிதர,
'எவ் வழிப் பட்டாய்?' சமனாக இவ் எள்ளல்.

முத்து ஏர் முறுவலாய்! நம் வலைப் பட்டது ஓர்
புத்தியானை வந்தது; காண்பான் யான் தங்கினேன்.
ஒக்கும்
அவ் யானை வனப்பு உடையத்தாக கேட்டேன்;
அவ் யானை தான் சுண்ண நீறு ஆடி, நறுநறா நீர் உண்டு—
ஒள் நுதல் யாத்த திலக அவிர் ஓடை,
தொய்யில் பொறித்த வன முலை வான் கோட்டு,
தொய்யகத் தோட்டி, குழை தாழ் வடி மணி,
உத்தி பொறித்த புனை பூண் பருமத்து—
முத்து ஏய்க்கும் வெண் பல் நகை திறந்து,
நல் நகர் வாயில் கதவ வெளில் சார்ந்து,
தன் நலம் காட்டி, தகையினால், கால் தட்டி வீழ்க்கும்,
தொடர் தொடராக வலந்து; படர் செய்யும்
மென் தோள் தடக் கையின் வாங்கி, தற் கண்டார்
நலம் கவளம் கொள்ளும், நகை முக வேழத்தை
இன்று கண்டாய் போல் எவன் எம்மைப் பொய்ப்பது, நீ?

எல்லா! கெழீஇ, தொடி செறிந்த தோள் இணை, தத்தித்
தழீஇக் கொண்டு, ஊர்ந்தாயும் நீ.

குழீஇ அவாவினால், தேம்புவார் இற் கடை ஆறா
உவா அணி ஊர்ந்தாயும் நீ.

மிகாஅது சீர்ப்பட உண்ட சிறு களி ஏர் உண்கண்
நீர்க்கு விட்டு, ஊர்ந்தாயும் நீ.

சார்ச்சார் நெறிதாழ் இருங்கூந்தல் நின் பெண்டிர் எல்லாம்
சிறு பாகராகச் சிரற்றாது, மெல்ல,
விடாஅது நீ எம் இல் வந்தாய்; அவ் யானை
கடா அம் படும் இடத்து ஓம்பு. *— கலி 97*

*"யான் நின்னைப் புணர்தற்கு நீ குறித்த குறியிடத்தில் சென்றேன். அங்கு எந்நாளும் உன்னைக் காணாதவளாய்ப் பல முறையும் திரிந்தேன். என் நிலை இதுவாக நீ விரும்பி ஒழுகும் பரத்தை நீ எவ்விடத்துச் சென்றாய் என்று நாட் காலத்தில் என் வீட்டின் வாசலிலே வந்து கடுஞ்சொல் சொல்லி உன்னைப் புலப்பாள். அதனை நீ அறியாதாதவன்*

போன்று இப்போது நடுவாக நின்று எம்மை இங்ஙனம் இகழ்கின்றனை. இவ் இகழ்ச்சியிடத்து நான் என்னை மிகவும் ஒறுத்துக் கொள்வேன். நீ எந்நாளும் அத் தன்மையுடைய வனாய் இருக்கின்றாய்!" என்று தலைவி சொன்னாள்.

அதைக் கேட்டான் தலைவன். "முத்தைப் போன்ற பல்லை உடையவளே, நம் வலையில் அகப்பட்ட ஒரு புதிய யானை இங்கு வந்தது. அதில் ஏறிக் காண்பதற்காக நான் தங்கினேன்," என்றான்.

அதைக் கேட்டாள் தலைவி, 'நீ கூறியது பொருந்தும்,' என்று தன் மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள். பின்பு அவன் கேட்ட, "அந்தப் புதிய யானை, ஒளியுடைய நெற்றியில் இடப்பட்ட திலகமாய் விளங்கிய பட்டத்தையும் தொய்யில் எழுதப் பெற்ற முலையாகிய வெண்மையான கொம்பையும், தொய்யகம் என்னும் தலைக் கோலமான தோட்டையும், தாழ்ந்த மகரக் குழையாகிய வடித்த மணி களையும், திருவைப் பொறித்த தலைப் பணியாகிய கழுத்து மெத்தையினையும் உடையது. ஆகையால் அஃது அழ குடையது என்பதையும் மற்றவர் சொல்லக் கேட்டேன், அந்த யானை, சுண்ணமான நீற்றை அணிந்து நறிய கள்ளாகிய நீரை உண்டு, நல்ல மனைவாடலில் கதவு என்ற கம்பத்தைச் சார்ந்து அதனுடன் கட்டப்பட்டதே, தனக்குச் சங்கிலியாகக் கட்டுண்டு தன் அழகைக் காட்டி அதனால் ஒருவரும் நீங்கிச் செல்லாதபடி காலைத் தடுத்து வீழ்க்கும். அதுவே அல்லாது மற்றவர்க்கு வருத்தத்தைச் செய்யும் மென்மையான தோளாகிய கையால் வாங்கிக் கொண்டு தன்னைக் கண்டவரின் நலம் என்ற கவளத்தை முத்துப் போன்ற சிரிப்பையுடைய பல்லைத் திறந்து உட்கொள்ளும். அந்தச் சிரிப்பை முகத்தில் கொண்ட யானையை இன்று தான் நீ கண்டவன் போன்று எம்மைப் பொய்யாக்குவது என்ன பயனை உடையது?" எனத் தலைவி தலைவனைப் பார்த்துக் கூறினாள்.

ஏடா, தொடியை அணிந்த தோளாகிய மருமத்தே தழுவிக் கொண்டு பின்பு தத்தி ஏறினாய் நீ! (இது முயக்கத் தையும் புணர்ச்சியையும் உணர்த்தியது)

"உன்மீது கொண்ட விருப்பத்தால் எதிர்கொண்டு வந்து கூடிப் பின்பு வருந்தும் பரத்தையரின் மனையின் வாயிலே வழியாகக் கொண்டு போயினை. அங்கு அந்த யானையை அழகுண்டாகவும் நீ ஏறினாய்.

"உன்னை மிகாமல் சீர்மைப்பட நுகர்ந்த சிறு களிப்பை யுடைய அழகு பொருந்திய கண் அழும்படி நீ சில நாள் விட்டுப் பின்பு கூடினாய்.

(அளவை மீறாமல் மதம் பிறத்தற்கு வேண்டுவனவற்றை உண்ட, சிறு களிப்பையுடைய, மக்களின் அழகை உண்பதற்குக் காரணமான கண்ணையுடைய யானையை நீருக்குள் விட்டு நீ ஏறினாய் என்ற ஒரு பொருளும் தோன்ற இது நின்றது)

"நீ சேர்ந்த சேர்ந்த இடங்களில் உள்ள அறல் தங்கிய கூந்தலையுடைய உன் பெண்டிர் எல்லாம் உன்னைச் சினவாத படி எம் வீட்டுக்கு வந்தாய். அதற்கு அந்தப் புதிய யானை நீ ஏறமாட்டாத பாகனாகும் படியாக உன்னைக் கடந்து மதம் கொள்ளும். அங்கு அதை அங்ஙனம் ஆக விடாது மெல்லக் காத்துக் கொள்வாயாக.' என்று தலைவி புலந்து தலைவனை மறுத்துச் சொன்னாள்.

## 255. புதுப் புனல் பாதுகாத்துக் கொள்!

யாரை நீ எம் இல் புகுதர்வாய்? ஒரும்
புதுவ மலர் தேரும் வண்டே போல் – யாழ
வதுவை விழவு அணி வைகலும் காட்டினையாய்–
மாட்டு மாட்டு ஓடி, மகளிர்த் தரத்தர,
பூட்டு மான் திண் தேர் புடைத்த மறுகு எல்லாம்
பாட்டு ஆதல் சான்ற நின் மாயப் பரத்தைமை–
காட்டிய வந்தமை கைப்படுத்தேன் – பண்டு எலாம்
கேட்டும் அறிவேன்மன், யான்.

தெரி கோதை அம்நல்லாய்! தேறியல் வேண்டும்–
பொரு கரை வாய் சூழ்ந்த பூ மலி வையை
வரு புனல் ஆடத் தவிர்ந்தேன்; பெரிது என்னைச்
செய்யா மொழிவது எவன்?

ஓஓ! புனல் ஆடினாய் எனவும் கேட்டேன்; புனல் ஆங்கே
நீள் நீர் நெறி கதுப்பு வாரும் அறல் ஆக,
மாண் எழில் உண் கண் பிறழும் கயல் ஆக,
கார் மலர் வேய்ந்த கமழ் பூம் பரப்பு ஆகம்,
நாணுச் சிறை அழித்து நன்பகல் வந்த அவ்
யாணர்ப் புதுப் புனல் ஆடினாய், முன் மாலை,
பாணன் புணையாகப் புக்கு.
ஆனாது அளித்து அமர் காதலொடு அப் புனல் ஆடி,
வெளிப்பாடு கவ்வையை யான் அறிதல் அஞ்சி,
குளித்து ஒழுகினாய் எனவும் கேட்டேன்; குளித்தாங்கே
போர்த்த சினத்தான் புருவத் திரை இடா,
ஆர்க்கும் ஞெகிழத்தான் நல் நீர் நடை தட்பச்
சீர்த் தக வந்த புதுப் புனல் நின்னைக் கொண்டு,
ஈர்த்து உய்ப்பக் கண்டார் உளர்.

ஈர்த்தது உரை சால் சிறப்பின் நின் நீர் உள்ளம் வாங்க,
புரை தீர் புதுப் புனல் வெள்ளத்தின் இன்னும்
கரை கண்டதூஉம் இலை.

நிரைதொடீஇ! பொய்யா வாட் தானை,
புனை கழற் கால், தென்னவன்
வையைப் புதுப் புனல் ஆடத் தவிர்ந்ததைத்
தெய்வத்தின் தேற்றித் தெளிப்பேன்; பெரிது என்னைச்
செய்யா மொழிவது எவன்?

மெய்யதை மல்கு மலர் வேய்ந்த மாயப் புதுப் புனல்
பல் காலும் ஆடிய செல்வுழி, ஒல்கிக்
களைஞரும் இல் வழி, கால் ஆழ்ந்து தேரொடு
'இள மணலுள் படல் ஓம்பு – முளை நேர்
முறுவலார்க்கு ஓர் நகை செய்து.

– *கலி 98*

*"புத்தம் புதிய மலர்களை நோக்கிப் போகும் வண்டைப் போன்று நீ புதிய பரத்தையரைத் துய்ப்பதற்கு விரும்பினாய். ஆதலால் அப் பரத்தையரைக் கொண்டு வருவதற்கு அவர்கள் இருக்கும் இடந்தோறும் ஓடிப் போய் அவர்களைக் கொண்டு வருகின்றாய். ஆகையால் எப்போதும் பூட்டப்படும் குதிரையை உடைய திண்ணிய தேர் ஆரவாரித்த தெருக்கள் எல்லாம்.*

உன் பொய்யான பரத்தைமைக் குணத்தை நான் முன்னெல் லாம் கேட்டு அறிந்துள்ளேன். அதுவே அன்றி நாள்தோறும் நீ மணந்து கொள்ளும் விழாவால் உண்டாகிய அலங்காரத்தை என்னைத் தவிர மற்றவர்களுக்குக் காட்டுவதற்கு நீ இப்படி வருவாய் என்றும் தெளிந்துள்ளேன். எம் வீட்டில் புகுகின்ற நீ எமக்கு என்ன தன்மை உடையாய்?" என்று வினவினாள்.

அதைக் கேட்ட தலைவன் மாலையையும் அழகையும் கொண்ட நல்லவளே! நான் செய்யாதவற்றைப் பெரிதாக எடுத்துக் கூறுவது என்ன பயனை உடையது? தன்னிடத்தில் பொருந்திய மலர்கள் மிக்க நீர் மோதும் கரையையுடைய வையை ஆற்றின் நீரில் ஆடுதற்காகத் தங்கினேன். இதனை நீ தெளிதல் வேண்டும்," என்று தலைவன் தலைவியை நோக்கிச் சொன்னான்.

'ஓஓ' என்று வியந்து தலைவி தன் நெஞ்சுடன் கூறினாள்.

"நீ அங்கு நீராடினாய் என்றும் நான் கேட்டேன். நீ ஆடிய நீர்தான், அறல் நீண்ட தன்மையை உடைய நெறித்த மயிராக, அங்குத் துள்ளும் கயல்கள் சிறந்த அழகு பொருந்திய கண்ணாக, கருமை மலர்தல் பொருந்திய மணக்கும் மலர்களை உடைய சோலையில் நாணாகிய அரணை முறித்துப் பலரும் காணும்படி பகல் பொழுதில் வந்த புதிய நீரைப் பாணன் வாயிலாக ஊடலைப் போக்கி மாலைக் காலத்துக்கு முன்னர் போய் நீராடினாய்" என்று தலைவியுரைத்தாள்.

மேன் மேல் அன்பு செய்து காதலுடனே அந் நீரில் ஆடுவதால் வெளிப்படும் அலரை நான் அறிவேன் என அஞ்சி மறைந்து நடந்தாய் என்று மற்றவர் கூறவும் நான் கேட்டேன். அதுவே அல்லாது உடலை மறைத்த சினத்துடன் புருவம் என்ற திரையை இட்டு நின் ஒழுக்கத்தைத் தடுக்கும் படி வந்த, சிலம்பொலியால் ஆரவாரிக்கும் புதிய நீரில் நீ குளித்த அங்கு உன்னைக் கவர்ந்து கைக் கொண்டு இழுத்துச் செலுத்தக் கண்டவரும் உள்ளனர்" என்றாள் தலைவி.

அங்ஙனம் இழுத்த நீர் புகழ் அமைந்த தலைமையை உடைய நின் நீர்மையுடைய மனத்தை வாங்கிக் கொள்வ தால், அந்தப் புதிய நீர்ப் பெருக்கினின்றும் கரையேறுதற்கு இன்னும் கரை காணவும் இல்லை!" என்றாள் தலைவி.

அதைக் கேட்ட தலைவன், "தொடியை உடையவளே! தப்பாத வாட்படையையும் கழற் காலையும் உடைய பாண்டியனின் வையையாற்றில் வந்த புதிய நீரில் ஆடுதற்குத் தங்கிய விதத்தைச் சொல்லால் உனக்குத் தெளிவித்துப் பின் தெய்வத்தால் தெளிவிப்பேன். நான் செய்யாதவற்றைப் பெரிதாகச் சொல்வது உனக்கு என்ன பயனைத் தரும்?" என்றான்.

"மிக்க மலரைச் சூடின பொய்யை உடைய புதிய நீரைப் பலகாலும் ஆடவேண்டித் தேரொடு செல்லும் போது நேர் ஒத்து முளைத்த பற்களை உடையவர்க்கு ஒரு சிரிப்பை உண்டாக்கி ஏற்படுத்தி நின்னைப் பிடித்துக் கரையேற விடுபவர் இல்லாத காலத்தில், இளமணலில் கால் நிலை தளர்ந்து அகப்பட்டுக் கொள்வதினின்று உன்னைப் பாதுகாத்துக் கொள்வாயாக!" என அவனை நெருங்கிச் சொன்னாள் தலைவி.

## 256. அருள்செய் துன்பப்படுபவளுக்கு

நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும், அவை எடுத்து,
அற வினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்
திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது,
குழவியைப் பார்த்து உறூஉம் தாய் போல், உலகத்து
மழை சுரந்து அளித்து ஓம்பும் நல் ஊழி யாவர்க்கும்
பிழையாது வருதல் நின் செம்மையின் தர, வாய்ந்த
இழை அணி கொடித் திண் தேர், இன மணி யானையாய்!
அறன் நிழல் எனக் கொண்டாய், ஆய் குடை; அக் குடைப்
புற நிழற்கீழ்ப் பட்டாளோ, இவள்? இவண் காண்டிகா—
பிறை நுதல் பசப்பு ஊரப் பெரு விதுப்பு உற்றாளை!
பொய்யாமை நுவலும், நின் செங்கோல் அச் செங்கோலின்
செய் தொழில் கீழ்ப் பட்டாளோ, இவள்? இவண் காண்டிகா—
காம நோய் கடைக்கூட்ட வாழும் நாள் முனிந்தாளை!
ஏமம் என்று இரங்கும், நின் எறி முரசம், அம் முரசின்
ஏமத்து இகந்தாளோ, இவள்? இவண் காண்டிகா—
வேய் நலம் இழந்த தோள் கவின் வாட இழப்பாளை!
ஆங்கு—
நெடிது சேண் இகந்தவை காணினும், தான் உற்ற

**வடுக் காட்ட, கண் காணாதற்றாக, என் தோழி**
**தொடி கொட்ப நீத்த கொடுமையைக்**
**கடிது என உணராமை கடிந்ததோ, நினக்கே.** – *கலி 99*

*கள்ளை உண்ணுதல் கூடாது என்று நீக்கின தேவர்க்கும், அதனை உண்ணலை நீக்காத அசுரர்க்கும், நீக்குதலும் நீக்காமையுமாகிய அவ் இரண்டையும் கைக் கொண்டு அறத்தொழிலாகக் கொண்டு இன்பப்படுத்தும் வியாழன் வெள்ளி என்னும் குரு இருவர். அவர்கள் செய்த, வழி வேறு பட்ட தொழில்களை உடைய அரசியலைக் கூறும் நூல் வழியைத் தப்பாமல் மேற் கொண்டு ஆள்பவனே!*

*குழந்தையைப் பார்த்த இன்பம் கொள்ளும் தாய் அதற்கு முலை சுரந்து பால் கொடுக்குமாறு போன்று மழையானது தன்னை வேண்டிய காலத்தில் பெய்து உலகத்தைக் காக்கும் நல்ல முறையை எல்லார்க்கும் தப்பாது உண்டாதலை உன் நடுவு நிலைமையால் உலகத்துக்குத் தரும்படி பொருந்திய, கொடியுடைய தேரையும் மணிகட்டிய நல்இன யானையை யும் உடையவனே!*

*உன் அழகிய குடையின் நிழல் அறத்தைச் செய்யும் என்று எடுத்தனை. அந்த குடையினது நிழலின் புறத்தே இவள் அகப்பட்டாளோ. அதில் அகப்பட்டவள் அல்லள். இங்ஙனம் வளர்பிறை போலும் நெற்றி, பசலை கொள்ளப் பெரிய நடுக்கம் உள்ள இவளை இங்கு அருள் கொண்டு பார்!*

*நின் செங்கோலின் உயர்வான நடுவு நிலைமை தப்பாமையை உலகம் புகழ்ந்து கூறும் அந்தச் செங்கோலின் இனிய தொழிலுக்குக் கீழான கொடுந்தொழிலில் இவள் தள்ளப்பட்டாளோ! அங்ஙனம் அதில் தள்ளப்பட்டவள் அல்லள். இவ்வாறு காம நோய் இறப்பை உண்டாகுதலால், தான் உயிர் வாழும் நாளை வெறுத்த இவளை இங்கு அருள் கொண்டு பாராய்!*

*அடிக்கப்படுகின்ற உன் முரசம் இவ் உலகத்துக்குக் காவல் என்று கூறும்படியாய் ஒலிக்கும். அந்த முரசினது காவ லினின்று இவள் நீங்கினவளல்லள். இங்ஙனம் மூங்கில் தன் நலம் இழந்ததற்குக் காரணமான தோள் பழைய அழகு கெடும் படி வருந்துகின்ற இவளை இவ் இடத்தில் அருளிப் பார்!*

*கண் நெடிதாக நீங்கின பொருள்களைக் காணினும் தன்னிடத்தே ஏற்பட்ட வடுவைப் பிறர் காட்டவும் காணாத தன்மை கொண்டது. அத் தன்மையாய், என் தோழியின் தொடிகள் கழன்று சுழலும்படியாக நீ விட்ட கொடுமையை நீ கடிது என்று உணராதிருத்தல் உனக்குச் சான்றோரால் விலக்கப்பட்டவற்றுள் ஒன்றோ? அஃது இல்லையே!" என்றாள் தோழி.*

## 257. அழகு இழந்தவளுக்கு நீயே அருள்வாய்

ஈண்டு நீர்மிசைத் தோன்றி இருள் சீக்கும் சுடரே போல்,
வேண்டாதார் நெஞ்சு உட்க, வெரு வந்த கொடுமையும்,
நீண்டு தோன்று உயர் குடை நிழல் எனச் சேர்ந்தார்க்குக்
காண் தகு மதி என்னக் கதிர் விடு தண்மையும்,
மாண்ட நின் ஒழுக்கத்தான், மறு இன்றி, வியன் ஞாலத்து
யாண்டோரும் தொழுது ஏத்தும் இரங்கு இசை முரசினாய்!

'ஐயம் தீர்ந்து யார்கண்ணும் அருந் தவ முதல்வன் போல்
பொய் கூறாய்' என நின்னைப் புகழ்வது கெடாதோதான்—
நல்கி நீ தெளித்த சொல் நசை எனத் தேறியாள்
பல் இதழ் மலர் உண்கண் பனி மல்கக் காணுங்கால்?

'சுரந்த வான் பொழிந்தற்றா, சூது நின்று யாவர்க்கும்
இரந்தது நசை வாட்டாய்' என்பது கெடாதோதான்—
கலங்கு அஞர் உற்று, நின் கமழ் மார்பு நசை இலாள்
இலங்கு கோல் அவிர் தொடி இறை ஊரக் காணுங்கால்?

'உறைவரை நிறுத்த கோல், உயிர் திறம் பெயர்ப்பான் போல்
முறை செய்தி' என நின்னை மொழிவது கெடாதோதான்—
அழிபடர் வருத்த, நின் அளி வேண்டிக் கலங்கியாள்
பழி தபு வாள் முகம் பசப்பு ஊரக் காணுங்கால்?

ஆங்கு—
தொல் நலம் இழந்தோள், நீ துணை எனப் புணர்ந்தவள்;
இன் உறல் வியன் மார்ப! 'இனையையால்; கொடிது!' என,
நின்னை யான் கழறுதல் வேண்டுமோ,
என்னோர்கள் இடும்பையும் களைந்தீவாய் நினக்கே?

*– கலி 100*

குற்றம் அற்றுச் சிறந்த உன் ஒழுக்கத்தால் கடல் மீதே தோன்றி இருளைக் கெடுக்கும் ஞாயிறு போன்று இவ் உலகத்தில் உள்ள பகைவர் நெஞ்சம் அஞ்சுமாறு செய்யும் கொடுந்தொழிலையும், நெடியதாய்த் தோன்றும் ஏனைய வற்றின் உயர்ந்த குடையைத் தமக்கு நிழல் என்று அடைந்த வர்க்குக் கதிரைச் சொரியும் தண்மதி போன்ற குளிர்ச்சி யையும், அகன்ற உலகத்தில் உள்ள எந்த நாட்டவரும் வணங்கிப் புகழும் ஒலிமிக்க முரசினை உடையவனே!

நீ அன்பு கொண்டு உன்னைப் பிரியேன் என்று தெளிவித்த சொல்லை இவையே விரும்பப்படும் சொற்கள் என்று எண்ணித் தெளிந்தவள். அவளின் பல இதழ்களை உடைய மலர் போன்ற கண், நீர் நிறைய நீ காணுமிடத்து அரிய தவத்தையுடைய அறம் வளர்த்த தென்முகத்தவனைப் போல் யாவரிடத்தும் பொய் கூற மாட்டாய் என ஐயம் இல்லாமல் உன்னைப் புகழ் கின்றது உலகம். இத்தன்மை நினக்குக் கெட்டுப் போகாதோ?

மனம் கலங்குகின்ற வருத்தத்தை அடைந்து மணம் கமழும் உன் மார்பை விரும்பியவளின் தொடி முன்கை யினின்றும் கழல நீ காணுமிடத்து, நீரைச் சுரந்த முகில் அந் நீரைப் பெய்தது போல், உன்னைச் சூழ நின்று இரந்த பொருளை நச்சுதலைக் கெடுக்க மாட்டாய் என்று உலகத்தவர் கூறும் சொல் உனக்குக் கெட்டுப் போகாதோ?

மனம் அழிகின்ற நினைவு வருத்துதலால் உன் அருளை விரும்பிக் கலங்கியவளின் ஒளியைப் பெற்ற முகம் பசலை படரக் காணுமிடத்து, உயிரை உடலினின்று போக்கும் இய மனைப் போன்று யாவரையும் உலகத்தில் வாழும் எல்லை யிலே நிறுத்திய கோலால் முறைமை செய்வாய் என்று உலகம் நின்னைக் கூறும். அச் சொல் உனக்குக் கெட்டுப் போகாதோ?

எத்தகையவரின் வருத்தத்தையும் போக்கும் அதனால் இனிய முயக்கத்துக்குரிய அகன்ற மார்பை உடையவனே: நீ புணரும் துணை என்று எண்ணிப் புணர்ந்தவள் தன் இயற் கையான நலத்தையும் இழந்தனள். இத் தன்மை உடையவனாய் நீ உள்ளனை. இது நினக்குக் கொடியது என்று நின்னைச் சினக்க வேண்டுமோ? நீயே அருள் செய்வாயாக! என்று பரத் தையர் பாங்கிருந்த வந்த தலைவனை தோழி இறஞ்சினாள்.

## பரிபாடல் மருதம்

### 258. வையையே குறையாக் காமம் தருக

நிறை கடல் முகந்து உராய் நிறைந்து நீர் துளும்பும் தம்
பொறை தவிர்பு அசைவிடப் பொழிந்தன்று வானம்;
நிலம் மறைவது போல் மலிர் புனல் தலைத் தலைஇ
மலைய இனம் கலங்க மலைய மயில் அகவ,
மலை மாசு கழியக் கதழும் அருவி இழியும்;
மலி நீர் அதர் பல கெழுவு தாழ் வரை
மாசு இல் பனுவற் புலவர் புகழ் புல
நாவின் புனைந்த நன் கவிதை மாறாமை
மேவிப் பரந்து விரைந்து வினை நந்தத்
தாயிற்றே தண் அம் புனல்.

புகை பூ அவி ஆராதனை அழல் பல ஏந்தி
நகை அமர் காதலரை நாளணிக் கூட்டும்
வகை சாலும் வையை வரவு.

தொடி தோள் செறிப்பத் தோள்வளை இயங்கக்
கொடிசேரா திருக் கோவை காழ் கொளத்
தொகு கதிர் முத்துத் தொடை கலிழ்வு மழுக
உகிரும் கொடிறும் உண்ட செம் பஞ்சியும்
நகில் அணி அளறு நனி வண்டல் மண்ட
இலையும் மயிரும் ஈர்ஞ் சாந்து நிழத்த
முலையும் மார்பும் முயங்கு அணி மயங்க
விருப்பு ஒன்றுபட்டவர் உளம் நிறை உடைத்தென
வரைச் சிறை உடைத்ததை வையை; வையைத்
திரைச் சிறை உடைத்தன்று, கரைச்சிறை அறைக எனும்
உரைச் சிறைப் பறை எழ ஊர் ஒலித்தன்று.

அன்று போர் அணி அணியின் புகர்முகம் சிறந்தென
நீர் அணி அணியின் நிரைநிரை பிடி செல
ஏர் அணி அணியின் இளையரும் இனியரும்
ஈரணி அணியின் இகல் மிக நவின்று
தணி புனல் ஆடும் தகை மிகு போர்க்கண்
துணி புனல் ஆகத் துறை வேண்டும் மைந்தின்

அணிஅணி ஆகிய தாரர் கருவியர்
அடு புனல் அது செல அவற்றை இழிவர்.
கைம்மான் எருத்தர் கலி மட மாவினர்.
நெய்ம் மாண் சிவிறியர் நீர் மணக் கோட்டினர்,
வெண் கிடை மிதவையர் நன் கிடைத் தேரினர்,
சாரிகை மறுத்துத் தண்டா உண்டிகை
ஓர் இயவு உறுத்தர ஊர்ஊர்பு இடம் திரீஇச் –
சேரி இளையர் செல அரு நிலையர்
வலியர் அல்லோர் துறைதுறை அயர
மெலியர் அல்லோர் விருந்து புனல் அயர
சாறும் சேறும் நெய்யும் மலரும்
நாறுபு நிகழும் யாறு வரலாறு
நாறுபு நிகழும் யாறு கண்டு அழிந்து
வேறுபடு புனல் என விரை மண்ணுக் கலிழைப்
புலம் பரி அந்தணர் கலங்கினர் மருண்டு
மாறு மென் மலரும் தாரும் கோதையும்
வேரும் தூரும் காயும் கிழங்கும்
பூரிய மாக்கள் உண்பது மண்டி
நார் அரி நறவம் உகுப்ப நலன் அழிந்து
வேறாகின்று இவ் விரி புனல் வரவு என
சேறு ஆடு புனலது செலவு.

வரை அழி வால் அருவி வாதாலாட்ட
கரை அழி வால் அருவி கால் பாராட்ட
இரவில் புணர்ந்தோர் இடைமுலை அல்கல்
புரைவது பூந் தாரான் குன்று எனக் கூடார்க்கு
உரையோடு இழிந்து உராய் ஊரிடை ஓடிச்
சலப் படையான் இரவில் தாக்கியது எல்லாம்
புலப்படப் புன்அம் புலரியின் நிலப்படத்
தான் மலர்ந்தன்றே
தமிழ் வையைத் தண்ணம் புனல்.

விளியா விருந்து விழுவார்க்குக் கொய்தோய்
தளிர் அறிந்தாய், தாம் இவை
பணிபு பசி ஒண்பபண்டெல்லாம் நனி உருவத்து

என்னோ துவள் கண்டீ.
எய்தும் களவு இனி நின் மார்பின் தார் வாடக்
கொய்ததும் வாயாளோ கொய் தழை கை பற்றிச்
செய்ததும் வாயாளோ செப்பு.
புனை புணை ஏறத் தாழ்த்ததை தளிர் இவை
நீரின் துவண்ட சேஎய் குன்றம் காமர்
பெருக்கு அன்றோ வையை வரவு.

ஆம்ஆம் அது ஒக்கும் காதல் அம் காமம்
ஒருக்க ஒரு தன்மை நிற்குமோ ஒல்லைச்
சுருக்கமும் ஆக்கமும் சூள் உறல் வையைப்
பெருக்கு அன்றோ பெற்றாய் பிழை.
அருகு பதியாக அம்பியின் தாழ்ப்பிக்கும்
குருகு இரை தேரக் கிடக்கும்பொழி காரில்
இன் இளவேனில் இது அன்றோ, வைவை நின்
வையை வயமாக வை.
செல் யாற்றுத் தீம் புனலில் செல் மரம் போல
வவ்வு வல்லார் புணை ஆகிய மார்பினை
என்னும் பனியாய் இரவெல்லாம் வைகினை
வையை உடைந்த மடை அடைத்தக்கண்ணும்
பின்னும் மலிரும் பிசிர் போல இன்னும்
அனற்றினை துன்பவிய நீயடைந்தக் கண்ணும்
பனித்துப் பனி வாரும் கண்ணவர் நெஞ்சம்
கனற்றுபு காத்தி வரவு.

நல்லாள் கரை நிற்ப நான் குளித்த பைந் தடத்து
நில்லாள் திரை மூழ்கி நீங்கி எழுந்து ஏற்று யான்
கொள்ளா அளவை எழுந் தேற்றாள் கோதையின்
உள் அழுத்தியாள் எவளோ தோய்ந்தது யாது என
தேறித் தெரிய உணர் நீ பிறிதும் ஓர்
யாறு உண்டோ? இவ் வையை யாறு
இவ் வையை யாறு என்ற மாறு என்னை கையால்
தலை தொட்டேன் தண் பரங்குன்று.

சினவல் நின் உண்கண் சிவப்பு அஞ்சுவாற்குத்
துனி நீங்கி ஆடல் தொடங்கு துனி நனி

கன்றிடின் காமம் கெடுஉம் மகள் இவன்
அல்லா நெஞ்ச முறப்பூட்டக் காய்ந்தே
வல் இருள் நீயல் அது பிழையாகும் என
இல்லவர் ஆட இரந்து பரந்து உழந்து
வல்லவர் ஊடல் உணர்த்தர நல்லாய்
களிப்பர் குளிப்பர் காமம் கொடி விட
அளிப்ப துனிப்ப ஆங்காங்கு ஆடுப
ஆடுவார் நெஞ்சத்து அலர்ந்து அமைந்த காமம்
வாடற்க வையை நினக்கு, – *நல்லந்துவனார் பரி பா 6*

*முகில்கள் நீர் நிறைந்த கடலில் இருக்கும் நீரை முகந்து கொண்டு வானில் எங்கும் பரவின; நீர் நிறைதலால் துளும்பும் தம் சுமை தீர்ந்து இளைப்பாறும் பொருட்டுப் பெய்பவை போல் மழை பொழிந்தன. அதனால் மிக்க நீர் ஊழிக் காலத்தில் நிலத்தை மூடப் பெருகுவது போன்று பெருகி, இடந்தோறும் கூடி, மலையில் வாழும் மான் கூட்டம் முதலிய உயிரினம் கலங்குமாறும், மயில்கள் களித்து அகவவும், மலைகள் மீது படிந்துள்ள அழுக்குகள் நீங்கும்படி விரையும் அருவியாய் விழுகின்றது வெள்ளம். அது ஓடுதற்குரிய வரிகள் பற்பல பொருந்திய மலைச் சாரலில் குளிர்ந்த அழகிய அந் நீர், குற்றம் இல்லாத நூற் கேள்வியைக் கொண்ட நல்லிசைப் புலவர்கள் புகழும் அறிவையுடைய தம் நாவால் பாடிய நல்ல செய்யுள்கள் பொய்படாமல் நிலை நிற்கச் செய்ய எங்கும் போய்ப் பரவி உழவு முதலிய தொழில்கள் பெருகும்படி தாவிச் சென்றது.*

*அந்த வெள்ள நீர் வையையாற்றில் வந்த வருகையில் புது நீரில் ஆடுவதற்கு விரும்பினர் மகளிர். தம் கூந்தலைப் புலரச் செய்வதற்குரிய அகில் மரம் முதலிய புகைப்பதற்குரியவையும், அணிந்து கொள்வதற்குரிய மலர்களும், வையை யாற்றுக்கு வழிபாடு செய்தற்கு உரியவையும், பொன்மீன், பொன் நண்டு முதலிய பற்பல பொருள்களையும் எடுத்துக் கொண்டனர். தம் மகிழ்ச்சி பொருந்திய கணவன் மாரைத் திருநாளுக்கு உரிய அணிகள் ஆடைகள் ஆகியவற்றை அணியச் செய்யும் இம்முறை பொருந்தியது.*

மகிழ்ச்சியால் மகளிர்க்கு உடல் பூரித்தலால் தொடிகள் தோளில் அழுந்த, தோளில் இட்ட வளையம் முன் கையில் வந்து மோதும். எழுதப்பட்ட தொய்யில் கொடிகள் ஒன்றுடன் ஒன்று கூடி கலந்து அழியும். மகளிரின் மேகலை வடங்கள் அற்று உதிர்ந்து அதனது நூல் வெளிப்பட்டுத் தோன்றும். திரண்ட ஒளியை உடைய முத்து மாலை கலங்கிச் சந்தனம் முதலிய பூசப்பட்டதால் ஒளி மழுங்கும். நகத்திலும் கன்னத்தி லும் ஊட்டப் பட்ட செம்பஞ்சுக் குழம்பு அழியும். முலை யில் பூசப்பட்ட குங்குமக் குழம்பு வண்டல் போல் படிந்து தோன்றும். தளிர் கொண்டு கட்டப்பட்ட படலை மாலையும் கூந்தலும் குளிர்ந்த சந்தனத்தை அழிக்கும். மங்கையர் மார்பி லும் ஆடவர் மார்பிலும் பொருந்திய அணிகலன்கள் தம்முன் கலந்து விளங்கும். மகளிரும் மைந்தரும் அழகிய அவ் விருவர் தம் உள்ளமும் அன்பால் ஒன்றுபட்டு அவர் தம் நிறையை உடைக்கும். அவை போல் வெள்ளம் மலை போன்ற அணை களை உடைத்தழித்தது. அந்த ஆற்றின் சிறகுகளான அலை களோ வையையாற்றின் கரையான காவலை உடைத்தது. அக் கரையை அடைத்தற்கு ஆள்கள் வருக என்று காவலர் உரைத்தனர். அவர் தம் சொல்லாகிய காவல் ஒலியுடன் பறை யும் ஒலித்தது. அவ் ஒலியுடன் கிளர்ந்து எழும் ஊராரின் ஆரவாரமும் எழுந்தது.

அங்ஙனம் ஊரார் கிளர்ந்து ஆரவாரம் செய்த அன்று, போர் செய்வதற்கு அணி வகுக்கப்பட்ட அணியில் களிற்றி யானைகள் அணி அணியாய்ச் செல்வதைப் போல், இந்த நீராட்டு விழாவின் பொருட்டு வகுக்கப்பட்ட வரிசையில், வரிசை வரிசையாகப் பெண் யானைகள் சிறந்து செல்லலால், அழகிய அணி அணிந்த அணிகலன்களையும் இளைய ஆட வரும் அவருக்கு இளையரான மகளிரும், கரை முதலிய வற்றை இடிக்கும் அந்த வையை யாற்றின் வெள்ளத்ினூடு புகுவதற்காக அணிகலன்களை நீக்கி நீராடத் தக்க அணி களுடனே யானையின் பிடரியிலும், மெல்லிய நடையுடைய குதிரையின் மீதும், விளையாட்டுப் போரைப் பெரிதும் விரும்பினராய் நீராட்டு விழாவுக்குரிய தகுதி மிக்க தெளிந்த வையை நீரே விளையாட்டுப் போரை நிகழ்த்துதற்குரிய

போர்க்களமாய்க் குறித்தனர். தமக்கு ஏற்ற துறையைத் தேர்ந்து கொள்ளும் விருப்புடன் ஒருவருக்கு ஒருவர் முற்பட்டுக் கூட்டம் கூட்டமான தூசிப் படைபோல் விளங்கிச் சென்றனர். உள்ளே இடப்பட்ட புழுகு நெய்யால் சிறந்த நீர் பாய்ச்சும் கருவி உடையவராய்ச் சென்றனர். அவர்கள் வெண்மையான நெட்டிகளால் செய்யப்பட்ட தெப்பங்களை உடையவராய், நிறம் ஊட்டப்பட்ட தேர்களை உடையவராய்ச் சென்றனர். செலவு தவிராத யானைக்கூட்டமும் குதிரைக் கூட்டமும் தம் தம் கதியில் செல்வதை ஒழிந்து அந்த ஒரே வழியில் செல்பவரை நெருக்கும்படியாய் மக்கள் சென்றனர்.

மேற்கண்ட வண்ணம் மதுரை மக்கள் ஆற்றங்கரையில் திரிந்தனர். இதனால் புறஞ்சேரியில் இருந்த இளைஞர் தாம் வெளியே செல்வதற்கும் அரிய நிலையை உடையவர் ஆயினர். எல்லாரும் ஒருவரை ஒருவர் முற்படச் சென்றனர். சென்று துறைகளில் இடம் பிடிக்க முயன்றனர் வலிமையற்றவர் ஆற்று நீரில் குதித்தாட அஞ்சினர். துறை துறையாய்த் துறை அருகில் நின்று நீராடலாயினர் மெலியவர் அல்லாதவர் புதிய நீரில் குதித்து நீர் விளையாடில் கூடலாயினர். அதனால் அவர்கள் அணிந்திருந்த பத்துத் துவர் முதலியன ஊறின நீரும் சந்தனம் முதலியவற்றின் குழம்பும் நறுமண எண்ணெ யும் சூடியிருந்த மலர்களும் மணக்குமாறு இந்த வையை யாறு விளங்கும். இதனால் வேதத்தை விரும்பும் அந்தணர் இப்படிப் பல்வேறு மணம் மணக்க ஓடும் ஆற்றின் தன்மையை உணர்ந்து மங்கையரும் ஆடவரும் பூசிய மணப் பொருள் களைக் கழுவிய அக் கலங்கல் நீரை 'இது தூய்மை இழந்து விட்டது' என எண்ணி மருட்சியடைந்தனர். நீராடுதலும் குடங்கையால் நீர் அருந்துதலும் செய்யாதவராய்க் கலக்கம் அடைந்தனர்.

சூடிக் கழித்தலால் தம் நிறம், மணம் மாறிய மென்மை யான மலரும், ஆடவர் அணிந்த மாலைகளும், மங்கையர் அணிந்த மாலைகளும் கரையை இடித்து வருதலால் அந்தக் கரையில் உள்ள மரம் செடி கொடிகளின் வேர், தூர், காய் கிழங்குகள் ஆகியவற்றுடன் கீழ் மக்கள் குடித்து மிஞ்சிய பன்னாடையால் வடித்த கள்ளை வார்த்தலால் அதனையும்

மேற்கொண்டு இந்த விரிந்த நீரின் வருகை நலம் கெட்டு மாறுபட்டது என்று அந்த அந்தணரே அல்லாமல் மற்றவரும் அவ் வையை யாற்றை நீங்கிச் சென்றனர். அக் குழம்பிய நீரின் வரவு இத் தன்மையுடையது.

எல்லை கடந்த இழிகின்ற வெண்மையான அருவி தாலாட்டவும் தடையில்லாமல் செல்லும் தூய்மையானதும் உருவம் அற்றதும் ஆன தென்றற்காற்று பாராட்டவும் இரவுக் குறியில் தலைவியைக் கண்டு கூடிய தலைவர் அத் தலைவியின் முலையிடைக் கிடந்து இன்துயில் கொள்வதற்குக் கடப்ப மாலையை அணிந்த முருகப் பெருமானின் திருப்பரங்குன்றம் பொருத்தமானது என்று இவ்வாறு எண்ணி அங்குச் செல்லாத மாந்தர்க்குக் கூறும் தொழிலுடன், இழிந்து பரவி மதுரைத் தெருக்களின் இடையே ஓடி வஞ்சனை செய்யும் மலர் அம்புகளையுடைய காமன் இரவு நேரத்தில் மகளிரையும் மைந்தரையும் மோதியவை எல்லாம் புலனாகும் படி மகளிர் ஊடல் கொண்டு அறுத்து எறிந்த மாலை முதலியவற்றை வாரிக் கொணர்வதால் யாவர்க்கும் புலப்படச் செய்து பொலி வற்ற வைகறைப் பொழுதில் தெருக்கள் யாவும் வறுநிலமாகும் படி பரந்தது. தமிழையுடைய வையை ஆற்றில் வந்த அழகிய புதுநீர் இத் தன்மையுடையது என்று அந் நீரில் ஆடிய தலை வன் தன் காதல் பரத்தைக்குச் சொன்னான்.

மேற்கண்டவாறு தலைவன் காதற் பரத்தையிடத்துக் கூறினான். காதற்பரத்தை அதைக் கேட்டு ஊடல் கொண்டு அவனைப் பழித்து ஊடல் கொண்டாள். அவன் அவளது ஊடலைத் தீர்க்க முயன்றான்.

"நீ அழைக்கப்படாத விருந்தினனாய்ச் சென்றாய் நின்னை விரும்பும் மகளிர்க்காகவே இத் தளிரைக் கொய்தாய். எனக்காக இத் தளிரைக் கொய்யவில்லை" என்று காதற் பரத்தை உரைத்தாள்.

அதைக் கேட்டான் தலைவன். "நீ நன்கு அறிந்தாய். இவை பிற மங்கையர்க்குக் கொய்தவை! உண்மையே!" என்றான் அவன்.

அதைக் கேட்ட காதற்பரத்தை "பணிவான சொற்களைச் சொல்வாயேனும் முறிந்த அன்பை உடையவனே, இச் செய

வாச நறு நெய் ஆடி, வான் துகள்
மாசு அறக் கண்ணாடி வயக்கி வண்ணமும்
தேசும் ஒளியும் திகழ நோக்கி
வாச மணத் துவர் வாய்க் கொள்வோரும்,
இடு புணர் வளையொடு தொடு தோள்வளையர்
கட்டு வடக் கழலினர் மட்டு மாலையர்
ஓசனை கமழும் வாச மேனியர்
மட மா மிசையோர்
பிடிமேல் அன்னப் பெரும் படை அனையோர்
கடு மா கடவுவோரும் களிறுமேல் கொள்வோரும்,
வடி மணி நெடுந் தேர் மா முள் பாய்க்குநரும்,

விரைபு விரைபு மிகை மிகை ஈண்டி
ஆடல் தலைத்தலை சிறப்பக் கூடல்
உரைதர வந்தன்று வையை நீர் வையைக்
கரை தர வந்தன்று காண்பவர் ஈட்டம்
நிவந்தது நீத்தம் கரைமேலா நீத்தம்
கவர்ந்தது போலும் காண்பவர் காதல்
முன் துறை நிறை அணி நின்றவர் மொழி மொழி
ஒன்று அல பலபல உடன் எழுந்தன்று அவை
எல்லாம் தெரியக் கேட்குநர் யார் அவை
கில்லா கேள்வி கேட்டன சிலசில
ஒத்த குழலின் ஒலி எழ முழவு இமிழ்
மத்தரி தடாரி தண்ணுமை மகுளி
ஒத்த அளந்து சீர் தூக்கி ஒருவர் பிற்படார்
நித்தம் திகழும் நேர் இறை முன்கையால்
அத் தக அரிவையர் அளத்தல் காண்மின்.

'நாணாள்கொல் தோழி நயன் இல் பரத்தையின்
தோள் நலம் உண்டு துறந்தான் என ஒருத்தி
யாணர் மலி புனல் நீத்தத்து இரும் பிடி
சேண வெரிநின் சிறந்தானோடு ஏறினாள்;
நாணுக் குறைவு இலள் நங்கை மற்று என்மரும்,
பூண் ஆரம் நோக்கிப் புணர் முலை பார்த்தான் உவன்
நாணாள் அவனை இந் நாரிகை என்மரும்,

அமிர்து அன நோக்கத்து அணங்கு ஒருத்தி பார்ப்ப
கமழ் கோதை கோலாப் புடைத்து தன் மார்பில்
இழையினைக் கை யாத்து இறுகிறுக்கி வாங்கிப்
பிழையினை என்ன பிழை ஒன்றும் காணான்
தொழுது பிழை கேட்கும் தூயவனைக் காண்மின்.
பார்த்தாள் ஒருத்தி நினை என பார்த்தவளைப்
பொய்ச் சூளாள் என்பது அறியேன் யான் என்று இரந்து
மெய்ச் சூள் உறுவானை மெல்இயல் பொய்ச் சூள் என்று
ஒல்லுவ சொல்லாது உரை வழுவச் சொல்ல
உறைத்தும் செறுத்தும் உணர்த்துவானைப்
புல்லாத ஊடிப் புலந்து நின்றவள்
பூ எழில் வண்ண நீர் பூரித்த வட்டு எறிய
வேல் எழில் உண்கண் எறி நோக்கம் பட்ட புண்
பாய் குருதி சோர பகை இன்று உளம் சோர,
நில்லாது நீங்கி நிலம் சோர, அல்லாந்து
மல் ஆர் அகலம் வடு அஞ்சி மம்மர் கூர்ந்து,
எல்லாத் துனியும் இறப்பத் தன் காதலன்
நல் ஏர் எழில் ஆகம் சேர்வித்தல் எஞ்ஞான்றும்
வல்லதால் வையைப் புனல்.

என ஆங்கு
மல்லிகை மௌவல் மணம் கமழ் சண்பகம்
அல்லி கழுநீர் அரவிந்தம் ஆம்பல்
குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி
நல் இணர் நாகம், நறவம் சுரபுன்னை
எல்லாம் கமழும் இரு சார் கரை கலிழத்
தேறித் தெளிந்து, செறி இருள் மால் மலை
பாறைப் பரப்பில் பரந்த சிறை நின்று
துறக்கத்து எழிலைத் தன் நீர் நிழல் காட்டும்
கார் அடு காலை கலிழ் செங் குருதித்தே
போர் அடு தானையான் யாறு.

சுடுநீர் வினைக் குழையின் ஞாலச் சிவந்த
கடி மலர்ப் பிண்டி தன் காதில் செரீஇ
விடு மலர்ப் பூங் கொடி போல நுடங்கி

அடிமேல் அடிமேல் ஒதுங்கித் தொடி முன்கைக்
காரிகை ஆகத் தன் கண்ணி திருத்தினாள்
நேர் இறை முன்கை நல்லவள் கேள் காண்மின்.

துகில் சேர் மலர் போல் மணி நீர் நிறைந்தன்று
புனல் என மூதூர் மலிந்தன்று அவர் உரை
உரையின் உயர்ந்தன்று கவின்
போர் ஏற்றன்று, நவின்று; தகரம்
மார்பு அழி சாந்தின் மணல் அளறு பட்டன்று
துகில் பொசி புனலின் கரை கார் ஏற்றன்று
விசும்பு கடி விட்டன்று விழவுப் புனல் ஆங்க.

இன்பமும் கவினும் அழுங்கல் மூதூர்
நன்பல நன்பல நன்பல வையை
நின் புகழ் கொள்ளாது இம் மலர் தலை உலகே.

*– நல்வழுதியார் பரி பா 12*

*காற்றினால் மோதப்பட்ட முகில் மின்னலையும் இருளையும் மாறி மாறிப் பரப்பித் தன் இனத்துடன் போய் சைய மலையை அடைந்து அதனைச் சூழ்ந்து, இடை விடாமல் மழை பெய்தது. அப் பெயலால் காட்சிக்கு இனிய 'அந் நீர் மலைச் சாரலில் காற்றால் உதிர்ந்த பூக்கள் தன் மீது பரவி விளங்க, ஒளி விளங்கும் பொறியை உடையதும் கண்டவர் அஞ்சுவதுமான நாகப் பாம்பினது பெயர் கொண்ட அம் மலைச் சாரலில் உள்ள நாகமரம், அகில்மரம், சுரபுன்னை மரம், ஞெமை மரம், சந்தனமரம் ஆகிய இவை வருந்தும்படி செய்து, தகர மரம், ஞாழல் மரம், தேவதார மரம் என்பன வற்றைச் சாய்த்துத் தன்னுள் கொண்டு காற்றைப் போன்று விரைவாய் வரும் வருகை ஒரு பெருங்கடல் பொங்கி வருவதைப் போல் விளங்கியது.*

*அழகுடைய குளிர்ந்த நீரைப் பெற்ற வையை ஆறு மேல் உரைத்ததைப் போன்று மலர் பரக்கப்பட்டு வந்து மதுரையின் மதிலை மோதும் என்று கண்டோர் உரைத்தனர். அதைக் கேட்டனர் அந் நகர மக்கள். அவர்கள் மின்னலைப் போல் விளங்கும் அணிகலன்களை அணிந்து கொண்டனர்; பொன் தகட்டால் ஆன பூவான அணிகளைப் புனைந்து கொண்டனர்;*

சந்தனச் சாந்தை மாற்றி, அகிற்புகையினாலாகிய சாந்தைத் தம் உடம்பில் மிகுதியாய்ப் பூசிக் கொண்டனர்; முகில் போன்ற தம் கூந்தலைக் குழலாக முடித்தனர்.; அந்தக் கூந்தலில் வெட்டி வேரும், விலாமிச்ச வேரும் ஆகிய இரண்டுடன் கட்டப்பட்ட பல மலர் மாலையைச் சூடிக் கொண்டனர்; நீராடுவதற்குப் பொருத்தமான புடைவைகளை உடுத்திக் கொண்டனர். கட்டப்பட்ட கோக்கு வாயானே அழகுடைய தாகிய வடங்களைப் பூண்டனர்.

மகளிர் சிலர் கண்ணாடியின் அழுக்குப் போக நறு மண நெய்யைப் பூசிக் கற்பொடியிட்டுத் துலக்கினர். அக் கண்ணாடியில் தம் இயற்கையழகும் செயற்கை அழகும் ஆடவரைப் புணர்ந்ததால் உண்டான ஒளியும் விளங்க அவற்றைக் கண்டு களித்தனர்; ஐந்துமணத்தோடு கூட்டி இடித்த பாக்கினை வாயில் இட்டு மெல்பவர், ஆணி இடும் இரட்டை வளையலுடன் செறிக்கப்படும் தோள் வளையை உடையவர், கட்டு வடத்துடன் கால் மோதிரம் அணிந்தவர், தேன்சிந்தும் மாலையை யுடையவர், ஓர் ஓசனை தொலைவு மணம் கமழும் மேனியர். இத்தகைய இயல்புடையவராய் விளங்கிய அம் மகளிருள் சிலர் மெல்லிய நடையை யுடைய குதிரையின் மீது ஏறினர். பெரிய பெண் அன்னம் போன்ற சிலர் பெண் யானையின் மீது ஏறினர்.

ஆடவருள் சிலர் விரைவான நடையை உடைய குதிரை மீது ஏறிச் செலுத்துபவரும், மற்றும் சிலர் யானை மீது ஏறிச் செலுத்துபவரும் சிலர் தெளிந்த ஓசையை உடைய மணிகள் கட்டப்பட்ட பெரிய தேரில் பூட்டிய குதிரைகளை முட் கோலால் குத்திச் செலுத்துபவரும் ஆகி, விரைந்து விரைந்து மிக மிக நெருங்கிச் சென்றனர். வையை நீராடல் இடந் தோறும் இடந்தோறும் சிறக்குமாறும் மதுரையில் உள்ள மக்கள் எல்லாம் தன்னைப் புகழவும் வையை வந்தது. அந்த வையை வெள்ளத்தைக் காண வந்த மக்கட் கூட்டம் வையை யின் இரண்டு பக்கத்தும் அதன் கரையை ஒப்ப வந்து கூடியது. அந் நீர் வெள்ளம் கரைக்கு மேலே உயர்ந்தது. அந் நீர் தன்னைக் காணவந்த மக்களின் ஆசை வெள்ளத்தையும் கவர்ந்து கொண்டு பெருகியது போல் பெருகிற்று. அப்போது

அந்த வையை ஆற்றில் நீராடும் துறையின் முன் நிறைந்த அணி அணியாக நின்ற மக்கள் பேசும் மொழிகள் ஒன்றுடன் ஒன்று பொருந்தாமல் பல பல ஒரே காலத்தில் எழுந்தன. யார் அம் மொழிகளை எல்லாம் பொருள் விளங்கக் கேட்க வல்லவர்! அவற்றைக் கேட்க இயலாது. எம்மால் கேட்கப் பட்டவை சிலவேயாம்.

தங்களுக்குள் ஒருவருக்கு ஒருவர் பிற்படாதவராய்க் கூத்தாடுதலில் அழகு பொருந்தத் தம்முள் ஒத்து விளங்கும் ஆடல் மகளிர், இசைக் கருவியினின்று இசை எழ, முழவு, மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி என்னும் இக் கருவிகளின் ஓசையை யுடைய தாளத்தை அளந்து தம் நேரிய முன் கையால் தாளக்கை அளத்தலைக் காணுங்கள்.

தோழியே, கேட்பாயாக! ஒருத்தி நாணத்தில் குறை வில்லாதவளாய் இருந்தும் தனக்குச் சிறந்தவனான கணவன் நன்மையற்ற பரத்தையர் இல்லத்துக்குப் போய் அவரது தோளின் அழகை துய்க்கும் பொருட்டுத் தன்னை நீங்கிச் சென்றான் என்று அவனுடன் ஊடியிருந்தவள் புது வருவாயை யுடைய வையை வெள்ளத்தில் அந்த ஊடலையும் மறந்து பெரிய பெண் யானையின் முதுகின் மீது நீராடும் விருப்பத் துடன் தன் கணவனுடன் உயர ஏறினாள். அவள் நாணம் உடையவளோ என்று சிலர் கூறினார்கள்.

கூட்டத்தில் நின்றே ஒருவன் பூங்கொம்பைப் போன்ற ஒருத்தியின் குவிந்த முலைகளைக் கூர்ந்து பார்க்கின்றான். அவன் இளகிய நெஞ்சன்: திண்மை இல்லாதவன் என்று சிலர் இகழ்ந்தனர். இவன் இவட்குப் பண்டு மலர் முதலிய வற்றைக் கையுறையாகத் தந்ததும் இல்லை; காதல் மொழி பேசியது மில்லை. அங்ஙனமாகவும் வழியில் போகும் அயலான் ஒருவன் பின்னே தன் மனத்தைச் செலுத்தி மேனி பசலையூர நின்றாள்; யாம் காதல் கொண்டவிடத்தும் நிறை யழிவதற்கு அஞ்சி அதைக் கைவிட வேண்டாவோ? அவன் மங்கை அணிந்துள்ள முத்தாரத்தின் அழகை நோக்குபவன் போல் இவளுடைய நெருங்கிய முலைகளைப் பார்த்தான். இவன் அங்ஙனம் பார்ப்பதனால் இவளும் நாணம் கொள்ள வில்லை எனக் கூறினான்.

ஒருத்தி தன் கணவனை அமிழ்தம் போன்ற பார்வையால் பார்த்தாள். அவள் பொறுக்காது தன் மார்பில் அணிந்திருந்த மலர் மாலையை எடுத்து அதையே கோலாகக் கொண்டு தன் கணவனைப் புடைத்துத் தன் மார்பில் உள்ள வடத்தை எடுத்து அவனுடைய கைகளைக் கட்டினாள். இறுக்கி இறுக்கிப் பார்த்தாள். "நீ குற்றம் உடையாய்!" என்றாள் அவள் அவ்வாறு தன்னைக் கட்டியதற்குத் தன்னிடம் குற்றம் ஒன்றும் இல்லாமையால், அவன் அவளை வணங்கினான். 'நல்லாய்! யான் செய்த குற்றம் யாது?' என்று வினவினான். அவனைக் காணுங்கள். "ஏடா! நின்னை ஒருத்தி நோக்கினாள். அவ்வாறு நோக்கியவள் நின்னால் சூள் பொய்க்கப் பட்ட வளாக இருக்க வேண்டும்!" என்று அவனது பிழையை எடுத்துக் காட்டினாள். காட்ட, அவன், "நல்லாய், எனப் பார்த்தவளை அறியேன். அவள் சூள் பொய்க்கப்பட்ட வள் என்பதையும் அறியேன்!" என்று சொல்லி பணிந்த சொற் களைச் சொல்லி இரைந்து உண்மையாகவே ஆணை யிட்டான். அதைக் கேட்ட மெல்லிய சாயலை உடைய அவள் பொறுக்கக் கூடிய சொற்களைச் சொல்லாமல், 'ஏடா, நீ இப்போது செய்யும் சூள்தான் என்ன? இதுவும் பொய்யான சூளே!' என்று கூறினாள். அதைக் கேட்ட அவன் மீண்டும் சூளில் மிக்கும், சினந்தும் அவளது ஊடலைப் போக்க முயன்றான்.

இவ்வாறு ஊடல் தீர்ந்த போதும் கூடாமல் ஊடி நின்றவள் அந்த நிலையினின்றும் புலவி நிலைமையில் நின்று மலரின் மணத்தையும் அழகையுமுடைய அரக்கு நீர் நிறைந்த வட்டினை அவனது மார்பில் எறிந்தாள். அந்த அரக்கு நீர் அவளது அழகிய மையுண்ட கண்ணான வேல்பட்ட புண்ணி னின்றும் குருதி சொரிவதைப் போல் சொரிந்தது. அவன் அந் நிலையைப் பொறுக்கவில்லை. பொறுக்காத வனாய் அவளிடம் பகைமை இல்லாதவனாய்த் தன் நெஞ்சம் நெகிழ்த லால் அவள் முன் நில்லாமல் அவ்விடத்தின்று நீங்கி நிலத்தில் விழுந்து வணங்கினான். வணங்குவதற்காக அவ்வாறு நிலத்தில் வீழ்ந்தவனைக் கண்ட அவள், அவனது மற்போருக்குப் பொருந்திய மார்பில் தான் வீசிய வட்டால் புண்பட்டு வீழ்ந்

தான் எனக் கருதி அஞ்சி மயங்கி முன்னம் தான் கொண்ட எல்லாப் புலவியும் நீக்கிக் கூடச் செய்தலில், இந்த வையை நீர் இன்றே அல்லாது எக்காலத்தும் வன்மை யுடையது. அந் நிகழ்ச்சியையும் காணுங்கள் என்று காட்டினர்.

போரில் பகைவரை வெல்லும் படையை யுடைய பாண்டி யனின் இந்த வையை ஆறு, மல்லிகை மலர், சண்பக மலர், முல்லை மலர், தாமரை மலர், வெள்ளல்லி மலர், செங்கழுநீர் மலர், தாமரை மலர், அரக்காம்பல் மலர், கஞ்சங் குல்லை மலர், மகிழ மலர், குருக்கத்தி மலர், பாதிரி மலர், நல்ல பூங் கொத்துக்களையுடைய நாகமர மலர், நறவ மலர், சுரபுன்னை மலர் என்ற இந்த எல்லா மலரும் மணம் வீசுவதற்கு இடமான இரு பக்கத்தும் உள்ள கரையை மோதிக் கலங்கியது. பின்பு பாறைக் கல்லையுடைய நிலம் போன்று அடையாத பரந்த கல்லணையால் தடையுண்டு தேங்கி நின்று இருள் மிக்க மாலையில் மிகவும் தெளிந்து வான் உலகத்தில் நிகழும் தொழி லைத் தன் நீர்நிழல் காட்டும். அந்த இருளை ஓட்டும் காலைப் போதில் கலங்கிய சிவந்த குருதியின் தன்மை உடையதாகும்.

நேரிய இறையான முன் கையையுடைய இம் மங்கை, அசோகின் சிவந்த புது மலரைத் தீயில் இட்டுச் சுட்டமையால் ஒளிமிக்க இயல்புடைய தொழிற் சிறப்புடைய காதணி போல் தொங்கும்படியாய்த் தன் செவியில் செருகிக் கொண்டு மலர் மலர்ந்த பூங்கொடி போல் ஒல்கி, ஒருவன் இட்டுச் சென்று போனவள் ஒருபக்கம் ஒதுங்கி வளையல் அணிந்த தனது முன் கையால் தன் தலையில் சூடியுள்ள மாலையை அழகாகத் திருத்தினாள். ஆகவே அவன் அவளுடைய காதலனே ஆக வேண்டும். இந்தக் காட்சியையும் காணுங்கள் என்று இப்படித் தாம் விரும்பியவற்றைக் காட்டினர்.

நீராடிய மகளிர் பெற்றிருந்த அணிகளிலிருந்து உதிர்ந்த நீரோட்டத்தை உடைய மணிகள் அவர் ஆடையில் செய்யப் பட்ட பூத் தொழிலைப் போல் நிறைந்து காணப்பட்டன என்று இவ்வாறு நீராடியவர் பலவாய்க் கூறியவை மதுரை யில் சென்று மிகுந்தது. நீராடியவர் சொல்லைவிட அவர் நீராடியதால் எய்திய அழகு மிக்கது. அங்ஙனம் மிக்க அந்த அழகு பிறர் அழகுடன் மாறுபட்டது. நீராடிய மகளிரின்

*மார்பினின்றும் வழிந்து வீழ்ந்த தகரச் சாந்தினால் வையை ஆற்றின் மணல் சேறாகும் தன்மையை அடைந்தது. அந்த ஆற்றின் கரைகள் நீராடிக் கரை சேர்ந்தாரின் ஆடையினின்றும் ஒழுகும் நீரால் கார் காலத் தன்மை பெற்றது. அந் நீராட்டு விழா அம் மதுரையில் நடத்தலால் வானுலகம் சிறப்புற ஒழிந்தது.*

*வையையே, இவ் ஆரவாரம் உடைய பழையதாகிய மதுரையில் வாழும் மக்களுக்கு நின்னால் இன்பமும் அழகும் பல நல்லவை உள்ளன ஆயின. ஆதலால் அம் மண்ணுலகம் அகன்ற இடம் உடையது என்றாலும் நின் புகழ் மிக விரிந்தது. ஆதலால் நின் புகழைத் தன்னிடம் அடக்க மாட்டாது.*

## வெள்ளம் பெருகி வற்றாது வாழ்க

கரையே, கை வண் தோன்றல் ஈகை போன்ம் என
மை படு சிலம்பின் கறியொடும் சாந்தொடும்
நெய் குடை தயிரின் நுரையொடும் பிறவொடும்
எவ் வயினானும் மீதுமீது அழியும்
துறையே முத்து நேர்பு புணர் காழ் மத்தக நித்திலம்
பொலம் புனை அவரி இழை, கலங்கல் அம் புனல் மணி
வலம் சுழி உந்திய திணை பிரி புதல்வர்
கயந் தலை முச்சிய முஞ்சமொடு தழீஇத்
தம்தம் துணையோடு ஒருங்கு உடன் ஆடும்
தத்து அரிக் கண்ணார் தலைத்தலை வருமே.

செறுவே, விடு மலர் சுமந்து பூ நீர் நிறைதலின்
படு கண் இமிழ் கொளை பயின்றனர் ஆடும்
களி நாள் அரங்கின் அணி நலம் புரையும்
காவே சுரும்பு இமிர் தாதோடு தலைத்தலை மிகூஉம்
நரந்த நறு மலர் நன்கு அளிக்கும்மே.

கரைபூ ஒழுகு தீம் புனற்கு எதிர் விருந்து அயர்வ போல்
கான்அல் காவும் கயமும் துருத்தியும் தேன்
தேன் உண்டு பாடத் திசைதிசைப் பூ நலம்
பூத்தன்று வையை வரவு.

கருங்கையின் ஆயத்தார் சுற்றும் எறிந்து
குரும்பையின் முலைப் பட்ட பூ நீர் துடையாள்

பெருந் தகை மீளி வருவானைக் கண்டே
இருந் துகில் தானையின் ஒற்றிப் 'பொருந்தலை
பூத்தனன் நீங்கு' எனப் பொய் ஆற்றால் தோழியர்
தோற்றம் ஓர் ஒத்த மலர் கமழ் தண் சாந்தின்
நாற்றத்தின் போற்றி நகையொடும் போத்தந்து
இருங் கடற்கு ஊங்கு இவரும் யாறு எனத் தங்கான்
மகிழக் களிப் பட்ட தேன் தேறல் மாற்றிக்
குருதி துடையாக் குறுகி, மரு(வ) இனியர்
பூத்தனள் நங்கை பொலிக என நாணுதல்
வாய்த்தன்றால் வையை வரவு.

மலையின் இழி அருவி மல்கு இணர்ச் சார்ச் சார்க்
கரை மரம் சேர்ந்து கவினி மடவார்
நனை சேர் கதுப்பினுள் தண் போது மைந்தர்
மலர் மார்பின் சோர்ந்த மலர் இதழ் தாஅய்
மீன் ஆரம் பூத்த வியன் கங்கை நந்திய,
வானம் பெயர்ந்த மருங்கு ஒத்தல் எஞ்ஞான்றும்
தேன் இமிர் வையைக்கு இயல்பு.

கள்ளே புனலே புலவி இம் மூன்றினும்
ஒள் ஒளி சேய்தா ஒளி கிளர் உண் கண் கெண்டை
பல் வரி வண்டனம் வாய் சூழ் கவினொடும்
செல் நீர் வீவயின் தேன் சோரப் பல் நீர்
அடுத்துஅடுத்து ஆடுவார்ப் புல்லக் குழைந்து
வடுப் படு மான்மதப் சாந்து ஆர் அகலத்தான்
எடுத்த வேய் எக்கி நூக்கு உயர்பு தாக்கத்
தொடுத்த தேன் சோரும் வரை போலும் தோற்றம்
கொடித் தேரான் வையைக்கு இயல்பு.

வரை ஆர்க்கும் புயல் கரை,
திரை ஆர்க்கும் இத் தீம் புனல்,
கண்ணியர் தாரர் கமழ் நறுங் கோதையர்
பண்ணிய ஈகைப் பயன் கொள்வான் ஆடலால்
நாள் நாள் உறையும் நறுஞ் சாந்தும், கோதையும்,
பூத்த புகையும், அவியும் புலராமை

**மறாஅற்க வானம் மலிதந்து நீத்தம்**
**வறாஅற்க வையை நினக்கு.**

*– நல்லழிசியார் பரி பா 16*

வையை ஆற்றில் வெள்ளமானது பெருகி வரும் வருகையால் முகில்கள் பொருந்தும் மலையிடம் உள்ள மிளகினோடும் சந்தன மரத்தினோடும், வெண்ணெய் உண்டாதற் பொருட்டுக் கடைவதற்குக் காரணமான தயிர் போல் விளங்கும் நுரையுடனும், மலர், பொன், மணி முதலிய மற்றப் பொருள்களோடும் அந்த நீர் பெருகியது. வையைக் கரையில் எங்கும், அப் பொருள்களை அச் செய்கை பாண்டியனின் கொடைத் தன்மையைப் போன்றது என்று கண்டோர் சொல்லும்படி, மேன்மேலும் வாரி வாரித் தன் அலைக் கைகளால் வீசிக் கரையை அழிக்கும். இனிப் பிற நீராடும் துறைகள் தோறும் வலமாகச் சுழித்துப் பாயும் கலங்கலையுடைய அழகிய அந் நீர். ஆண்டுதோறும் நீராடுபவரின் தம்முள் ஒத்து முத்துச் சேர்ந்த வடம், தலைக்கோல முத்து, பொன்னால் இயற்றிய விளக்கமுடைய அணிகலன்கள், மணி முதலிய தன்னால் கொண்டு வரப்பட்டவற்றை, தம் இல்லிடத்தினின்றும் பிரிந்து தமியராய் நீராடிய சிறுவர்களின் மென்மையான தலை முக்கியிடம் உள்ள முஞ்சம் என்னும் அணிகலனோடு சேரக் கொண்டு செவ்வரிகளுடன் கூடிய கண்களையுடைய மங்கையர் தம் தம் காதல் துணைவருடன் ஒருங்கு கூடி நீராடுகின்ற மதுரையிடத்த நீர்த் துறையில் எல்லாம் வரும்.

மருதநில வயல்கள், மலர்களைச் சுமந்து பொலிந்த வையை நீர் புகுந்த நிறைதலால், இசை தோன்றுவதற்கு இடமான முழவு முதலிய இன்னியக் கருவிகளில் எழும் அலியையும் பாட்டையும் கற்ற ஆடு மகளிர், கூத்தாடும் மகிழ்தற்குரிய நாளில் அமைக்கப்பட்ட கூத்தரங்கின் ஒப்பனை செய்யப்பட்ட அழகைப் போன்று விளங்கும். பூம் பொழில்கள் தமக்கு விருந்து அளித்த இனிய வையை நீருக்குக் கைம் மாறாக எதிர் விருந்து அளிப்பவை போல் மேலும் மேலும் நெருங்கிய வண்டுகள் ஒலிப்பதற்குக் காரணமான பூந் தாதுகளுடன், நரந்தம்போல் மணம் கமழும் மலர்களை மிகவும்

வழங்கும். நறுமணம் பொருந்திய பூம்பொழில்களிலும் குளங்களிலும் ஆற்றிடைக் குறைகளிலும் வண்டுகள் கள் உண்டு களித்து பண் பாடும்படி மலர்களால் ஆகிய அழகான திக்குகளில் எல்லாம் விளங்கியது.

வையை ஆற்றின் வெள்ள வருகை மேலும் நீராடக் கரையை அடைந்த மகளிர்களுள் தோழியர் ஒரு காதற் பரத்தையைச் சூழ்ந்து நின்று, மூங்கிலால் ஆன துருத்தியினால் அரக்கு நீரை வீசினர். அப் பரத்தை தன் தெங்கிளங்காயைப் போன்ற முலைகளின் மீது பட்ட அதனைத் துடையாதவளாய் விளங்கினாள். தன் பெரிய ஆடையின் முன்தானையால் ஒற்றினாள். அவ் அமயத்தே அக் காதல் பரத்தையிடம் தலைவன் வந்தனன். அவனை அந்தத் தோழியர் கண்டனர். அவர்கள் பொய்யாய் அத் தலைவனை நோக்கி, "ஐயனே! இவள் பூப்பு எய்தினாள் ஆதலால் அவளை அணுகாதே! நீங்குக" என்றனர். அதைக் கேட்ட தலைவன் பூப்பின் தோற்றத்தை ஒத்திருந்த மலர் மணம் கமழும் சிவந்த அரக்கு நீரின் நறுமணத்தினால் அவளுக்குப் பூப்பு இல்லை என்பதை உணர்ந்தான். ஆயினும் தோழியர் செய்த விளையாட்டால் தோன்றிய நகைப்புடனே அவ் இடத்தினின்றும் நீங்கிப், பெரிய கடலில் புகுதற்கு விரையும் வையை ஆற்று நீர் போல், விரைந்து அங்கிருந்து சிறு பொழுதும் தாமதம் செய்யாமல் அப் பரத்தையுடன் இல்லத்தில் கூடி மகிழும்படி சென்றான். அந்த இல்லத்தில் களிப்புத் தரும் பழத்தேனால் செய்த மதுவையும் அருந்தாமல் காதற் பரத்தையை அணுகினான். அவளது மார்பில் பட்ட குருதி நிறம் உடைய அரக்கு நீரை நன்கு துடைத்தான். அவளைத் தழுவினான். அத் தோழியர் இல்லத்தில் உள்ள முதிய பரத்தையர்க்கு அந்த விளையாட்டைக் கூறினர். நகைத்தலுக்காக நம் நங்கை பூப்பு எய்தினாள் அவள் பொலிவுடையவள் ஆகுக என வாழ்த்தினர். அதைக் கேட்ட காதற் பரத்தைக்கு நாணம் உண்டாகியது.

சைய மலையினின்றும் இழிந்த அருவி போந்து வையையாற்றின் இரு கரைதோறும் உள்ள மலர்க்கொத்துகள் நிறைந்த மரத்தைச் சேர்ந்து சேர்ந்து அவற்றின் மலர் உதிர்ந்தமையாலே அழகை அடைந்தது. மேலும் தன்னிடம்

இழிந்து நீராடும் மகளிரின் மடப்பம் உடைய கூந்தலில் நின்று வடிந்த தேன் சேர்ந்த குளிர்ந்த மலர்களும் ஆடவர் அகன்ற மார்பிலிருந்து சேர்ந்த மலர்களும் இதழ்களும் பொருந்தப் பெற்றது; முத்தைப் போன்று விளங்கும் மீன் களையுடைய வானத்தில் உள்ள பெருகிய அகன்ற கங்கை ஒழுகும் கூற்றை ஒத்தல் வண்டுகள் இசைபாடும் இவ் வையை ஆற்றுக்கு எக் காலத்தும் பொருந்தியிருக்கும் இயல்பாகும்.

மங்கையரின் ஒளி மிக்க மை பூசப் பெற்ற கண் எனும் கெண்டை மீன்கள் உண்ணல், நீரில் ஆடுதல், தாம் காதலருடன் ஊடுதல் என்னும் மூன்று காரணங்களாலும், ஏற்கெனவே சிவந்த நிறம் மேலும் சிவக்கும். பல வரிகளை யுடைய வண்டுகள் கூட்டம் தம் வாயில் சூழ்ந்து மொய்க்கும் அழகுடனே, கூந்தலின்று நீங்கும் தன்மையுடைய பூவினின்று தேன் துளிக்கவும், ஒரு தலைவன் மிக்க நீரில் ஆடும் பரத்தையரை மீண்டும் மீண்டும் தழுவுவான். அதனால் நெகிழ்ந்து அழிந்ததும் அழியாததுமான கத்தூரிக் குழம்பு உடைய மார்பினனான அத் தலைவனின் தோற்றம், பனியால் வளைந்து விளங்கி அப் பனியின் பாரம் உலர்ந்தவுடன் காற்றால் நிமிர்த்தப்பட்ட மூங்கில் அக் காற்றால் தள்ளுதலால் உயர்ந்து தாக்குதலால், தன்னிடம் தொடுக்கப் பட்ட தேன் உடைந்து ஒழுகும் மலையினது தோற்றம் போல் விளங்கும். இவ்வாறு தோன்றச் செய்தல் பாண்டியனது வையை ஆற்றின் இயல்பாகும்.

வையை ஆறே! தலையில் மாலைபுனைந்தவராய் மார்பில் மாலையுடையவராய் ஆடவரும் நறுமணம் கமழும் மாலை அணிந்த மகளிரும், பொருள்களைத் தானம் பண்ணி, அதன் பயனான இன்பத்தை துய்த்துண்ணவேண்டி நாள் தோறும் நின்னிடம் நீராடுபவர். ஆதலால் அவர் உனக்குக் கொணரும் காணிக்கைப் பெருளான பொன்மீன் முதலியவையும் அவர் அணிந்த நறிய சந்தனக் குழம்பு முதலியவையும், அவர் எழுப்பும் அகிற் புகையும், நினக்குத் தரும் உண்டியும் குறையாமல் நிறையும் பொருட்டு முகில் மழை நிரம்பப் பெய்ய, நினக்கு அம் மழையினால் ஏற்படும் வெள்ளம் பெருகி எக் காலத்தும் வற்றாது நிறைவதாகுக.

## காமப் பன்றிகள்

கடல் குறைபடுத்த நீர் கல் குறைபட எறிந்து,
உடல் ஏறு உருமினம் ஆர்ப்ப மலை மாலை
முற்றுபு முற்றுபு பெய்து சூல் முதிர் முகில்
பொருது இகல் புலி போழ்ந்த பூ நுதல் எழில் யானைக்
குருதிக் கோட்டு அழி கறை தெளி பெறக் கழீஇயின்று
காலைக் கடல் படிந்து காய் கதிரோன் போய வழி
மாலை மலை மணந்து மண் துயின்ற கங்குலான்
வான் ஆற்றும் மழை தலைஇ மரன் ஆற்றும் மலர் நாற்றம்
தேன் ஆற்றும் மலர் நாற்றம் செறு வெயில் உறு கால
கான் ஆற்றும் கார் நாற்றம் கொம்பு உதிர்த்த கனி நாற்றம்
தான் நாற்றம் கலந்து உடன் தழீஇ வந்து தரூஉம் வையை.

தன் நாற்றம் மீது தடம் பொழில் தான் யாற்று
வெந் நாற்று வேசனை நாற்றம் குதுகுதுப்ப
ஊர்ஊர் பறை ஒலி கொண்டன்று உயர் மதிலில்
நீர் ஊர் அரவத்தால் துயில் உணர்பு எழீஇ
திண் தேர்ப் புரவி வங்கம் பூட்டவும்
வங்கப் பாண்டியில் திண்தேர் ஊரவும்
வயமாப் பண்ணுந மதமாப் பண்ணவும்
கயமாப் பேணிக் கலவாது ஊரவும்
மகளிர் கோதை மைந்தர் புனையவும்
மைந்தர் தண் தார் மகளிர் பெய்யவும்
முந்துறல் விருப்போடு முறை மறந்து அணிந்தவர்
ஆடுவார் பொய்தல் அணி வண்டு இமிர் மணல்
கோடு ஏறு எருத்தத்து இரும் புனலில குறுகி
மாட மறுகின் மருவி மறுகுறக்
கூடல் விழையும் தகைத்து தகை வையை.

புகை வகை தைஇயினார் பூங் கோதை நல்லார்
தகை வகை தைஇயினார் தார்.
வகைவகை தைஇயினார் மாலை மிகமிகச்
சூட்டும் கண்ணியும் மோட்டு வளையமும்
இயல் அணி அணி நிற்ப ஏறி அமர் பரப்பின்
அயல் அயல் அணி நோக்கி ஆங்கு ஆங்கு வருபவர்

இடு வளை ஆரமோடு ஈத்தான உடனாகக்
கெடு வளை பூண்டவள் மேனியில் கண்டு
நொந்து அவள் மாற்றாள் இவள் என நோக்க
தந்த கள்வன் சமழ்ப்பு முகம் காண்மின்

செருச் செய்த வாளி சீற்றத்தவை அன்ன
நேர் இதழ் உண்கணார் நிரை காடாக
ஓடி ஒளித்து ஒய்யப் போவாள் நிலை காண்மின்

என ஆங்கு
ஒய்யப் போவாளை உறழ்ந்தோள அவ் வாணுதல்
வையை மடுத்தால் கடல் எனத் தெய்ய
நெறி மணல் நேடினர் செல்ல சொல் ஏற்று
செறி நிரைப் பெண் வல் உறழ்பு யாது தொடர்பு என்ன
மறலினாள் மாற்றாள் மகள்
வாய் வாளா நின்றாள்
செறிநகை சித்தம் திகைத்து

ஆயத்து ஒருத்தி அவளை அமர் காமம்
மாயப் பொய் கூட்டி மயக்கும் விலைக் கணிகை
பெண்மைப் பொருமைப் பிணையிலி ஐம் புலத்தைத்
துற்றுவ துற்றும் துணை இதழ் வாய்த் தொட்டி
முற்றா நறு நறா மொய் புனல் அட்டிக்
காரிகை நீர் ஏர் வயல் காமக் களி நாஞ்சில்
மூரி தவிர முடுக்கு முது சாடி
மட மதர் உண்கண் கயிறாக வைத்துத்
தட மென் தோள் தொட்டுத் தகைத்து மட விரலால்
இட்டார்க்கு யாழ் ஆர்த்தும் பாணியில் எம் இழையைத்
தொட்டு ஆர்த்தும் இன்பத் துறைப் பொதுவி கெட்டதைப்
பொய்தல் மகளிர் கண் காண இகுத்தந்து, இவ்
வையைத் தொழுவத்துத் தந்து வடித்து இடித்து
மத்திகை மாலையா மோதி அவையத்துத்
தொடர்ந்தேம் எருது தொழில் செய்யாது ஒட
விடும் கடன் வேளாளர்க்கு அன்று படர்ந்து யாம்
தனி மார்பம் தண்டம் தரும் ஆரத்தான் மார்பும்

நின் மார்பும் ஓர் ஒத்த நீர்மைய கொல் என்னாமுன்
தேடினாள் ஏசச் சில மகளிர் மற்று அதற்கு
ஊடினார் வையை அகத்து
சிந்திக்கத் தீரும் பிணியாட் செறேற்க
மைந்து உற்றாய் வெஞ் சொல் மட மயிற் சாயலை
வந்திக்க வார் என மனத் தக்க நோய இது
வேற்றாரை வேற்றர் தொழுதல் இளிவரவு
போற்றாய் காண் அன்னை புரையோய் புரை இன்று
மாற்றாளை மாற்றாள் வரவு.

அ... சொல் நல்லவை நாணாமல்
தந்து முழவின் வருவாய் நீ வாய்வாளா
எந்தை எனக்கு ஈத்த இடு வளை ஆரப் பூண்
வந்த வழி நின்பால் மாயக் களவு அன்றேல்
தந்தானைத் தந்தே தருக்கு
மாலை அணிய விலை தந்தான் மாதர் நின்
கால சிலம்பும் கழற்றுவான் சால
அதிரல் அம் கண்ணி நீ அன்பன் எற்கு அன்பன்
கதுவாய் அவன் கள்வன் கள்வி நான் அல்லேன்

என ஆங்கு
வச்சிய மானே மறலினை மாற்ற உமக்கு
நச்சினார் ஈபவை நாடு அறிய நும்மவே.

சேக்கை இனியார்பால் செல்வான் மனையாளால்
காக்கை கடிந்து ஒழுகல் கூடுமோ கூடா
தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்
இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்
நிகழ்வது அறியாதுநில்லு நீ நல்லாய்,
மகளிரை மைந்துற்று அமர்பு உற்ற மைந்தர்
அகலம் கடிகுவேம் என்பவை யார்க்கானும்
முடி பொருள் அன்று முனியல்
கட வரை நிற்குமோ காமம் கொடி இயலாய்.

என ஆங்கு
இன்ன துணியும் புலவியும் ஏற்பிக்கும்
தென்னவன் வையைச் சிறப்பு

கொடி இயலார் கைபோல் குவிந்த முகை
அரவு உடன்றவைபோல் விரிந்த குலை
குடை விரிந்தவை போலக் கோலும் மலர்
சுனை கழிந்து தூங்குவன நீரின் மலர்
சினை விரிந்து உதிர்ந்த வீப் புதல் விரி போதொடும்
அருவி சொரிந்த திரையின் துரந்து
நெடு மால் சுருங்கை நடு வழிப் போந்து
கடு மா களிறு அணைத்துக் கை விடு நீர் போலும்
நெடு நீர் மலி புனல், நீள் மாடக் கூடல்
கடி மதில் பெய்யும் பொழுது;

நாம் அமர் உடலும் நட்பும் தணப்பும்
காமமும் கள்ளும் கலந்து உடன் பாராட்ட
தாம் அமர் காதலரொடு ஆடப் புணர்வித்தல்
பூ மலி வையைக்கு இயல்பு.

*– நல்லந்துவனார் பரி பா 20*

*சூல் முதிர்ந்த முகில், மலை ஒழுங்கைச் சூழ்ந்து சூழ்ந்து சினம் கொள்ளும் இடியேற்றுக் கூட்டம் ஆரவாரிக்கும்படி கடல் வற்றிப்போக முகந்து கொண்டு வந்த நீரை அம் மலையினது கற்கள் துண்டாகும்படி வீசிப் பெய்து, தன்னுடன் போரிட்டு மாறுபட்ட புலியைக் குத்திப் பிளந்த பொலிவுடைய நெற்றியை உடைய யானையின் கொம்பில் உள்ள குருதியால் மிக்க களங்கத்தை அக் கோடு தெளிவு பெறுமாறு கழுவியது.*

*வையை ஆறு கொண்டலானது காலையல் கடலில் படிந்து அது குறையுமாறு மொண்ட நீருடன், காயும் ஞாயிறு போன வழியே மேற்குத் திக்கிற்குப் போய், மாலை நேரத்தில் மலையை அடைந்து இம் மண்ணுலகத்தில் வாழும் உயிர் இனம் எல்லாம் உறங்கும் இரவுப் பொழுது எல்லாம் தான் உறங்காமல் வழங்கிய மழை பெய்தலால் அந் நீருடன் மரங்கள் தரும் மலரின் மணமும், மலர்கள் தரும் தேனின் மணமும், சினந்து சுடும் வெய்யிலையும் மிகுந்த காற்றையும் உடைய காடுகள் அளிக்கும் வெங்கார் மணமும், மரத்தின் கொம்புகள் உதிர்ந்த கனிகளின் மணமும் ஆகிய இம் மணங்களை ஒருசேரக் கலந்து கொண்டு வந்து பிறர்க்குத் தரும்.*

வையை ஆற்றின் இரண்டு கரைகளிலும் உள்ள பெரிய சோலையின் மணத்துக்கு மேலாக அந்த வையையின் வெம்மையால் தோன்றும்,வெங்கார் மணத்தை நுகர்வித்துக் குதுகுதுப்பான ஊர்கள் தோறும் 'அந்தப் புது நீர் வருகையை மக்களுக்கு உணர்த்துவதற்காகப் பறை ஒலித்தது. மதுரை நகரத்தில் உள்ள மக்கள் அந் நகரத்தின் உயர்ந்த மதிலிடத்தில் உள்ள சுருங்கையில் அந்த வையை ஆற்று நீர் புகுந்து ஓடியது. அப்போது ஏற்பட்ட ஒலியால் உறக்கம் நீங்கி எழுந்தனர். திண்ணிய தேரில் ஏற எண்ணுபவர் அவ் வண்டியில் பூட்டுதற்குரிய எருதுகளைத் தேரில் பூட்டி அதில் ஏறிச் செலுத்தினர். வலிய குதிரைகளை அலங்கரித்தற்குரிய கலனை முதலியவற்றால் யானைகளை ஒப்பனை செய்தனர். சிலர் யானை குதிரை ஆகிய இவற்றை ஒப்பனை செய்யாமல் வறிதே ஏறிச் செலுத்தினர். பெண்டிர் அணிந்து கொள்ளும் இயல் புடைய மாலையை ஆராயாமல் ஆடவர் அணிந்து கொண்டனர். அப்படியே ஆடவர் அணிந்து கொள்வதற்குரிய மாலையைப் பெண்டிர் அணிந்து கொண்டனர். இப்படிப் புதுநீர் வருகையைக் காண்பதற்குத் தாங்கள் முந்திச் செல்ல வேண்டும் என்னும் ஆசையால் ஊரும் மரபும் அணியும் மரபும் மறந்து விட்டனர் மக்கள் எல்லாம்.

விளையாடும் பருவம் உடைய மகளிர் இழைத்த சிற்றில் அழ்கு செய்யும் வண்டுகள் மொய்க்கும் மணலால் ஆன கரையின் பிடரி அளவாக வந்த நீர்ப் பெருக்குப் போய் அணுகியது. முன்பு உரைத்தபடி முறை மறந்து அணிந்து கொண்டு முன்னால் சென்றவர் போக மற்ற மதுரை மக்கள் மாடங்களை யுடைய தெருவில் வந்தனர். போவதற்கு வழி பெறாமல் வருந்தினர்.

இங்ஙனம் அழகிய வையை ஆறு அம் மதுரைவாழ் மக்கள் விரும்பும் இயல்பு உடையதாயிற்று.

பூமாலை மேலும் மணம் பெறுதற்குப் புகை ஊட்டிய வகையால் சூடிய மகளிரும், மலர் மாலைகளை அணிந்து கொள்ளும் தொழிலாலும் அழகு மிகும் வகையால் அணிந்து கொண்ட மைந்தரும், பலவகையான மாலைகளை அணிந்தவரும், உச்சிச் சூட்டும் கண்ணியும், பெரிய வளையமுமாய்

ஆன அணிகளை உடையவருமாகிய கூட்டம் மேலும் மேலும் வந்து மிக்கதாய் விரும்புதற்குக் காரணமான கரைப் பரப்பில் ஏறினர்.

அவ்வாறு வந்து நின்றவருள் சிலர் மற்றவர் அணிந்துள்ள ஆடை அணிகளைப் பார்ப்பதற்கு அவ்வவ் இடங்களில் சுற்றி வந்தனர். அவர்களுள் ஒரு தலைவன் தலைவிக் குரிய வளை யலையும் முத்து மாலையையும் ஒரு பரத்தைக்குத், தன் தலைவி அறியாமல் தந்திருந்தான். அத் தலைவியோடும் அத் தலைவனும் இருக்கும்போதே, அத் தலைமக்களுடன் வந்த தோழியர் காணாமற் போனதாய் எண்ணப்பட்ட தலைவியின் வளையலை அப் பரத்தையிடத்தே கண்டனர். 'இவள் வளை யலை இழந்து வருந்திய தலைவியின் மாற்றாள் போலும்!' என்று அப் பரத்தையைச் சுட்டித் தம்முள் உரையாடினர். அவளைக் கூர்ந்து நோக்கினர். அதைக் கண்ட தலைவன் நாணம் கொண்டான். அதைக் கண்ட தோழியர் மீண்டும் தம்முள் 'இதோ இந்த அணிகலன்களைத் திருடி இவளுக்குக் கொடுத்த கள்வனின் ஒளி மழுங்கிய முகத்தையும் பாருங்கள்! இவை நம் தலைவியின் அணிகலன்களே! ஐயம் இல்லை!" என்றனர்.

மேற்கண்ட வண்ணம் தலைவனின் நிலை பற்றித் தோழியர் பேசிக் கொண்டிருக்கும் போதே, அதனை அறிந்த அப் பரத்தை அம்பு போன்ற கண்களையுற்ற மை பூசப் பெற்ற விழிகளைக் கொண்ட மங்கையர் கூட்டமே தான் மறைந்து கொள்வதற்குரிய காடாகக் கருதிக் கொண்டு, தலைவியரின் தோழியர் தன்னைக் காணாமல் போகுமாறு ஓடி ஒளித்துக் கொண்டு தப்பப் போனாள். அத் தகையவளை மற்றவர்க்குக் காட்டி "அப் பரத்தையின் நிலைமையையும் காணுங்கள்; அவள் அணிந்துள்ள அவ் வளையல் நம் தலைவி உடையதே, இதனாலும் காணுங்கள்!" என்று கூறினர்.

அவ் இடத்தில், வையை ஆறு கடலில் சென்று புகுந்தது போல் செறிந்த அம் மங்கையர் கூட்டத்துடன் புகுந்து போகும் அப் பரத்தையைத், தோழியர் இவ் ஒளியுடைய பரத்தை நம் தலைவிக்கு மாற்றாளே என்று ஐயம் இல்லாமல் தெளிந்தனர். அப் பரத்தையைக் காண்பதற்காக மணற்பரப்பில் கூடியிருந்த

பெண்டிர் கூட்டத்துடன் புகுந்து அவளைத் தேடிச் சென்றனர். மாற்றாளான அப் பரத்தை தன்னைத் தோழியர் தேடித் தொடர்ந்து வருதலை அறிந்து, அத் தோழியருடன் மாறு பட்டுப் பேசத் துணிவு கொண்டாள்; நீங்கள் என்னைத் தொடர்ந்து வருவதற்குரிய காரணம் யாது? என வினவி எதிர்த்தாள். அவ்வாறு அப் பரத்தை எதிர்த்த அளவில் அத் தோழியரைப் பின் தொடர்ந்து சென்ற செறிந்த பற்களை யுடைய தலைவி உள்ளம் திகைத்தாள். எதையும் சொல்ல முடியாமல் வாளா நின்றாள்.

அவ்வாறு அப் பரத்தை எதிர்த்த போது ஒரு தோழி, அப் பரத்தையை "விரும்பும் காம இன்பத்தைப் பெரிய பொய்யுடன் கலந்து அதைக் கொள்ள வரும் காமுகரை மயக்கும் விலைத் தொழிலையுடைய கணிகையே, நின் பெண் இன்பம் பலர்க்கும் பொதுவுடையது. ஆதலால் ஒருவராலும் பேணப்படாதவளே, ஐந்து பொறிகளால் அனுபவிக்கப்படும் ஐந்து புலன்களை மட்டுமே நுகரும் இயல்பு கொண்ட காமப் பன்றிகள் நுகர்தற்குரிய இரண்டு உதடுகளை உடைய தொட்டி போன்றவளே, அழகின் தன்மையுடைய வனப் பாகிய வயலில் முதிராத நறிய கள்ளாகிய் வலிய நீரைப் பாய்ச்சிக் காம நெறியான கலப்பையைக் கட்டி எம் எருது சோம்பிக் கிடக்காமல் உழும் படைச்சாலே!

"மடப்பம் பொருந்திய மதர்த்த மை பூசப்பட்ட கண் களைக் கயிறாகக் கொண்டு தம் பெரிய தோளாக தறியில் கட்டித் தடுத்துக் கொண்ட நிறைய பொருள் தந்தவர்க்குக் காம இன்பத்தை ஊட்டும் போதே எம் வளையலும் ஆரமும் ஆகிய அணிகளையும் அணிந்து கொண்டு அவற்றால் ஆன அழகையும் காமுகர்க்கு ஊட்டும் இன்பம் அளித்தலில் இந்த வையைத் துறையைப் போல் பொதுவானவளே!

"ஏடி! தீய எண்ணம் உடைய எருதைத் தேடிக் கண்டு பிடித்து இந்த விளையாட்டு மகளிர் கண்கள் காணும்படி அதனை வணங்கிக் கொணர்ந்து இந்த வையை ஆறு என்ற கொட்டிலில் புகும்படியாய் விட்டு அடித்து உரப்பி, மாலை யினையே சம்மட்டியாய்க் கொண்டு அடித்து, இந்த வழக்கை உரைத்தற்குரிய அறங்கூறு அவையத்தில் உள்ளவர் எல்லாம்

அஃது எம் எருது என்பதை அறியும்படி செய்ய யாம் நின்னைத் தொடர்ந்து வந்தோம். ஏனென்றால் வேளாளர்க்குத் தம் எருதைத் தொழில் செய்யாது பிறரிடம் போய்த் தொழில் செய்யும்படி ஓடிவிடுவது முறையன்று!

"தனக்குரிய தலைவன் மார்பை நினக்குத் தண்டமாகத் தரும் முத்து மாலையை உடைய எம் தலைவியின் மார்பும் அவளது முத்து மாலையைக் களவினால் கொண்டு அணிந்து கொண்டிருக்கும் நின் மார்பும் ஒத்த தன்மை கொண்டனவோ!" என்று வைது தோழி ஒருத்தி கூறினாள். அவள் அப்படிக் கூறுவதற்கு முன்பு, அத் தோழியால் தேடப்பட்ட அப் பரத்தை அவளது வசையைப் பொறுக்க மாட்டாதவளாய்த் தலைவியைக் குறித்துச் சில வசைச் சொற்களைச் சொன்னாள்.

அப்போது அந்த வையை ஆற்றுக் கரையில் அவர்கள் உரையாடலைக் கேட்டபடி நின்ற முதுமகளிருள் சிலர், பரத்தையை வெறுத்தவராய் அப் பரத்தையை நோக்கி, "ஏடி, கற்புடைமையால் எண்ணிய அளவில் பாவம் நீக்கும் தன்மை கொண்ட குலமகளை இங்ஙனம் சினவாதே! நீ கொடிய சொல்லைச் சொல்லிப் பேதைமை உடையை ஆயினாய். இந்தப் பாவம் நீங்கும் பொருட்டு மடப்பம் உடைய மயில் போல் மென்மை கொண்ட தலைவியை வணங்க வருவாயாக!" என்றாள்.

அவள் தலைவியை 'வணங்க வா' என்றதும் அப் பரத்தை இது என்றைக்கும் நிலைத்துன்பமாய் முடிந்தது எனத் தனக்குள் கூறினாள். பின்னர் அம் முது மகளிருள் ஒருத்தியை நோக்கி, "அன்னையே, பகைவரைப் பகைவர் வணங்குதல் இழிந்த செயலாகும். உயர்ந்தோய், நின் உயர்வுடைமையால் அந்த இழிவை அறியவில்லை! அப்படியே மாற்றாளை மாற்றாள் வணங்குதல் பெருமையற்ற செயலே ஆகும்" என்றாள்.

"அழகிய மோசி மல்லிகை மாலையை அணிந்த மங்கையே, நீ பெரிதும் அன்பு பூண்டவன் என்னிடம் அன்பு கொண்டவள். ஆதலால் இவ் வளையலையும் முத்து மாலையையும் புணர்ச்சிக்கு விலையாய் எனக்குத் தந்தான். அழகுடையவளே, யான் நின் அணிகலன்களைக் களவு கொண்ட

கள்வி அல்லேன். அறிவாய்! இவையே அல்லாமல் நின் காலில் உள்ள சிலம்புகளையும் எனக்குத் தரும் பொருட்டுக் கழற்றும் தன்மை உடையவன். அவனே கள்வன். அவனை நீ பிடிப்பாயாக" என்று அப் பரத்தை உரைத்தாள்.

"ஆடவரை வசியப்படுத்தும் மான் போன்றவளே! நீ எதிர்த்தலைக் கைவிடுவாய். உம்மை விரும்பிய காமுகர் உமக்குத் தந்த பொருள்கள் உலகம் அறிய உமக்கு உரியவே ஆகும்." என்று ஒருத்தி இடையில் புகுந்து பரத்தையைச் சினம் தணியச் செய்தாள்.

"நங்கையே, உலக இயல்பை அறியாமல் அந் நங்கையைச் சினவாதே! பூங்கொடி போன்றவளே, ஆடவரின் காமம் நிற்கக் கூடிய இடத்திலேயே நிற்கக் கூடிய ஒன்றோ? புணர்ச்சி இனிமை மிக்க பரத்தையரிடத்தே செல்லும் இயல்புடைய வன் ஒருவனைச் செல்லாமல் காத்தலும், சென்றான் என்று நீக்கி ஒழுகுவதும் அவனுடைய மனைவியிடம் கூடுவதோ? பண்புடைமை மிக்க மகளிர் தம்மைக் கணவர் இகழ்ந்த போதும் தாம் அவரை ஏத்தி வணங்குவர். தாம் காமத்தால் மயக்கம் அடைந்து பரத்தையரை விரும்பி அவரைச் சேர்ந்த ஆடவரின் மார்பை இனித் தழுவோம் என இருத்தல் குலமகளிர் எவர்க்கும் முடியக் கூடிய செயல் அன்று," என்று அவள் தலைவியைத் தெளிவித்தாள். அங்ஙனம் தெளிவிக்க -

பூங்கொடி போன்ற அழகையுடைய மகளிரின் குவிந்த கை போலக் குவிந்த காந்தள் அரும்புகளும், பாம்பு சினந்து படம் விரிந்தாற் போல் இதழ் விரிந்த காந்தள் மலரும், குடை விரிந்தாற்போல் விரிந்த காந்தாள் மலரால் சூழப்பட்ட சுனைகளினின்றும் கழிந்து கீழே விழுவனவாய நீர்ப் பூக்களும், மரக் கொம்புகளில் மலர்ந்த உதிர்ந்த பூக்களும், புதர்களில் மலர்ந்த மலர்களும் ஆகிய மலையினின்றும் வீழும் அருவி கொணர்ந்து தன்னிடம் சொரிந்த மலர்களை வையை ஆறு தன் அலைகளால் தள்ளிக் கொண்டு நீண்ட மாடங்களை யுடைய மதுரைக்குக் காப்பாய் அமைந்த மதிலில் உள்ள நெடிய பெரிய சுருங்கையூடே (குழாயிடத்தே) வந்து மிக்க நீரைச் சொரியும் போது அந்த நீர் கடிய விலங்காகிய யானை தன் கையை உயரத் தூக்கிக் கீழே விடும் நீரை ஒத்து விளங்கியது.

*ஊடலும் கூடலும் தலைவியின் அச்சம் தங்குவதற்கு இடமான பிரிவும் ஆகிய இவற்றைக் காமத்தையும் கள்ளையும் யாவரும் பாராட்டும்படி தாம் விரும்பின காதலரோடு அன்பால் நீராடும்படி முன்பு பிரிந்தவரைக் கூட்டுதல், மலர்கள் மிக்க இந்த வையை யாற்றுக்கு இயல்பாகும்.*

### உவமையற்ற வையை

மா நிலம் தோன்றாமை மலி பெயல் தலைஇ
ஏம நீர் எழில் வானம் இகுத்தரும் பொழுதினான்
நாக நீள் மணி வரை நறு மலர் பல விரைஇ
காமரு வையை சுடுகின்றே கூடல்.

நீர் அணி கொண்டன்று வையை என விரும்பி
தார் அணி உவகை தலைக்கூடி
ஊர் அணி கோலம் ஒருவர் ஒருவரின்
சேர் அணி கொண்டு நிறம் ஒன்று வெவ்வேறு
நீர் அணி கொண்ட நிறை அணி அங்காடி
ஏர் அணி கொண்டார் இயல்.

கை புனை தாரினர் கண்ணியர்
ஐ எனும் ஆவியர் ஆடையர்
நெய் அணி கூந்ததர் பித்தையர்
மெய் அணி யானை மிசையராய் ஒய்யெனத்
தங்காச் சிறப்பின் தளிர் இயலார் செல்லப்
பொங்கு புரவிப்படைப் போவோரும் பொங்கு சீர்
வையமும் தேரும் அமைப்போரும் எவ் வாயும்
பொய்யாம் போய் என்னாப் புடை கூட்டிப் போவநர்
மெய்யாப்பு மெய் ஆர மூடுவார் வையத்துக்கு
கூடுவார் ஊடல் ஒழிப்பார் உணர்குவார்
ஆடுவார் பாடுவார் ஆர்ப்பார் நகுவார் நக்கு
ஓடுவார் ஓடித் தளர்வார் போய் உற்றவரைத்
தேடுவார் ஊர்க்குத் திரிவார் இலராகிக்
கற்றாரும் கல்லாதவரும் கயவரும்
பெற்றாரும் பெற்றான் பிழையாத பெண்டிரும்
பொற்றேரான் தானும் பொலம் புரிசைக் கூடலும்
முற்றின்று வையைத் துறை.

துறை ஆடும் காதலர் தோள் புணையாக
மறை ஆடுவாரை அறியார் மயங்கிப்
பிறை ஏர் நுதலியர் எல்லாரும் தம் முன்
நிகழும் நிகழ்ச்சி எம்பால் என்று, ஆங்கே
இகல் பல செல்வம் விளைத்தவட் கண்டு இப்பால்
அகல் அல்கும் வையைத் துறை.

காதலான் மார்பின் கமழ் தார் புனல் வாங்கி
ஏதிலாள் கூந்தலிடைக் கண்டு மற்று அது
தா தா என்றாளுக்குத் தானே புறன் தந்து
வேய்தந்தது என்னை விளைந்தமை மற்று அது
நோதலே செய்யேன் நுணங்கு இழையாய் இச் செவ்வி
போதல் உண்டாம்கொல் அறிந்து புனல் புணர்த்தது
ஓஒ பெரிதும் வியப்பு.

கயத் தக்க பூப் பெய்த காமக் கிழமை
நயத் தகு நல்லாளைக் கூடுமா கூடும்
முயக்குக்குச் செவ்வி முலையும் முயக்கத்து
நீரும் அவட்குத் துணை கண்ணின் நீர் விட்டோய்
நீயும் அவட்குத் துணை.

பணிவு இல் உயர் சிறப்பின் பஞ்சவன் கூடல்
மணி எழில் மா மேனி முத்த முறுவல்
அணி பவளச் செவ் வாய் அறம் காவல் பெண்டிர்
மணி அணிந்த தம் உரிமை மைந்தரோடு ஆடித்
தணிவின்று, வையைப் புனல்.

புனலூடு போவது ஓர் பூ மாலை கொண்டை
எனலூழ் வகை எய்திற்று என்று ஏற்றுக்கொண்ட
புனலூடு நாடு அறியப் பூ மாலை அப்பி
நினைவாரை நெஞ்சு இடுக்கண் செய்யும் கனல்புடன்
கூடாமுன் ஊடல் கொடிய திறம் கூடினால்
ஊடாளோ ஊர்த்து அலர் வந்து ஊர்ந்து

என ஆங்கு
ஈப் பாய் அடு நறாக் கொண்டது இவ் யாறு எனப்
வார்ப்பார் ஒழிந்தார் படிவு.

மைந்தர் மகளிர் மண விரை தூவிற்று என்று
அந்தணர் தோயலர் ஆறு

வையை தேம் மேவ வழுவழுப்பு உற்றென
ஐயர் வாய்பூசுறார் ஆறு

விரைபு இரை விரை துறை கரை அழிபு இழிபு
ஊர ஊர்தரும் புனல்
கரையொடு கடலிடை வரையொடு கடலிடை
நிரைநிரை நீர் தரு நுரை
நுரையுடன் மதகுதொறு இழிதரு புனல்
கரை புரளிய செலும்மறி கடல்
புகும் அளவுஅளவு இயல் இசை சிறை தணிவின்று
வெள்ள மிகை.

வரை பல புரை உயர் களிறு அணி பயில் தொழில்
மணி அணி யானைமிசை மைந்தரும் மடவாரும்,
நிரைநிரை குழீஇயினர் உடன் சென்று
குரு மணி யானை இயல் தேர்ப் பொருநன்
திருமருத முன்துறை முற்றம் குறுகித்
தெரி மருதம் பாடுப பிணி கொள் யாழ்ப் பாணர்
பாடிப் பாடிப் பாய்புனல்
ஆடி ஆடி அருளியவர்,

ஊடி ஊடி உணர்த்தப் புகன்று
கூடி கூடி மகிழ்பு மகிழ்பு
தேடித் தேடித் சிதைபு சிதைபு
சூடிச் சூடிச் தொழுது தொழுது
மழுபொடு நின்ற மலி புனல் வையை
விழு தகை நல்லாரும் மைந்தரும் ஆடி
இமிழ்வது போன்றது இந் நீர்குணக்குச் சான்றீர்
முழுவதும் மிச்சிலா உண்டு.

சாந்தும் கமழ் தாரும் கோதையும் சுண்ணமும்
கூந்தலும் பித்தையும் சோர்ந்தன பூவினும் அல்லால்
சிறிதானும் நீர் நிறம்
தான் தோன்றாது இவ் வையை ஆறு

மழை நீர் அறு குளத்து வாய்பூசி ஆடும்
கழு நீர மஞ்சனக் குங்குமக் கலங்கல்
வழி நீர்; விழு நீர அன்று வையை.

வெரு வரு கொல் யானை வீங்கு தோள் மாறன்
உரு கெழு கூடலவரொடு வையை
வரு புனல் ஆடிய தன்மை பொருவுங்கால்
இரு முந்நீர் வையம் படித்து என்னை யான் ஊர்க்கு
ஒரு நிலையும் ஆற்ற இயையா அரு மரபின்
அந்தர வான் யாற்று ஆயிரம் கண்ணினான்
இந்திரன் ஆடும் தகைத்து

– *இளம்பூரணர் மேற்கோள் பரி பா 2*

*அழகான முகில் மிக்க மழையைப் பெய்தது. அதனால் இம் மாநிலம் தோன்றாதபடி மறைந்தது. உலகத்துக்குப் பாது காவலான நீரை முகில் வீழ்த்தியபோது, கண்டார்க்கு விருப்பம் உண்டாதற்குக் காரணமான வையை யாற்றில் பெருகியது வெள்ளம். நாகம் முதலிய மரங்கள் ஓங்கி வளர்ந்த மணி களுக்குப் பிறப்பிடமான சைய மலையில் அந்த மரம் முதலி யவை உதிர்த்த பல்வேறு நறிய மலர்களின் மணங்களையும் ஏற்று மணம் கமழ்ந்து நான்மாடக் கூடல் என்ற பெயரை யுடைய மதுரைக்கு வெள்ளம் விரைந்து வந்தது.*

*வையை ஆறு புதிய நீர் வருகையால் பொலிவுடைய தாயிற்று என்று சிலர் கூறினர். அதைக் கேட்ட அம் மதுரை யில் உள்ள மக்கள் எல்லாம் அப் புதிய நீரில் ஆட விரும்பினர். தூசிப் படையின் தன்மையை மேற்கொண்ட ஒரு செயலைப் போல விளங்கியது. ஒவ்வொருவரும் தம் தம் இயல்புக்கு ஏற்றபடி ஒப்பனைகளைச் செய்தனர். நல்ல நிறம் பொருந்திய பல்வேறு வகைப் பட்ட நீராடுவதற்குரிய நெட்டி முதலியவற்றால் செய்த அழகுப் பொருள்கள் கொண்ட நீர் அங்காடியில் போய்த் தம் இயற்கை அழகை அங்குள்ள பொருள்களால் அழகு செய்து கொள்ளலாயினர்.*

*தொழில் திறம் விளங்கத் தொடுத்த மாலையுடையவ ராய், தலையில் சூடும் மாலையுடையவராய், அனுபவித்தவர் வியக்கத்தக்க நுண்ணிய ஆடையை அணிந்தவராய், கூந்தலி*

லும் பித்தையிலும் மண நெய் பூசிக் கொண்டவராய் மக்கள் சென்றனர். அவர்களுள் தாழாத பெண்மை நலத்தையும் மாந்தளிர் போன்ற நிற அழகையுமுடைய மகளிர் நிமிர்ந்த செலவையுடைய குதிரைகளை ஊர்ந்து சென்றனர். அக் குதிரைகளின் பக்கத்தில் உடல் அலங்கரிக்கப்பட்ட யானை களில் ஏறி ஆடவர் சென்றனர். மிக்க அழகுடைய வண்டி களிலும் தேர்களிலும் ஏறிச் சென்றனர் சிலர், மற்றும் சிலர் யாம் எவ்விடத்தும் பிரிந்து போய் ஒருவருக்கொருவர் காணப் படாதவர் ஆகக்கூடாது என்று தம் சுற்றத்தவரை உடன் சேர வாருங்கள் என்று தம்பக்கத்தில் கூட்டி அழைத்துச் சென்றனர்.

உடலுக்குப் பொருந்தச் சிலர் மெய்ப்பை அணிந்து செல்வர். வண்டியில் ஏறிச் செல்பவருள் சில மங்கையர் தம் கணவனோடு பிணங்குவர். அத் தலைவர் பணிமொழி பல கூறி அவருடைய ஊடலை அகற்றுவர். அப்படி ஊடல் தீர்ந் துழி அம் மங்கயைர் ஊடல் தீர்ந்து அவரோடு அளவாளவி மகிழ்ச்சி அடைவர். சிலர் கூத்தாடுவர். சிலர் பாடுவர். சிலர் ஆரவாரம் செய்வர். சிலர் வாய் விட்டு நகைப்பர். சிலர் சிரித்துக் கொண்டே ஓடுவர். சிலர் ஓடியதால் இளைப்பர். சிலர் தமக்குரிய உறவினரை அங்கும் இங்கும் போய்த் தேடுவர். இப்படி வையை நோக்கித் திரும்பிப் போவார் எவரும் இலர் கற்றோரும் கல்லாதவரும் கயமாக்களும் மக்களைப் பெற்ற வரும் கணவர் சொல் கடவாத கற்புடைய பெண்டிரும் இவர்களுக்கெல்லாம் வேந்தனான பொன்னால் ஆன தேரையுடைய பாண்டியனும் பொன் மதிலையுடைய மதுரை மக்களும் ஆகிய கூட்டம் வையைத் துறையைப் போய்ச் சேர்ந்தது.

வையை நீர் பிறைத் திங்களைப் போன்ற நெற்றியை யுடைய எல்லா மங்கையர் முன்பும் தம் காதலரின் தோள் களையே தெப்பமாகக் கொண்டு மறைவாக நீராடும் பரத்தை யரை அறியாதபடி மயக்கியது. இத்தகைய நீர் விளை யாடல்களை.....

அவ் இடத்தில் நிகழக் கண்டு இவ் இடத்தே தலைவி யுடன் நீராடாது வாளா கிடக்கும். ஒரு தலைவன் காதற்

பரத்தையுடன் நீரில் விளையாடினான். அப்போது அங்கு ஓர் இற் பரத்தை வந்தாள். அவளுக்குத் தன் மாலையை அளிக்க எண்ணித் தன் மார்பின் மாலையை ஓடும் நீரில் அத் தலைவன் விட்டான். அம் மாலையை அந்த இற் பரத்தை நீரினின்று எடுத்துத் தன் கூந்தலிலே அணிந்து கொண்டாள். அதைக் காதற் பரத்தை பார்த்து விட்டு விரைவாக அவளை அடைந்தாள். "ஏடி! அம் மாலையை என்னிடம் கொடு கொடு!" என்று கேட்டாள். அங்ஙனம் கேட்ட காதற் பரத்தையை நோக்கி இற்பரத்தை, "ஏடி, இம் மாலை உன்னுடையதன்று. புதிய நீர் எங்கிருந்தோ கொணர்ந்து என் கூந்தலில் சேர்த்தது" என்றாள். அதைக் கேட்ட காதற் பரத்தை, 'என்ன இது! என்ன இது!' எனத் தனக்குள் சொல்லிப் பின் அவளை நோக்கி, "நுட்பமான தொழில் அமைந்த அணிகலன்களை உடைய பெண்ணே! அஃது அப்படி நிகழ்ந்தது பற்றி நான் வருந்தவில்லை! என்றாலும் இந்தப் புதிய நீர்தான் இப்போது நீ இங்கு உள்ளாய் என்பதை அறிந்து, இம் மாலையை நின்னிடம் கொணர்ந்து சேர்த்த செயல், ஓ! ஓ! மிகவும் வியப்புக்குரிய செயல்! அதை எண்ணியே வியப்படைகின்றேன்!" என்றாள்.

"ஐயனே! நீரிலே இடப்பட்ட மென்மையான மலர் மாலை அயலார் இடத்தே சேராமல் காம நுகர்ச்சிக்குரிய விரும்பத் தக்க அழகியைக் குறிக்கொண்டு போய்ச் சேரும்படி நிகழ்ந்தது. இவ்வாறு நிகழ்ந்ததற்கு அவளுடைய நல்ல கொங்கைகளும் அவளால் நீராடப்பட்ட இந்தப் புதிய நீரும் அவளுக்குத் துணைக் காரணங்கள் ஆயின. ஏடா! இவை போக, நேரமும் இடத்தையும் அறிந்து மாலையை ஆற்றிலே விட்டவனே! அவள் அப் பூ மாலையை அணிந்து கொண்ட செய்கைக்கு நீயும் ஒரு காரணம்!" என்று சொல்லி அவனுடன் ஊடல் கொண்டாள்.

மற்ற மன்னர் தன்னை வணங்குதல் அன்றித் தான் ஒருவரையும் வணங்காத சிறப்பைப் பெற்ற பாண்டியனின் மதுரையில் வாழும் மணி போன்ற அழகையும், மாந்தளிர் போன்ற நிறத்தையும், முத்தைப் போன்ற பற்களையும், சிவந்த வாயையும் கற்புடைமையைக் காக்கும் காவலையும் உடைய

குலமங்கையர் மணிகளால் ஆன அணிகலன்களைத் தமக்கு அணிந்த உரிமையுடைய தம் தம் கணவன்மாருடன் நீராட வையை நீர் வடியாமல் விளங்கியது.

புதிய நீரில் சென்ற மலர் மாலையை நீ கொணர்ந்து முறைமையால் எம் கூந்தலை வந்து அடைந்தது எனச் சொல்லி அப் பூ மாலையை உலகம் அறியும்படி தம் கூந்தலில் சூடிக் கொண்டாள். இவ்வாறு ஊரவர் கூறுவர் இச் செய்தியை நினைக்கும் அளவிலே நினைப்பவர் நெஞ்சுக்கத் துன்பம் தரும் ஊடலுக்கு காரணமான இக் கொடுந்தன்மை தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் வந்து சேர்வதற்கு முன்பே, ஊரில் உள்ள அலர், மொழி வாயிலாக வந்து பரவியது. தலைவியின் செவியை இது கூடுமானால் சினந்து ஊடல் கொள்ள மாட்டாளோ? ஊடுவாள். இப்படிக் கூறும்படி புனலாட்டு நிகழ்ந்தது. நிகழ, பார்ப்பார், வையை நீர் ஈக்கள் மொய்ப்பதற்குக் காரணமான கள்ளைத் தன்னிடம் கொண்டிருப்பதால் தூய்மை இழந்து விட்டது என எண்ணி அந் நீரில் ஆடுவதை விட்டனர். பார்ப்பார் இவ் வையை நீரில் ஆடிய ஆடவர் மகளிர் அணிந்திருந்த நறுமணப் பொருள்கள் கலக்கப் பெற்றுத் தூய்மை அற்றதாகி விட்டது. எனக் கருதிக் குளிப்பதை நீங்கினர். பார்ப்பார் இவ் வையை நீர் தேன் கலக்கப் பெற்று வழுவழுப்புக் கொண்டதாயிற்று என எண்ணி அந் நீரில் வாய் அலம்பலையும் கைவிட்டனர்.

வையை ஆற்றுநீர் விரைந்து ஆரவாரித்துத் துறையும் அழியும்படி வந்தது. அந் நீர் வரிசை வரிசையாக நுரைகளைச் சுமந்து கொண்டு வரும். நுரையுடன் மதகுகள் தோறும் புகுந்து போகும் அந்த நீர். மேலும் அங்கங்குக் கரை புரளும்படி உடைத்தும் செல்லும். இங்ஙனம் அந்த நீர் அலை புரளும் கடலில் புகும் அளவு மேலும் மேலும் வந்த புகுவதால் அவ் வெள்ளம் கரைக்கு அடங்கும்படித் தணியவில்லை.

ஆடவரும் மகளிரும் மலை போல் உயர்ந்த புரசைக் கயிற்றை இட்டு அணி செய்யப்பட்ட தம் தொழிலை நன்கு பயின்ற மணிகளையுடைய பல யானைகளின் மேல் ஏறி ஊர்ந்து வரிசை வரிசையாய் வந்து சேர்ந்தனர். நிறம் மிக்க

மணிகளால் அலங்கரிக்கப்பட்ட யானைகளையும் ஓட்டம் அமைந்த தேரினையும் போர் வன்மையையும் உடைய பாண்டிய மன்னனின் வையை ஆற்றில் உள்ள திருமருத முன் துறை என்ற பெயர் கொண்ட நீராடும் துறையில், கேட்டாரைக் கவர்ந்து கொள்ளும் தன்மை கொண்ட யாழையுடைய பாணர்கள் மருதப் பண்ணினைப் பாடு வாராக! அப் பாட்டை மக்கள் தாமும் பாடிப் பாடிப் பாய்ந் தோடும் நீரில் ஆடி ஆடி மகிழ்வாராக.

தங்களுக்கு அருள் செய்யும் தத்தம் கணவருடன் மகளிர் ஊடினர். ஊடவும், கணவர் பணிந்த சொற்களைச் சொல்லி அவ் ஊடலை அகற்றினர். மங்கையர் ஊடல் நீங்கியபோது கணவரை விரும்பிக் கூடினர்; மகிழ்ந்தனர். சிலர் தம் காதலரைத் தேடினர். அவரைக் காணப் பெறாமல் உள்ளம் குலைந்தனர். வையை ஆற்றைத் தொழுது சிலர் வாழ்த்தினர்.

இங்ஙனம் சிறந்த அழகையுடைய வையையில் உள்ள இந்தப் புதிய நீர், குணத்தினால் பெரியவரே, முழுவதும் எச்சிலாக ஆகும்படி பருகி உமிழ்ந்தது போல் விளங்குகிறது. இதைக் காணுங்கள் எனச் சிலர் கூறினர்.

அவ்வாறு நீராடிய மகளிரும் ஆடவரும் அணிந்திருந்த மணம் கமழும் தாரும் கோதையும் நறுமணப் பொருள்களும் மங்கையர் கூந்தலிடத்தினின்றும் ஆடவரின் பித்தையிடத்தி னின்றும் நழுவி வீழ்ந்தனவாகிய மலரும் ஆகிய இவற்றால் ஆன நிறம் தோன்றுதல் அல்லது இந்த வையைப் பேரியாறு தன் நீரின் உண்மைநிறம் எங்கும் ஒரு சிறிதேனும் தோன்று மாறு விளங்கவில்லை.

இந்த வையையாறு மழை நீர் பெறாது வற்றிக் கிடக்கும் குளத்தில் ஊர் மக்களால் வாய் பூசப்பட்டும் ஆடப்பட்டும் கிடக்கும். கழுவப்படும் தன்மையுடைய மஞ்சனப் பொருள் களும் குங்குமக்குழம்பு முதலியனவும் கலந்து கலங்கலாய் வழிந்த நீர் போன்று நீர் உடையதன்றி சிறந்த நல்ல நீரை யுடையதன்று.

பகைக்கு அச்சத்தை உண்டாக்குதற்குக் காரணமான கொல்லும் தொழிலையுடைய யானையையும் பருத்த தோளையுமுடைய பாண்டியன் அழகுடைய தன் மதுரையில் உள்ள மக்களுடன் வையையாற்றில் வரும் புது நீரில் ஆடிய தன்மைக்கு உவமையைச் சொல்லுமிடத்து பெருங்கடலால் சூழப்பட்ட இவ் உலகத்தில் உவமையைத் தேடினால் என்ன பயன்? இவ் உலகத்தில் ஒன்றும் உவமையாகாது. யானை மீது வரும் இந்திரன் ஊரில் வாழும் தேவர்கள் புடைசூழ வானில் உள்ள வான் கங்கையில் நீராடிய தன்மை யுடையது.

